# கீதா சாரத் தாலாட்டு

## லகு சந்திரிகை உரை.





ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்,

வேதாந்த மடம், திருப் பூவணம்.

காப்பி ரைட்] 1951. [விலை ரூபா. இரண்டு.

## பிழை திருத்தம்.

---

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| 8 | 27 | செறியம் | செறியும் |
| 27 | 2 | 4-து | 4-வது |
| 32 | 2 | என்றபடி) | என்றபடி), |
| 57 | 20 | மெய் யிற்று | மெய் யீற்று |
| 84 | 13 | றகிலம் | றகிலம் |
| 96 | 24 | சிவயா | சிவபா |
| 119 | 10 | ஆம், | ஆம் |
| 131 | 15 | நிச்சயிக்கப்பட்டது. | நிச்சயிக்கப்படாதது. இறந்த கால எதிர் காலங்களில் பிரத்தி யக்ஷப் பிரமாணத்தினு லும், |
| 153 | 7 | பரிச்சிந்த | பரிச்சித்து |
| லகு சந்திரிகை விஷய அநுக்கிர மணிகையில் | | | |
| 2 | 26 | வாச்சியபம் | வாச்சியம் |

---



உ

சிவமயம்.

ஓம் தத் ஸத் பரப்ரஹ்மணே நம:

திரு வாமாத் தூர்

ஸ்ரீ திரு வேங்கட நாதர் அவர்கள் இயற்றிய

# கீதா சாரத் தாலாட்டு மூலமும்,

கோவி லூர் மடம், திருக் களர்,

ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிக ளவர்கள் மாணுக்கரும்,

உபய பாஷா வேதாந்த பிரவர்த்தகாசாரியரும்,

பர சமய கோளரியாரும், மண்டலேசுவரரும்,

திரி பாஷா பண்டித மணியும், (மும் மொழிப் புலமை ரத்நமும்),

சத சாஸ்திர கர்த்தரும், (நூறு நூல் இயற்றியவரும்,)

திருப் பூ வணம் மடம் ஸ்தாபகரும் ஆகிய,

ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள் அவர்கள்

இயற்றிய

## லகு சந்திரிகை என்னும் உரையும்.

இவை

மதுரை, ராஜேசுவரி பிரசில்,

பதிப்பிக்கப்பட்டன.



 1951. [விலை ரூபா இரண்டு.



## கீதா சாரத் தாலாட்டு கவி 106-க்கு முதல் நினைப்பு.

→→→ ★ ←←←

பன் னிரு சீர்க் கழி நெடி லடி யாசிரிய விருத்தம்.

1. ஆடிஐ மாதைசீர் திருசெஞ்ச சுற்றகல் அணிநீயும் ஈங்இத்தரை —
அங்கமெய் தேகதே கங்காய படர்வெய்ய அநுமற்று அறிதேகம,
சேடிஇரு சொன்னசே தநபூத இந்தமந திகழ்அம்ம அந்தவெய்ய —
சித்தாவல் விருஉற்ற அடுசுத்த படிஅநா தியாபந்த தேகாஅபி,
சாடிமற அந்தஅஞ் ஞாஇரவி அந்தவே தாபற்றப ரோபகர்ந்த —
தான்கேள்வி ஆதிளப் போதேடி வந்தஉடல் தநுவைவிள நெடுஅந்தகா,
மேடிகரு குத்துவெட் ட(டுஅ)ஞ்ஞாந இருள்இந்தி மித்தைஅயல் மநமகநவு —
மெய்யாக முன்புகண் தெரிகன்ம வினைவெட்ட விழுமெழபத் தோடோன்றே.

2. காந்துசென் மம்பிரமம் என்றும்வ கம்பல கடஆதி பந்தபாமே —
கம்சிவ ஏகம்பி சிவபே தம்பேத கானல்அறி வாசொப்பநம்,
சிந்துகற் பனைதுரிய சிறந்தசத் இருக்கைஅறி முந்திஇனி யமுமநலாபம் —
சிவன்வரு பார்ப்பசி வீடுபற் றிடுகூறு ததியூடு அருச்ஆயர்,
போந்துபர மமுங்வர் ஆதிமூ லம்மிவை ழப்பத்தைந் துஞ்சோழன் —
புகலேழபத் தோன்றேடு மோத்தம்நூற் றுறுக வியினித்த லைப்பினுலே,
சாந்தழுறு சித்தமுடன் ஆதிமூ லம்விசயற் கோதியருண் மறைப்பொருகடாம் —
சார்கீதை யின்சார மாமிதனை மறவாமல் மநநிப்போர் ஞாநியாவர்.

முதல் நினைப்பு முற்றுப் பெற்றது.

8

உ

சிவமயம்.

# அணிந் துரை.

முந் நீரை வரம்பாகக் கொண்ட இந் நில வுலகத்தில், மா நுட
களால் அடையத் தக்கது புருஷார்த்த மாம். அது, தர்ம
அர்த்த, காம, மோக்ஷம் என்றும், கர்மம், பக்தி, ஞாநம் என்றும்
சொல்லப்படும். அந்தக் கர்மம் பக்தி ஞாநத்தினை விளக்குதற்கு
சர்வ லோக நாதனும், மறை நெறி வழாத விரத சீலர்கள
பாண்டவர் சகாயனும், சர்வஞ்ஞனும் ஆன ஸ்ரீ கிருஷ்ண
பரமாத்மா, வில்வலன் ஆன காண்டீபனுக்கும், அவனுக்கு
பிற்பட்ட உலகினர் யாவர்க்கும் நன்மையும், மோக்ஷமும், உண்ட
மாறு கருதித் திரு வாய் மலர்ந்தருளியது மூன்று ஷட்கங்களை
யுடைய **700** சுலோகத்தோடு கூடிய பகவற் கீதை என்னு
பாவநம் ஆன நூ லாம். அந் நூல் மிக்க கெம்பீரம் உடைய தாய்
சிவ மாநுஷ லீலா விக்கிரக மாக அவதரித்த ஸ்ரீ சங்கராச்சாரி
ஸ்வாமிகள் முதலிய பல மஹான்களால் இயற்றப் பெற்ற ப
பாஷ்யங்களை உடைய தாய், எண் ணிறந்த மகான்களால் எல்
யற்ற வியாக்கியாநங்கள் இயற்றப் பெற்ற தாய், உலகம் உள் ள
வும் அழியாப் பொரு ளாக விளங்கிக் கொண்டிருக்கின்றது. அ
பால லீலா கிருஷ்ண பரமாத்மா போன்று, புத்தி கௌசல்ய
உடையாருக்கே உரிய தாம்.

அந்தப் பகவற் கீதையின்கண் உள்ள சாரம் ஆன ஞா
அர்த்தத்தினை மாத்திரம், மந்த மதியினரும் உணர்ந்து மோக்ஷ
அடைய வேண்டும் என்னும் அவா மேலீட்டால், திரு வாமாத் து
எனப் பெய ரிய ஊரில் எழுந்தருளி யிருந்த திரு வேங்கட நாத
என்னும் வித்வத் தவ சிரேஷ்டர், பால கிருஷ்ணனைத் தொட்
வில் இட்டுத் தாலாட்டுவது போன்று, தாலாட்டுப் பிரபந்த மா
**104** செய்யுட்களால் இயற்றிப், பகவற் கீதா சாரத் தாலாட்
என்னும் பெயரை, முதற் குறை யாக்கிக், "கீதா சாரத் தாலாட்டு
எனப் பெயர் ஈந்து தம் மகவினிடம் கொடுத்தனர்.

இக் "கீதா சாரத் தாலாட்டு" என்னும் நூல், ஞா
அர்த்தங்கள் பலவற்றையும் ஒருங்கே திரட்டி, அர்ஜுநன் சங்
யும், கிருஷ்ண பரமாத்மா சமாதாநமும், கூறும் வாயி லாக ஆ
பிக்கப்படுகின்றது. ஆத்ம அநாத்ம பதார்த்தங்களின் இயல்புகளை
பிரயாசம் இன்றி இனிது அறியு மாறு செய்வது. இது, ஏக ஜீ



வாதத்தை யுட்கொண்டு பந்த மோக்ஷங்களின் இயல்பு பற்றியும், நாநா ஜீவ வாதத்தினர்க்கு, ஆத்மா ஏகம்; ஆனால், ஒரு சிலர் முக்தர்க ளாயும், ஒரு சிலர் பெத்தர்க ளாயும் இருப்பது எங்ஙனம் பொருந்தும் என்பது பற்றியும், ஜடம் ஆன தேகம் எவ் வாறு கர்மத்தைச் செய்யும், அக் கர்ம பலனை எவ் வாறு அநுபவிக்கும் என்பது பற்றியும், எழுவனவும் பிறவும் ஆன பல சங்கைகள் குறித்து, மிக்க ஆழ்ந்த கருத்துடையன வாகிய பல சமாதாநங் களைத் தெளி வாகக் கூறுகின்றது. வாசநா வசத்தால் மாநங் காரண மாக உண்டாம் சோகம் மோகங்களையும், அவை காரண மாக உண்டாம் துன்பங்களையும், போக்குதற் குரிய நல்ல விவேகத் தினை எளிதில் உண்டுபண்ணுவது. புத்திக் கூர்மை யின்றியவர் களும் ஆத்ம தத்துவத்தினை உணரும் ஆறு முன்னிலைப் படுத்திக் கூறுவது.

இவ் வித அருமை வாய்ந்த நூலுக்கு ஓர் உரை வேண்டும் என்று பல சாதுக்கள் விரும்பிக் கேட்டுக் கொண்டபடியால் **1910**-வது வருஷத்தில் "லகு சந்திரிகை" எனப் பெயர் ஈந்து இவ் வுரை எழுதி முடித்தனம்.

இந் நூலுக்கு, திரு வாரூர் - மடப் புரம் - ஸ்ரீ தெக்ஷிணா மூர்த்தி ஸ்வாமிகள் மடாதிபதி, மதுரை, கோ. சித. சிவாநந்த ஸ்வாமிகள் அவர்கள் ஓர் உரையும், தஞ்சை மா நகரம் - வெ - குப்புஸாமி ராஜு அவர்கள் மாணுக்கர், இராம சாமி ஐயா அவர்கள் ஓர் உரையும் இயற்றி யிருக்கின்றார்கள். அவ் வுரைக ளோடு இவ் வுரையையும், ஒப்பிட்டு நோக்குவார்க்கு, உரைகளில் உள்ள நன்மை தீமைகள் நன்கு புல னாம்.

உரை எழுதி நாற்பது வருஷம் ஆகியும் பல இடையூறுகளால் இது வரை அச்சு வாஹநம் ஏறா திருந்த அது, இப் போது திருக் களர் ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளின் திரு வருட் பிரசாதத்தினால், அவ் இடையூறுகள் நீங்கினமையின் அச்சிடப்பட்டு முற்றுப் பெற்றிருக்கின்றது.

சிதம்பரம் - கோ. சித. மடம், சித. நீல கண்ட சுவாமிகள், இதனைப் பரிசோதித்து, முக வுரை தந்தமை என்றும் நினைவி லிருக்குந் தக வுள தாம்.

திருப் பூ வணம்,

**காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள்**

ஸ்ரீ

சிவமயம்.

# கீதா சாரத் தாலாட்டு உதாரணக் கவி.

---

| பாட்டு எண். | பாட்டு. | உதாரண நூல். | | பாட்டு. | பக்கம் |
|---|---|---|---|---|---|
| | ஐ வகை | திருக் குறள் 1. | | அகர முதல | 8 |
| | | விசார சாகரம் | | நித்த மாய் | ,, |
| | | நாநா ஜீவ வாதக் கட்டளை | | ஆனைமுக | 9 |
| | | பகவத் கீதை | | ஐவகை | ,, |
| | | வேதாந்த சூடாமணி | | தருணமா | ,, |
| | | கைவல்ய நவநீதம் | | பொன்னில | ,, |
| | | ,, | | ஈன்றளித் | ,, |
| | | மகா ராஜத் துறவு | | அமரர்கள் | 10 |
| | | ,, | | பந்தத்தினை | ,, |
| | | வைராக்ய தீபம் | | திருவளர் | ,, |
| | | நன்னூல் | | முன்னோர் | ,, |
| 1 | சீராரு | நன்னூல் | | ஒழி பிசை | 13 |
| 2 | திருத் | பகவற் கீதை | 2 | மன்னருள் | 15 |
| 3 | செஞ்சமரில் | பகவற் கீதை | 2-1 | இவ்வண்ண | 18 |
| | ,, | ,, | 2-2 | ஆயாதவர்க்கு | ,, |
| | ,, | ,, | 2-3 | ஒவ்வாதீ | ,, |
| 4 | சுற்ற மறிற் | ,, | 2-10 | अशोच्यान् | 21 |
| | | | 2-12 | அன்னவர்கள் | ,, |
| | ,, | ,, | 2-13 | மாயுமவ | ,, |
| 6 | நீயுநா | ,, | 2-12 | சாவதிலை | 23 |
| 8 | இத்தரை | ,, | 2-14 | பொன்றுவ | 25 |
| | ,, | ,, | 2-15 | அன்னவ | ,, |



| பாட்டு எண். | பாட்டு. | உதாரண நூல். | | பாட்டு. | பக்கம் |
|---|---|---|---|---|---|
| 10 | மெய்யுயி | பிரஹ்ம கீதை | 4-7 | வாக்குமநங் | 27 |
| 16 | அநுபவமே | பாசு பதப் பிரஹ்ம உபநிஷத் | 35 | आकाशं | 35 |
| 23 | பூதமைந் | வேதாந்த சூடாமணி | 76 | ஈங்குமநம் | 42 |
| 37 | அபிமாநம் | நன் னூல் | | கோடன் மரபே | 54 |
| 43 | வேதாந்த | யோகோப நிஷத் | | आत्मनि | 62 |
| 48 | கேள் வியி | கைவல்ய நவ நீதம் | 2-63 | இந்த நா | 69 |
| | ,, | பஞ்ச தசி | 9-32 | சிந்தனையால் | ,, |
| 57 | கருமயோ | திருக் குறள் | 27-9 | கூற்றங் | 83 |
| | ,, | கைவல்ய நவ நீதம் | 2-45 | காமியத் | ,, |
| 58 | குத்துவெ | விவேக சூடாமணி | 173 | காரணமார் தெளி | 84 |
| 59 | அஞ்ஞாந | கைவல்ய நவ நீதம் | 2-70 | பங்கமா | 87 |
| | ,, | ,, | 2-77 | உலகமான | ,, |
| 64 | கநவு போல் | வேதாந்த சூடாமணி | 163 | இப்பிதந்த | 96 |
| | ,, | ,, | 164 | தடத்தினுயர் | ,, |
| | ,, | கைவல்ய நவ நீதம் | 1-38 | கற்பனை | 97 |
| 68 | கன்ம வினை | வேதாந்த சூடாமணி | 157 | பரமமா | 100 |
| 69 | வெட்ட வீடு | அத்யாத்ம உபநிஷத் | 50 | நான் பிரமம் | 104 |
| | ,, | ,, | 51 | தன்னை | ,, |
| | ,, | ,, | 53 | ஞாந உத்பத்தி | ,, |
| | ,, | ,, | 54 | ஒருவன் | ,, |
| | ,, | வேதாந்த சூடாமணி | 159 | சீவன் முத்தற் | ,, |
| 75 | பந்த முத்தி | வாசிட்டம் 3-3 சித்தன் கதை | 1 | துங்க மெய் | 114 |
| | | ,, ,, | 2 | அந்த மற் | ,, |

30 கவி.

ஆகச் செய்யுள் 67.

உ

சிவமயம்.

# கீதா சாரத் தாலாட்டு,

## செய்யுட் கிரம விஷய அநுக்கிர மணிகை.

9 நான் என்னும் சொற் பொருள் சரீர இந்திரியப் பிராணன்களே ஆகும், வேறு இவ் வுடம்புக்குள் இன்று, வேருக ஒரு பொருள் இருந்தால் கூறல் வேண்டும் என வினவல். 9

10 நான் என்னும் சொற் பொருள் சரீர இந்திரியப் பிராணன்களே அன்றி, வேருக ஒன்று இல்லை என்று கூறிய அர்ஜ்ஜுனனைப் பார்த்து, சரீர இந்திரியப் பிராணன்களை அறிபவனும், சரீர இந்திரியப் பிராணன்களால் அறியப்படாதவனும், ஆகிய ஆத்மா உன்து சொரூபம் எனல். 10

11 சரீரம் ஆத்மாவிற்கு அந்நியமா யிருக்கு மாயின், ஆத்மா சரீரத்தினைச் சம்பந்தித்தது எக் காரணத்தினுல் என வினவலும், கர்ம சம்பந்தத்தினுல் எனச் சமாதாநங் கூறலும். 11

12 தேகம் எடுப்பதற்கு முன் கர்மம் வருவதற்குக் காரணம் யாது எனக் கேட்டலும், பீஜாங்குர ந்யாயம் போல் முன் கர்மம் இத் தேகத்திற்கும், அதற்கு முன் தேகம் முன் கர்மத்திற்கும், ஆக இவ் வாறு கர்மம் - தேகம், தேகம் - கர்மம் எனச் சமாதாநங் கூறலும். 12

13 சரீரமும், ஆத்மாவும், வெவ் வேறு ஆனுல், யாவர் கர்மம் செய்தனர் என வினவலும், ஆத்மாவுக்குக் கர்மம் இல்லை. சரீரத்திற்கே கர்மம் எனச் சமாதாநங் கூறலும். 13

14 சரீரம் கர்மத்தைச் செய்யுமானுல், கர்ம பலனை யார் அடைவது என வினலும், கர்மத்தினைச் செய்த சரீரமே கர்ம பலனை அடையும், அந்தக் கர்ம பலனை சாக்ஷி மாத்திர மாக அறியும் ஆத்மாவுக்கு இல்லை எனச் சமாதாநங் கூறலும். 14



15 கர்மஞ் செய்தது சரீரம், பலனை அநுபவிப்பதும் சரீரம் ஆனுல், சரீரம் இவ் வுலகத்தில் பிண மாய் விழுந்து விடுகிறபடியால், கர்ம பலன் ஆன ஸ்வர்க்க நரகங்களை அநுபவிக்கின்றது, ஆத்மாவே ஆகும். உலகத்தார் ஆத்மாவே ஸ்வர்க்க நரகங்களை அநுபவித்த லாகக் கூறும் கூற்றும் பொருந்துகின்றது. அஃது எப்படி என வினவல். 15

16 சரீர இந்திரியங்களின் செயலை ஆத்மாவின் செய லாக மயக்கத்தால் கூறுவது போல, ஆத்மா ஸ்வர்க்க நரகங்களை அநுபவிக்கின்றது என்று சொல்வதும் மயக்கத்தால் ஆம் எனச் சமாதாநங் கூறல். 16

17 சரீர தர்மம், ஆத்மாவில் வருவது எப் பிராந்தியால் என வினவலும், ஞாநத்தினை அடையாத மோகத்தினுல், சரீர தர்மம், ஆத்மாவில் காணப்படுகின்றது என்று சமாதாநங் கூறலும். 17

18 ஞாநம் ஆத்மாவிற்கா ? சரீரத்திற்கா ? என வினவலும், வெவ் வேருக்கில், சரீரம் ஜடம், ஆத்மா அறிவு என்று சமாதாநங் கூறலும். 18

19 சரீரம் சடம் ஆனுல், அதற்கு இயங்கும் தொழில் எங்ஙனம் உண்டாம் என வினவலும், ஆத்ம சந்நிதாநத்தைப் பெற்றிருத்தலினுல் இயங்கற் ருெழில் உண்டாகின்றது என்று சமாதாநங் கூறலும். 19

52 சரீரம் வேறு நாம் வேறு ஆகும். சம்ஸ்காரத்தால் தேகத்தினை ஆத்மா என்று கூறுதலால் தனது சித் ஸ்வரூபம் ஆவது சந்தேகம் இல்லவே இல்லை எனச் சமாதானங் கூறல். 52

53 தேகாத்மப் பிராந்தி பரோக்ஷ ஞானத்தினால் நீங்காமல் அபரோக்ஷ ஞானத்தினால் நீங்கும் காரணம் யாது என வினவல். 53

54 தீபம் தீபம் எனும் சப்தம் இருளைப் போக்காது, தீபம் கொண்டு வந்து வைத்தால் இருள் போய்விடும். அது போல, அபரோக்ஷப் பிராந்தியை அபரோக்ஷ ஞானந் தான் நிவிர்த்திக்கும். பரோக்ஷப் பிராந்தியைப் பரோக்ஷ ஞானம் நிவிர்த்திக்கும் எனக் கூறல். 54

55 நீண்ட காலம் இருந்த அஞ்ஞானம், நீண்ட கால ஞானத்தால் தான் போகுமா என வினவல். 55

56 குகா அந்தகார தீப தர்சந நியாம் போன்று, அநாதியாக அஞ்ஞானம் ஆத்மாவை ஆசிரயத்திருப்பினும், ஞானம் வந்தவுடன் நிவிர்த்தியாய் விடும் எனக் கூறல். 56

57 கருமம், யோகம், தவம் இவற்றால் நீங்காமல் அஞ்ஞானம், அபரோக்ஷ ஞானம் வந்துதானா நீங்கும் என வினவல். 57

58 அஸ்திர சஸ்திரங்களினால் இருள் போகாமல், சூரிய உதயத்தில் இருள் போவது போல, ஆத்ம ஞானத்தினால் அஞ்ஞானம் போகும். கரும யோக தவங்களால் அஞ்ஞானம் போகாது எனக் கூறல். 58



59 அஞ்ஞானத்தினைப் போக்கச் சாமர்த்தியம் இன்றிய கர்மங்கள் சத்தியப் பிரபஞ்சத்தைக் காத்தல் எவ்வாறு என்று வினவல். 59

60 இந்திர ஜால வித்தையிற் றோற்றும் பொருள் பொய்யாக இருப்பது போல, சத்தியமான நம்மிடத்தில் இப் பிரபஞ்சத்தைப் பொய்யாகவே தோற்றுவித்தோம் எனக் கூறல். 60

61 சத்தியமான உம்மிடத்தில் பொய்ப் பிரபஞ்சத் தோற்றம் பொருந்துமா என வினவலும், கிளிஞ்சிலில் வெள்ளி பொய்யாகத் தோன்றுவது போல, சத்தியமான நம்மிடத்தில் பொய்ப் பிரபஞ்சந் தோற்றுதல் கூடும் எனக் கூறலும். 61

62 அந்யமாக உள்ள வெள்ளியின் ஆரோபம் கிளிஞ்சிலினிடத்துப் பொருந்தும். அது போல, முன்னர் சத்தியமான பிரபஞ்சம் ஒன்று இருந்து அதைப் பார்த்திருந்தால், இப்போது அத்தியாசம் உண்டாகலாம். அவ்வாறு சத்தியமாக முன் ஒரு பிரபஞ்சம் இருந்தது உண்டா என வினவல். 62

63 சொப்பநத்தில் தன்னை ஆகாயத்தில் பறப்பதாகப் பார்ப்பதற்குக் காரணம் மநப் பிராந்தியே யன்றிச் சத்தியமாக மநிதன் பறந்ததைப் பார்த்ததில்லை. அது போல, மந மயக்கம் உண்டானால், பாராத வஸ்துவும் தோற்றும் என விடை கூறல். 63

64 சொப்பநம் போல் பிரபஞ்சம் பொய் என்று கூறினீர். சாக்கிரம் வந்தால் சொப்பநப் பொருளும், சொப்பநமும்

பொய் ஆகின்றது. அது போல் அன்றி, ஜாக்கிரப் பிரபஞ்சம் நாள் தோறும் சத்திய மாகவே விளங்கிக் கொண்டிருக்கின்ற காரணம் யாது என வினவல். 64

65 ஆத்ம ஞானம் வரும் வரைப் பிரபஞ்சம் சத்திய மாகத் தோற்றும். ஆத்ம ஞானம் வந்த பின் சொப்பனப் பொருள் போலப், பொய் யாகப் போகும் என விடை கூறல். 65

66 சாக்கிர அவஸ்தையில் சொப்பனப் பொருள் பொய் யாவது போல, ஞான சாக்கிரத்தில் பிரபஞ்சம் பொய் யாகப் போகும் என்றீர். ஞான சாக்கிரம் வந்து மோக்ஷம் அடைந்த பின்னரும், பிரபஞ்சம் முன் போல உண்மை யாகத் தோற்றும் காரணம் யாது என வினவல். 66

67 ஞானிகளுக்குப் பிரபஞ்சம் தக்த படம் (வெந்த வேட்டி) போலத் தோற்றும். ஆனால், அப்படித் தோற்றினாலும் பிரபஞ்சம் ஜநந மரண ஹேது வாக ஆகாது எனக் கூறல். 67

68 கன்ம வினை அஞ்ஞானங்கள் நீங்கியும், அதன் காரிய மான தூல சரீரம் உடனே போகாத காரணம் யாது என வினவல். 68

69 வேரற்ற மரம் சில நாள் பச்சை யாகத் தோற்றுவது போல, சஞ்சித கர்மம் நீங்கியும், பிராரப்த பரியந்தம் தூல சரீரம் தொழில் செய்துகொண்டிருக்கும் எனக் கூறல். 69

70 சிலர் ஜன்ம நிவிர்த்தி யாகி மோக்ஷத்தினை அடைந்திருக்க வும், சிலர் மோக்ஷத்தினை அடையாது பத்தர்களா யிருக் கவும், காணப்படுகிறபடியால், ஆத்மா நாநாவா, அதன் சொரூபம் கூற வேண்டும் என வினவல். 70



71 பிரஹ்மம் - ஈசன் - நாநா ஜீவர்கள் என்று சொல்வது பிராந்தி யாம். ஆத்மா ஒன்றே ஆகும் என்று விடை கூறல். 71

72 ஆத்மா ஒன்றே என்பது உண்மை யானால், சரீரம் தோறும் அநேக ஆத்மா வாகக் காணப்படுதல் எவ் வாறு பொருந்தும், அதனைக் கூறவேண்டும் என வினவல். 72

73 அநேக கட ஜலத்தில் சூரியன் ஒன்றாக இருந்தும், பல வாகத் தோன்றுதல் போல, ஒரே ஆத்மா, அநேக அந்தக் கரணங்கள் தோறும் பல ஆத்மா வாகத் தோன்றுதல் கூடும் எனக் கூறல். 73

74 சூரியன் போல, அநேக அந்தக் கரணங்கள் தோறும் அநேக ஆத்மா வாகத் தோன்றினால், மோக்ஷம் அடை வது எந்த ஆத்மா, இதனைக் கூற வேண்டும் என வினவல். 74

75 பந்தமும், மோக்ஷமும், அந்தக் கரணத்திற்கே ஆகும். விம்ப ரூப ஆத்மாவிற்கு இன்று எனக் கூறல். 75

76 பிரஹ்மம் ஒன்றா யிருக்க, அதில் பல ஜீவர்கள் எவ் வாறு உண்டாவார்கள் என வினவலும், ஒரு கடலில் பல குமிழிகள் உண்டாவன போல, ஒரு பிரஹ்மத்தி னிடத்தில் நாநா ஜீவர்கள் உண்டாதல் கூடும் என விடை கூறலும். 76

77 தான் ஜீவன் என்றும், தன்னால் அடையப்படுவது பிரஹ்மம் என்றும், உண்டாவது தானா பிரஹ்மாநந்தம் அதனை கூற வேண்டும் என்று வினவல். 77

சுபம் அஸ்து.

ஆக விஷயம் 102. செய்யுள் 104.

கீதா சாரத் தாலாட்டு, விஷய அநுக்கிரமணிகை

முற்றுப் பெற்றது.

# லகு சந்திரிகை விஷய அநுக்கிர மணிகை.

தொடர் எண். (102) பக்கம்.

---

உ

சிவமயம்.

# கீதா சாரத் தாலாட்டின்

# முக வுரை.

சிதம்பரம் - கோ - சித - மடம்

சித. ஸ்ரீ நீல கண்ட சுவாமிகள் அவர்கள் இயற்றியது.

## நிலை மண்டில ஆசிரியப் பா.

---

பூவுல கதனிற் பொலிந்திடும் அரிய
சீவகோ டிகளுள் சிறந்து விளங்கும்
பகுத்தறி வுடைய பண்பமர் மானிட
சீவர்கள் விரும்பும் சீரிய அறம், பொருள்
இன்பம், வீ டென்னும் இவைநான் கனுள்ளே
சாத்திய வடிவாச் சாற்றுநல் வீடோ,
துன்னிடு சர்வ துக்க நிவிர்த்தியும்
பீடுறு பரமா நந்தப் பிராப்தியு
மாம்அஃ தடைதற் கானநேர் சாதநம்
பிரத்திய கபிந்ந பிரஹ்ம கோசர
தத்துவ ஞாநம் அதுவே சற்குரு
அருளுப தேசத் தானுண் டாவதாம்
அத்தகை அருளுப தேசம் அன்றுறு
பாரதப் போரில் பக்குவ மிக்க
பக்தனும் அருச்சுநன் பணிந்து கேட்கப்
பரிவுடன் கிருஷ்ண பகவான் அருளினர்
உத்தம அத்தகை உபதேச வாக்கியம்
கீர்த்திகொள் பகவத் கீதையெனு நூலாய்
உலகில் மிகவும் உலவிவரு கின்றது
இங்ஙன மாக இனிய தொண்டை
வழநா டதனில் மருவு மாதைப்

பதிக்கு மன்னனுப் பன்னுள் முன்னர்
விளங்கிய மறையோன் வேங்கட நாதன்
வித்துவக் களஞ்சியம் மிளிரத் துவிதி
தென்மொழி வடமொழி தேறிய புலவன்
பகவத் பக்தியில் மிக்க பண்பன்
தகுபிர போத சந்தி ரோதய
நூலின் கர்த்தா நுவல்குண சீலன்
பாவலன் ஒருவன் பரிந்து தன்மேல்
பாடிய ஒவ்வொரு பாட லுக்கும்
ஆயிரம் பொன்கள் அன்புடன் கொடுத்து
முன்போல் பிரபந்த முடிந்தகா லையிலும்
அவற்கு மீண்டும் அத்தனை ஆயிரம்
பொன்கள் மொத்தமாய்ப் பொலிவுறப் பரிசு
பிறங்க அருளிய பீடுறு வள்ளல்
ஈன்ற புத்திரிகள் இருவர் அவருள்
ஒருத்தி மகப்பே றுறுது வருந்தினள்
அதுகண் டிரங்கி அரும்பிதா வேங்கட
நாதன் பரிவுடன் நாடி ஓரழகிய
கிருஷ்ண பதுமையைக் கையில் கொடுத்து
இதனையுன் பிள்ளையா எண்ணித் தொட்டிலில்
இதமுற வைத்தே இனிதுதா லாட்டற்
கேற்ற விதமாய் எழில்பெறத் திவ்விய
பகவத் கீதையின் பண்பார் சார
முழுவதுந் திரட்டி முடித்துக் கீதா
சாரத் தாலாட் டாகத் தருகிறேன்
அதுசொலி ஆட்டி அகமகிழ்ந் திடுக
வேண்டும் நலமெலாம் விளைந்திடும் உனக்கே
என்று கூறி ஏக்கம் ஒழித்தனன்
எளிய நடையில் எவரும் அறிதர



வினவிடை மூலம் விளக்குதா ரணத்தொடு
அரிய முத்தியும் அதனை அடையும்
தத்துவ ஞான சாதநம் அனைத்தும்
எஞ்சா திதனுள் இயம்பப் பெற்றுள
முமுட்சுக் கட்கு முறையே உண்டாம்
ஐயம் அனைத்தும் இலகுற எடுத்துக்
காட்டி அவைக்குக் கவின்பெற நிவிர்த்தி
உபாயமும் தெளிவாய் ஒளிரப் பற்பல
வெள்ளிடை மலைபோல் விளக்கப் பெற்றுள
செப்புமிந் நூலைச் சிரத்தையாக் கற்கும்
எவரும் சிரமம் இன்றி விசார
வாயிலாய் ஞான வளமிகப் பெற்று
முற்கூ றியநன் முத்தியெய் திடுதல்
திண்ணம் இதனில் சிறிதுமில் ஐயம்
இவ்விதம் போந்த இந்த நூலின்
பெருமைத் திறமோ பேசற் கரிது
இதற்குப் பற்பலர் எழுதினர் பலவுரை
ஆயினும் அவற்றுள் அநேக இடங்களில்
ஐயவிப ரீதம் அகலா திருத்தல்
கண்டு மிக்க கருணைப் பெருக்கால்
அவற்றை அறவே அகற்ற எண்ணி
இருமொழிப் புலவர் இயைபெரும் சீர்த்தியர்
துறவாச் சிரமி சொல்வன்மை யாளர்
திருப்பூ வணத்தமர் திருமடத் ததிபதி
ஸ்ரீவீர சேகர ஞானதே சிகரின்
சீடராய் விளங்கும் செம்மை வாய்ந்தவர்
பாரினில் பரவும் பரசமய கோளரி
மருவுசத் சாது மண்டலே சுவரர்
விளங்குபய பாஷா வேதாந் தப்பிர

வர்த்தகா சாரியர் வளம்பெறு குணத்தர்
நவில்காசி காநந்த ஞாநா சாரிய
சுவாமிகள் ஒருரை சுலபமாச் செய்துளார்
இவ்வுரை விபரீத ஐயம் யாவும்
இல்லா தகற்றும் எழில்பெற் றுள்ளது
பாமர மக்களும் பரிவுடன் இதனைப்
படித்துத் தெளியும் பான்மை யுடைத்து
ஆகலின் இத்தகை அரிய ஞாந
நூலினை அனைவரும் நவல்புண் ணியம்பெற
வாங்கிப் பூசித்து வளம்பெறல் நன்றே. (89 வரி)

---

## கோவிலூர் மடத்தில் பாடம் நடக்கும் 16 நூன் முறை.

தாக்குறுநா நாசிவ வாதக்கட் டளைகி
    தாசாரத் தாலாட்டுச் சசிவந்ந போதம்,
வாக்குமகா ராஜதுற வுபத்திசத கம்நல்
    வைராக்ய தீபமிலக் கணவிருத்தி யரிய
வாக்கஞ்ஞ வதைப்பரணி வேதாந்த சூடா
    மணிவிவே கசூடா மணிபஞ்ச தசியும்,
பாக்கமழ்கை வல்யநவ நீதமீ சுரகீதை
    பகவற்கீ தைபிரம கீதைவா சிட்டமே.

---

## உரை யாசிரியர் தற் சிறப்புப் பாயிரம்.

திருவளர் கமலத் தயன்முதன் மூவர்
    திறங்களு மொப்பிட வொப்பாப்
பெருமைமிக் குடைய திருக்களர் வீர
    சேகர விறைபதம் பேணி,
அருமையங் கீதா சாரத்தா லாட்டி
    னருத்தநன் கமைவுறத் தமிழிற்
பெருமையி னிலகுசந் திரிகையென் பெயராற்
    பேசுவன் பேணிமிக் குறவே.

---



சிவமயம்.

# இந் நூலில் வந்த நியாயங்கள்.

1. பீஜ அங்குர நியாயம்.
   பீஜம் - வித்து, அங்குரம் - முளை.

2. அயக் காந்த நியாயம், சூசி காந்த நியாயம்.
   அயம் - இரும்பு, காந்தம் - (இழுத்தற் சக்தி உடைய) கல்.
   சூசி - ஊசி.

3. தப்த ஜல அக்நி நியாயம்.
   தப்த - காய்ச்சிய, ஜல - நீர், அக்நி - நெருப்பு.

4. தப்த அயப் பிண்ட நியாயம்.
   தப்த - காய்ச்சிய, அயம் - இரும்பு, பிண்டம் - துண்டம்.

5. ரக்த ஸ்படிக நியாயம்.
   ரக்தம் - சிவப்பு, ஸ்படிகம் - படிகக் கல்.

6. ஆதித்ய அந்தகார நியாயம், ஆதித்ய அந்தகார நாச நியாயம்.
   ஆதித்யன் - சூரியன், அந்தகாரம் - இருட்டு.
   ஆதித்யன் - சூரிய சந்நதியில், அந்தகாரம் - இருட்டு, நாசம் - அழிவு.

7. கண்ட சாமீகர நியாயம்.
   கண்டம் - கழுத்து, சாமீகரம் - பொன் ஆபரணம்.

8. நிவாத ஸ்தல தீப நியாயம்.
   வாதம் - சூறைக் காற்று, நிவாதம் - காற்றில்லாத, ஸ்தலம் - இடம், தீபம் - விளக்கு.

9. குஹா அந்தகார தீப தெரிசந நியாயம்.
   குஹா - குகை (யில் நீண்ட நாளாக இருக்கும்), அந்தகாரம் - இருட்டு, தீபம் - விளக்கு. தெரிசநம் - பார்த்தல்.

10. சுக்திகா ரஜத நியாயம்.
    சுக்திகா - இளிஞ்சில், ரஜதம் - வெள்ளி.

11. தக்த பட நியாயம்.
தக்தம் - கொளுத்திய, படம் - வேட்டி.

12. தருச் சேத ஆர்த்ர நியாயம்.
தரு - மரம், சேதம் - வெட்டிய, ஆர்த்ரம் - ஈரத் தன்மை.

13. பிம்பப் பிரதிபிம்ப நியாயம்.
பிம்பம் - ஆகாய சூரியன், பிரதிபிம்பம் - கட ஜல சூரியன்.

14. சமுத்ர புத்புத நியாயம்.
சமுத்ரம் - கடல், புத்புதம் - குமிழி.

15. மரு மரீசிகா நியாயம், மிருக திருஷ்ணிகா நியாயம்.
மரு - பாலை வனம், மரீசிகா - சூரிய கிரணம்.
மிருகா - மான், திருஷ்ணிகா - விரும்பும் ஜலம் + கானல்.

16. கமல பத்ர உதக நியாயம்.
கமலம் - தாமரை, பத்ரம் - இலை, உதகம் - நீர்.

17. திந்திரிணீ பல சர்ம நியாயம். திந்திடீ பல சர்ம நியாயம்.
திந்திலீ பல சர்ம நியாயம்.
திந்திரிணி - திந்திடீ - திந்திலீ - புளி, பலம் - பழம்,
சர்மம் - தோல்.

18. பங்க கீட நியாயம்.
பங்கம் - சேறு, கீடம் - பிள்ளைப் பூச்சி.

19. தக்ர நவநீத நியாயம்.
தக்ரம் - மோர், நவநீதம் - வெண்ணெய்.

20. அர்த்த ஜாதீய நியாயம்.
அர்த்தம் - பாதிப் பாகம், ஜாதீயம் - வயோதிகமா யிருத்தல்.

21. துஷ்யது துர்ஜ்ஜந நியாயம்.
துஷ்யது - சந்தோஷ மடையட்டும், துர்ஜ்ஜநர் - கெட்ட வர்கள்.

---

உ
சிவமயம்.

# சிறப்புப் பாயிரம்.

---

[இச் செய்யுட்கண், ஆக்கியோன் பெயர், நூல் வந்த வழி, நூற் பெயர், நூற் பயன், நூற் பொருள், அதிகாரி என்னும் ஆறினையுங் கூறுகின்றார்.]

மாதையர்கோன் வேதநவில் வாய்வேங் கடநாதன்
காதையுறப் பார்த்தனுக்குக் கண்ணனருள் — கீதைக்
கருத்துயர்தா லாட்டாகக் கட்டுரைத்தான் யாருங்
கருத்துயர்தீர்ந் தெய்தக்க தி.

(இ—ள்.) மாதையர் - (திரு வா) மாத் தூரி லுள்ளார்க்கு, கோன் - தலைவ ராயும், வேதம் - வேதங்களை, நவில் - அத்தியயநஞ் செய்கின்ற, வாய் - வாக்கினை (உடையவ ராயும் உள்ள), வேங்கட நாதன் - ஸ்ரீ வேங்கட நாதன் என்னும் நாம முடையவர், காதை - (யுத்தத்தில் எதிர்த்தோரைக்) கொல்லுதலை, உற - பொருந்தும்படி யாக, (அதாவது கொல்லும்படி யாக), பார்த்தனுக்கு - அர்ஜுந னுக்கு, கண்ணன் - பகவான், அருள் - உபதேசித்த, கீதை - (பகவற்) கீதையின், கருத்து - (ஞாநார்த்த ரூப) தாத்பரியத்தினை, யாரும் - (மோக்ஷ இச்சை யுடைய) எவரும், கரு - பிறவி, துயர் - துன்பம், தீர்ந்து - நீங்கி, கதி - மோக்ஷத்தினை, எய்த - அடைய, உயர் - மேன்மை (உடைய), தாலாட்டு ஆக - தாலாட்டுப் (பிரபந்தம்) ஆக, கட்டு உரைத்தான் - ஏற்ற வாறு கூறினர். (எ-று).

மாதையர் - குறிப்பு வினையா லணையும் பெயர். யாரும் - உம் - முற்று.

"வேத நவில் வாய்" என்றதனால், வேதாத்தியயநத்திற் குரியவர் மூ வருணத்தவ ராயினும், ஆசிரியர், வேத நவில் வேங்கட

நாதன் எனக் கூறுது, வேத நவில் "வாய்" வேங்கட நாதன் என மிகைபடக் கூறியதனுனே, வேத நவிலுதலிற் சிறப்பினைப் பெற வைத்தார். எனவே, வேத மோதல் பிராமணர்க்குச் சிறந்த தர்ம மாகவும், யுத்தம் புரிதல் க்ஷத்திரியர்க்குச் சிறந்த தர்ம மாகவும், பொரு ளீட்டல் வைசியர்க்குச் சிறந்த தர்ம மாகவும், மநு ஸ்மிருதி முதலிய தர்ம சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருத்தலினுனும், "மறப் பினும் ஒத்துக் கொளலாகும் பார்ப்பான், பிறப்பொழுக்கங் குன்றக்கெடும்" என்னுங் குறளாற் பிராமணர்க்கு அது சிறப்புத் தர்ம மாகக் கொள்ளப்பட்டிருத்தல் போல, மூ வருணப் பொது வாகிய வேத மோதலும், பிராமணர்க்குச் சிறப்புத் தர்ம மாகக் கொள்வதில் எவ் வித முரண்பாடு மின்மையானும், வேத நவில் வாய் வேங்கட நாதர் பிராமணர் என்பது தெளி வாம்.

இன்னும், இவரைப் பற்றிய செய்தி - மதுரைத் தமிழ்ப் பேரகராதியில், மாதை என்பது தென் னுற் காடு ஜில்லாவி லுள்ள சிவ ஸ்தல மான திரு வா மாத் தூர் எனவும், "மாதை வேங்கடே சுரன்" என்னும் இப் பிரபு தமிழ்ப் புலவர்களுக்குப் பரமோபகாரி யாய் இருந்து, தமிழை வளர்த்த அவதார புருஷன் எனவும், ஒரு கவிக்கு ஆயிரம் பொன் ஞக 99 கவிகளுக்குக் கொடுத்து, 100-வது கவிக்கு நூ ருயிரம் பொன் கொடுத்து ஒரு பிரபந்தங் கொண்ட பிரபு சிகா மணி எனவும், இது நோக்கியே படிக் காசுப் புலவர் தமது தொண்டை மண்டல சதகத்தில், "எல்லப்பன்" என்னுஞ் செய்யுளிலே, மாதை வேங்கடேசுரன் போல, வரிசை செய்தான் எனவும், எல்லப்பனுக்கு ஒப்புக் காட்டிப் புகழ்ந்திருக் கின்ருர் எனவும், கூறப்பட்டுளது. (சிவ ஸ்தலமான அத் திரு வா மாத் தூர் சோழ நாட்டைச் சேர்ந்ததே.)

இன்னும் பிரபோத சந்திரோதயப் பாசுரத்தால், அத் திரு வேங்கட நாதர் சோழ நாட்டி லுள்ள பிராமண சிரேட்டர் என்ப



தும், கண்ணன் பக்தி மிகுந்தவர் என்பதும், வட மொழி தென் மொழிகளிற் சிறந்த பண்டிதர் என்பதும், அவர் குரு, துறவி யாகிய இராகவாநந்தர் என்பதும், கேவலாத்துவிதி என்பதும், திட அபரோக்ஷ ஞானி என்பதும், குருவின் கட்டளைப்படி வட மொழியில் கிருஷ்ண மிசிரர் செய்த "பிரபோத சந்திரோதயம்" என்னும் ஞாந நாடக நூலைத் தென் மொழியில் செய் துள்ளார் என்பதும், பிறவும் பெறப்படுகின்றன.

இன்னும், அபிதாந சிந்தா மணியில் - "மாதைத் திரு வேங்கட நாதர் - இவர் இற்றைக்குச் சற் றேறக் குறைய, 500 வருஷங் களுக்கு முன், சோழ நாட்டில் மாதை என்னும் ஊரில் ஸ்மார்த்த வேதியர் குடியிற் பிறந்து கல்வி வல்லவ ராய்ப், பாண்டி நாட்டை யாண்ட நாயக வம்சத்தைச் சேர்ந்த ரங்க கிருஷ்ண முத்து வீரப்ப நாயகரிடம் மந்திரி யாக அமைந்து, தமிழ்ப் புலவரை ஆதரித்துக் கவி பெற்றவர். கவிக்கு ஆயிரம் பொன் கொடுத்துப் பிரபந்தம் முடிந்த பின், நூறு கவி கொண்ட அந் நூலுக்கு நூ ருயிரம் பொன் பரிசு தந்தவர். இதனைப் பண விடு தூது முதலியவற்ருல் அறிக. இவர் ஆசாரியர் சொற்படி, பிரபோத சந்திரோதயத்தைத் தமிழில் மொழி பெயர்த்தவர்." என்பது காணப்படுகிறது. இதில் மந்திரியா யிருந்தார் என்னும் பகுதி மாத்திரம் மாறுபடுகின்றது. அதில், அவர் தம் சீவிய காலத்துக்கு முற் பகுதியிற் சிறிது காலம் மந்திரியா யிருந்திருக்க லாம். பிற் பகுதியில் மன்னரா யிருந்திருக்க லாம். ஆகலின், முரண் இன்ரும். எனவே, எல்லா அம்சங்களும் பொருந்தியிருத்தலினுனும், இவரைத் தவிர இந் நாம முடைய இரு மொழிப் புலவர் எவரும் மாதைக்கு மன்ன ராயும், கிருஷ்ண பக்தி யுடையவ ராயும், புலவர் புராணம் முதலியவற்றிற் காணப்படாமை யாலும், கீதா சாரத் தாலாட்டுக் கர்த்தா, இவரே என்பது வெள் ளிடை மலை யாம். இவர் தொண்டை வழ நாட்டினர் ஆவர். மாதை எனப் பல வூர் உள.

பிரபந்தங்கள் 96. அவற்றுள், தாலாட்டுப் பிரபந்தமும் ஒன்றும். பகவற் கீதையின்கண் ணுள்ள ஞாந அர்த்தங்களை மாத்திரம் திரட்டிக் கூறுகின்றமையின், "பகவற் கீதா சாரம்" என்பதின் முதற் குறை யாகக் "கீதா சாரம்" என நிறுத்தித், தாலாட்டு என்பதோடு சேர்ந்து, இந் நூற்குக் "கீதா சாரத் தாலாட்டு" எனப் பெயர் வைக்கப் பெற்றது என்று உணர்க.

1. முமுட்சுக்க ளாய உத்தமன், மத்திமன், அதமன் என்னும் அதிகாரிகள் யாவரும், இந் நூற்கு அதிகாரிகள் என்பது தோன்ற "யாரும்" என்றூர்.

2. ஆக்கியோன் - திரு வேங்கட நாதன்.

3. பகவற் கீதை, முத நூ லாம். அதன் வழி வந்தது கீதா சார மாம்.

4. நூற் பெயர் - கீதா சார மாம்.

5. நூற் பயன் - "கருத் துயர் தீர்ந்து கதி எய்த" என்பதனுல், அனர்த்த நிவிர்த்தி, ஆநந்த அவாப்தி ரூப மோக்ஷ மாம்.

6. தமிழ் நூ லாதலின், தமிழ்ப் பாஷையின் எல்லையே இதற்கும் எல்லை யாம்.

7. நூற் பொருள் - "கீதைக் கருத்து" எனவே, கீதையின் ஞாநார்த்த மாகிய பரமாத்ம ஐக்கிய மாம்.

8. சம்பந்தம் - இந் நூல் கேட்ட பின், இந் நூல் கேட்கத் தக்கது என்னும் சம்பந்தம். அல்லது, நூற்கும், விஷயத்திற்கும், பிரதிபாத்தியப், பிரதிபாதக பாவ சம்பந்தம், விஷயத்திற்கும், அதிகாரிக்கும், பிராப்பியப், பிராபக பாவ சம்பந்தம், முதலிய ஏனைச் சம்பந்தங்களும் கொள்க.



எனவே, சிறப்புப் பாயிரத்திற் குரிய எட் டுறுப்பும் வந்தமை காண்க. இதனுல், விடயம், சம்பந்தம், பயன், அதிகாரி என்னும் அநுபந்த சதுட்டயமும் பெறப்பட்டமை காண்க.

கீதையின் சாரம் கீதா சார மாம். பகவற் கீதை பதினெட்டு அத்தியாய ரூப மாய்க் கன்மம், பக்தி, ஞாநங்களை உபதேசிப்ப தாம். அவற்றுள், சார மான ஞாநத்தினை மாத்திரம் இந் நூலில் எடுத்துக் கூறுகின்றமையின், இது கீதா சார மாம். தாலம் - ஆட்டு, தாலத்தை - நாவினை, ஆட்டுதல் - அசைக்குதல், தாலாட் டாம். தாலு - தாலவீயம் - தாலம் என்பன நாவின் பெயர்க ளாம். ஆட்டு என்பது, அடி என்பது போலத் "தல்" விகுதி குறைந்த முத னிலைத் தொழிற் பெயர். இங்ஙன் தாலாட்டு என்னும் பதத்திற்கு அவயவங்களின் ஆற்றலாற் பொருள் கொள்ளில், தாலாட்டு ஈண்டு இப் பிரபந்தத்தின் பெய ராய் வருதலினுலும், அதற்கு வலிந்து பொருள் கொள்ளின், கௌரவாதி தோஷங்கள் நேரு மாகலானும், அவ் வர்த்தம் ஈண்டுப் பொருந்தாமை சிறிது ஊன்றி நோக்கும் எவர்க்கும் எளிதிற் புல ணும். பின்னர், அப் பதத்திற்குச் சமுதாய ஆற்றலால், ஆராட்டுதல், அதாவது, குழந்தைகளைத் தொட்டிலி லிட்டு உறங்கச் செய்யப் பாட்டுப் பாடுதல், அல்லது, அங்ஙன் பாடி அதனை உறங்கச் செய்தற் கேற்ற தாய்ப் பாடப்படும் பிரபந்தத் தலைவ னுடைய சிறந்த செய்கைகளைத் தெரிவிக்கும் பல கண்ணிகளை யுடைய பாடல் எனப் பொருள்படும். படவே, அப் பாடல்களை யுடைய பிரபந்தத்திற்கு அது ஆகுபெய ராயிற்று என்க.

"மாதை" என்பதற்கு - மாத் தூர் - சேர மா தேவி - மா தேவி பட்டணம் என்பன பொருள் எனக் கூறுவாரும் உளர்.

ஸ்ரீ பகவான் கீதையினை அர்ஜுநனுக்கு எப் பொழுது உபதேசித்தனர் என்னும் வினு நிகழ்ந்துழி, அதற்கு விடை யாக, "காதை உற" என, யுத்த சந்நத்தனு யிருக்கும் பொழுது என்றூர்.

[நூ லாசிரியர் தாம் செய்யப் புகுந்த கிரந்தம் நிர் விக்கிந மாக இனிது நிறைவேறும் பொருட்டுச் செய் யும், சிஷ்டாசாரத்தாற் பெற்ற இஷ்ட தெய்வ நமஸ் கார ரூப மங்கலத்தை, நூல் கற்போர் மங்கல மின்மை கண்டு, இதனை 'நாஸ்திக நூல்' எனக் கருதி நீக்கி விடாது, இதில் பிரவிர்த்திக்கும் பொருட்டும், அவர் களும் இவ் வான்றோ ரொழுக்கத்தை யநுசரிக்கு மாறும், அவர்கட்கு உணர்த்துவான நூலில் செய்யுள் ரூப மாகக் கூறுகினறார்.]

ஐவகைப் பொருளு நான்கு கரணமுங் குணங்கள் மூன்றுஞ்
செய்வினை யிரண்டு மொன்றி யாவருந் திகைப்ப நின்ற
பொய்யிரு ளகல ஞாநப் பொருட்கதிர் விரித்த புத்தேள்
கைவள ராழிச் செங்கட் கண்ணனைக் கருத்துள் வைப்பாம்.

(இ—ள்) ஐ - ஐந்து, வகை - வித மான, பொருளும் - பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்னும் பஞ்ச பூதங்களும், பிராணன், அபாநன், சமாநன், உதாநன், வியாநன் என்னும் ஐந்து வாயுக்களும், வாக், பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம் என்னும் ஐந்து கர்மேந்திரியங்களும், சுரோத்திரம், துவக், சக்ஷு, சிங்நுவை, கிராணம் என்னும் ஐந்து ஞாநேந்திரியங்களும், கரணம் நான்கும் - (மநம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்னும்) அந்தக் கரண சதுஷ்டயமும் (நான்கும்), குணங்கள் மூன்றும் - (சத்வம், ரஜஸ், தமஸ் என்னும்) குணத் திரயங்களும், செய் - (மந வாக் காயங்களால்) செய்யப்படுகின்ற, வினை - (புண்ணிய பாவம் ஆகிய) கர்மங்கள், இரண்டும் - இரண்டும் (ஆகிய இவை அனைத்து மாகத் தானே), ஒன்றி - பொருந்தி, யாவரும் - (தத்வ ஞாநியும், ஈசுவானும் தவிர ஏனைய ஜீவர்கள்) யாவரும், திகைப்ப - மயங்கும் படியாக, நின்ற - (ஸ்வாசிரய ஸ்வ விஷய மாக) இருக்கின்ற,



பொய் - அநிர்வசநீய, இருள் - (அவித்தியா) அந்தகார மானது, அகல - நீங்குதற்கு, ஞாந - (பிரஹ்ம) வித்தியா (ஸ்வரூபம்), பொருள் - (என்னும் கிதா சாஸ்திர) அர்த்தங்க ளாகிய, கதிர் - கிரணங்களை, விரித்த - (சகல லோகத்தினிடத்தும்) பரப்பிய, புத்தேள் - (பரம தேவ) ஆதித்தன் ஆகிய, கை - (திருக்) கரத்தில், வளர் - (பிரகாசம்) மிகுகின்ற, ஆழி - (பாஞ்சஜந்யம் என்னும் சங்கத்தையும், சுதர்சநம் என்னும்) சக்கரத்தினையும், செம் - சிவந்த (தாமரை மலர் போன்ற), கண் - நேத்திரங்களையம் (உடைய), கண்ணனை - ஸ்ரீ கிருஷ்ண பகவானை, கருத்துள் - ஹ்ருதயத்தில், வைப்பாம் - வைத்துத் தியாநிப்பாம், வாக்கால் ஸ்துதிப்பாம், காயத்தால் நமஸ்கரிப்பாம், (எ-று).

"நான்கு காணமும், குணங்கள் மூன்றும், வினை இரண்டும்" என்று கூறியது போல, விதந்து கூறாது, "ஐ வகைப் பொருள்" எனப் பொதுப்படக் கூறினமையின், பஞ்ச பூதம், பஞ்ச பிராணன், பஞ்ச ஞாநேந்திரியம், பஞ்ச கர்மேந்திரியம் எனப் பொருள் விரித்தோம். ஸ்தூல தேகம் பஞ்ச பூதத்தினுள் அந்தர்ப்பாவ மாம். "ஐந்து நான்கு மூன்ற இரண்டு ஒன்று" என்பன, எண் ணலங்கார முறக் கூறப்பட்டமை காண்க. நான்கு மூன்று இரண்டு என விதந்து கூறியது போல, ஐந்து என்பவையை விதந்து கூறாமையின், துணிந்து இவையே என்று அவற்றைக் கூறல் இயலா தாயினும், சீவ சம்பந்த முடையனவாய்த் திகைப் பைச் செய்வன இவற்றினும் வேறு ஐந்தினைக் கூறல் பொருந்தா மையின், இவையே எனத் துணிந்து கூறினும் என்க.

திகைத்தல் - தேகம், தாரம், புத்திரன், பொருள் முதலிய வற்றில், "யான் எனது" என்னும் அபிமாந மாம்.

பூத அந்தகாரத்தினைச் சூரியன் போக்குவது போல, ஐ வகைப் பொருளும், நான்கு காணமும், குணங்கள் மூன்றும்,

வினை இரண்டு மாய் ஒன்றி நின்ற, பொய் இரு ளாகிய அவித்தியா அந்தகாரத்தினைப் போக்குவது, தத்துவ க்ஞாந சொரூப னாய பகவா னாகலின், அப் பகவானை, "ஞாநப் பொருட் கதிர் விரித்த புத்தேள்" என, ஞாந சூரிய னாகக் கூறினர்.

"பொய் யிருள்" என்புழி, பொய். ஈண்டு அசத்து அன்று; மித்தையே யாம். மித்தை - சதசத் விலக்ஷண சொரூபம். பூத இருள் உலக வஸ்துக்களை மறைப்பது போல, அவித்தையும் ஆந்ம அநாந்மாக்களின் பேதந் தெரிய வொட்டாமல் மறைத்தலின், அதனை "இருள்" என்றார். இனி "இன்ன தன்மைத் தென நிச்சயிக்கப்படாமையின், அவித்தையை இருள் என்றார்" என்னும் பரிமே லழகர் கருத்துப்படி ஈண்டுப் பொருள் கொள்ளினு மமையும்.

நூன் முடிபிற்கு ஏது வாய விக்கிந நிவாரணத்திற்கு அநுகூல வியாபாரம் மங்கலம் என்று கூறப்படும். விக்கிநம் என்பது பாபத்திற்குப் பெய ராம். வியாபாரம் என்பது மநோ வாக்குக் காயங்களின் தொழிலுக்குப் பெய ராம். பாபத்தால் எந்த நற் காரியமும் முற்றுப் பெறுவ தில்லை. அப் பாவம் மங்கலத்தால் நிவாரணம் ஆகின்றது. அவ் வாறாய மங்கலம், வஸ்து நிர்த்தேசம், நமஸ்காரம், ஆசிர்வாதம் என மூன்று வகைப்படும். அவற்றுள், சகுண, அல்லது, நிர்க்குண வஸ்துவை நமஸ்காரம் முதலியவைக ளின்றிப் புகழுதல் மாத்திரம், வஸ்து நிர்த்தேசம் ஆம். அதற்கு,

"அகர முதல வெழுத்தெல்லா மாதி
பகவன் முதற்றே யுலகு." — குறள்.

"நித்த மாய்விபு வாகிநி கழ்வதாய்
மத்த நாமவு ருமன்னி டமதாய்ச்
சித்த நண்ணலற் றேசெறி யும்பரி
சுத்த வெல்லையி லாச்சுக மேயகம்" — விசார சாகரம்.

ஆதியன உதாரணங்க ளாம்.



நமஸ்கார ரூப மங்கலம் - வாஞ்சிதார்த்தப் பிரார்த்தந மின்றி, நமஸ்காரத்திற்கு யோக்கிய மான குரு ஈசுவரன் முதலியவர்களை விட நமஸ்காரஞ் செய்பவரிடத் துள்ள தாழ்மையை உணர்த்துப வாகிய சிந்தித்தல், துதித்தல், வணங்க லாதி மந வாக்குக் காயங் களின் வியாபார விசேஷ மாம். அதற்கு,

"ஆனைமுக னாறுமுக னம்பிகைபொன் னம்பலவன்
ஞாநகுரு வாணியையு னாடு" — நாநா ஜீவ வாதக் கட்டளை.

"ஐவகைப் பொருளு நான்கு கரணமுங் குணங்கள் மூன்றுஞ்
செய்வினை யிரண்டு மொன்றி யாவருந் திகைப்ப நின்ற
பொய்யிரு ளகல ஞாநப் பொருட்கதிர் விரித்த புத்தேள்
கைவள ராழிச் செங்கட் கண்ணனைக் கருத்துள் வைப்பாம்"
— பரமார்த்த தரிசநம்.

"தருணமா துமைமுகத் தாம ரைக்கெழு
மருணனு மெனவுதித் தடியர் பாற்புரி
கருணைமா மதமெனக் காட்டு மாமுகன்
சரணவா ரிசமலர் தலையிற் கொள்ளுவாம்"
— வேதாந்த சூடாமணி.

"பொன்னில மாத ராசை பொருந்தினர் பொருந்தா ருள்ளந்
தன்னிலந் தரத்திற் சீவ சாட்சிமாத் திரமாய் நிற்கு
மெந்நிலங் களினு மிக்க வெறுநில மவற்றின் மேலாம்
நன்னில மருவு மேக நாயகன் பதங்கள் போற்றி."

"ஈன்றளித் தழிக்குஞ் செய்கைக் கேதுவா மயனாய் மாலாய்
ஆன்றவீ சனுமாய்த் தானே யநந்தமூர்த் தியுமாய் நிற்கும்
பூன்றமுத் தனுமா யின்பப் புணரியா தவனாய் நாளும்
தோன்றிய விமல போத சொரூபத்தைப் பணிகின் றேனே."
— கைவல்ய நவநீதம்.

என்ப வாதியன உதாரணங்க ளாம்.

ஆசீர்வாத மங்கலம் - நூ லாசிரியர் தன் னுடைய, அல்லது, தன் சிஷ்ய னுடைய வாஞ்சிதார்த்தப் பிராப்தியின் பொருட்டுச் செய்யும் பரமேசுவரப் பிரார்த்தனை யாம். அதற்கு,

"அமரர்கள் பரவுந் திருமுது குன்றி லாழத்துப் பிள்ளையைச் சிகரிக்
குமரசற் குருவை யிமகிரி ராஜ குமாரியாம் பெரியநா யகியை
மும்மலமு மொருங்கே யகற்றிடு முக்கண் முதல்வனைச் சாந்தநா யகனை
நமதெணப் படியே முடிந்திடத் திநமு நாடிநின் றிறைஞ்சிவாழ்த்
திடுவாம்."

— மஹா ராஜத் துறவு.

"பந்தத்தினை நிவிர்த்தித்துச் சுகத்தினை ஈந்தருளுந் தீன தயாளுவான சங்கரன், இக் கிரந்தத்தைப் படிக்கிறவர்கள் கேட் கிறவர்க ளுடைய ஜந்மம் முதலிய துக்கங்களை நிவிர்த்தி செய்வா ராக."

"திருவளர் கமலத் தயன்செயிப் புவிமுன் நிகழ்தரு முல கெலாந் தன்பால், மருவுசிற் சத்தி யெனுங்கிர ணத்தால் வந்தெழு காளனீ ராக, விருமையா மதிமாய்த் தநிஞராங் காந்தத் திடை யருட் சுடருமிழந் திலங்கு, மொருசிவா தித்தன் றனைநம திருள்போ யொழியநா டொருமிறைஞ் சிடுவாம்"

— வைராக்ய தீபம்.

என்ப வாதியன உதாரணங்க ளாம்.

"ஸ்வாசிரய ஸ்வ விஷயம்" என்பது, மாயை, ப்ரஹ்மத் தினை ஆசிரயித்து, ப்ரஹ்மத்தினை (அக்நியைப் புகை மறைப்பது போல) சீவர்கள் உணர வொட்டாமல் மறைத்த லாம்.

"அநிர்வசநீயம்" என்பது, சத், அசத், சதசத் - பிந்நம், அபிந்நம், பிந்நாபிந்நம் - சாவயவம், நிரவயவம், சாவயவ நிரவயவம் - என்னும் ஒன்பது விதத்தும் நிர்ணயிக்க முடியாத பாத யோக்கிய சொரூபம் உடைய தாம்.



புண்ணிய கர்ம மாவது, வேதத்தில் விதிக்கப்பட்ட நித்திய நைமித்திக காமிய பிராயச்சித்தம் முதலியன வாம்.

பாப கர்ம மாவது, வேதத்தில் நிஷேதிக்கப்பட்ட ப்ரஹ்ம ஹத்தி முதலியன வாம்.

"ஐவகைப் பொருளும்" என்ற செய்யுள், சேம நகர் பட்டர் அவர்களால் மொழி பெயர்க்கப்பட்ட, "பரமார்த்த தரிசநம்" என்னும் பகவற் கீதைப் பாயிரத்தில் உள்ள முதற் செய்யு ளாகும்.

"முன்னோர் மொழிபொருளே யன்றி அவர்மொழியும்
பொன்னேபோற் போற்றுவம் என்பதற்கும் — முன்னோரின்
வேறுநூல் செய்துமெனும் மேற்கோளி லென்பதற்கும்
கூறுபழஞ் சூத்திரத்தின் கோள்."

என்னும் விதியை அநுசரித்து, அதன் வழி நூ லாகிய இதற்கும், அதனையே மங்கலச் செய்யு ளாக, இவ் ஆசிரியரும் கொண்டிருக் கின்றார் என அறிக.

"ஐவகைப் பொருளும்" என்ப தாதிகளில் உள்ள உம்மை கள் - முற்றும் - எண்ணும் - ஆம்.



உ
சிவமயம்.

ஸ்ரீ கிருஷ்ணய பரப்ரஹ்மணே நம:

# கீதா சாரத் தாலாட்டு, லகு சந்திரிகை உரை.

---

## நூல்.

[மாதா வானவள், தன் (பிரதிமைக்) குழந்தையை ஸ்ரீ கிருஷ்ண பகவானின் அவதாரம் எனப் பாவித்து, அர்ஜுநனுக்கு ஆத்ம ஞானத்தினை உபதேசிக்க, ஆசார்ய மூர்த்த மாக எழுந்தருளி வந்த ஸ்ரீ கிருஷ்ண பகவானே நீர், என்ப தாதி யாகக் குழந்தையினை நோக்கி வினவும் முறை யாகக் கிரந்தாரம்பம் செய்கின்றார்.]

சீராரும் பரமார்த்த தேரிசநத்தை யருள்செய்யப்,
பேராருந் தேசிகனாய்ப் பெருமானே வந்தவரோ. (1)

(இ—ள்) பெருமானே - பெருமையிற் சிறந்தவரே!, சீர் - (அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி யாகிய மோக்ஷத்தினை அடைவிக்கும்) சிறப்பினை, ஆரும் - பொருந்தியிருக்கின்ற, பரமார்த்த தெரிசநத்தை - பிரத்திய கபிந்ந பரம் பொருளின் சாக்ஷாத்காரத்தை, அருள் - (அர்ஜுநனுக்கு) அநுக்கிரகம், செய்ய - செய்தற்கு, பேர் - பெருமை, ஆரும் - பொருந்தியிருக்கின்ற, தேசிகன் ஆய் - ஆசார்ய சொரூப மாக, வந்தவரோ - எழுந்தருளி வந்தவரோ (நீர்), (எ-று).

"வந்தவரோ" என்பதற் கியைய உயர்த்தற்கட் பன்மையிற் கூறாமல், "தேசிக னாய்" "பெருமானே" என ஒருமையிற் கூறியது வழு வமைதியாலா மென்க.



அஞ்ஞாநத்தினைப் போக்குதற் குரிய ஞாநத்தினைக் கொடுக்கும் ஆற்றல் ஆசிரியருக்கே உளது என்னும் மாண்பை உணர்த்துவான், அவருக்கு "பேர் ஆரும்" என்னும் விசேஷணங் கூறப்பட்டது.

'வந்தவரோ' என்னும் சொல்லின் ஈற்றில் உள்ள ஓ காரம் வினாப் பொருளது.

"ஒழிபிசை வினாச்சிறப் பெதிர்மறை தெரிநிலை
கழிவசை நிலைபிரிப் பெனவெட் டோவே.
— நன்னூல் 425. இடையியல் 4.

என்னும் சூத்திரத்தால் உணர்க.

"அர்ஜுநன் றன் பொருட்டாக" என்னும் 101-வது செய்யுளிலும், "பரம முநிவர் முன்னே பரிச்சித்தை" என்னும் 103-வது செய்யுளிலும், ஸ்ரீ கிருஷ்ண பகவானின் விளிகளால் குழந்தையை விளிப்பதால், மாதா, ஸ்ரீ கிருஷ்ண பகவானின் அவதார மாகத் தன் (பிரதிமைக்) குழந்தையைப் பாவித்துள்ளாள் என்பது தெளி வாம். ஆகவே, குழந்தையை ஸ்ரீ கிருஷ்ண பகவானாகவே விளித்து நித்திரை செய்யு மாறு தாலாட்டும் வாயி லாய், ஸ்ரீ கிருஷ்ண அர்ஜுந சம்வாத வடி வாக அர்ஜுநனுக்கு உபதேசிக்கப்பட்ட ஞாநார்த்தத்தை, உலகிற்குப் பயன்படுத்துவதே நூ லாசிரியர் கருத் தாம் என்க.

101-வது செய்யுளில் "புண்ணியரே கண்வளரீர்" எனவும், 103-வது செய்யுளில் "பேரொளியே கண்வளரீர்" எனவும், விளிகள் வந்தமை போல, இச் செய்யுளி லுள்ள "பெருமானே" என்பதும் விளிப் பெய ரெனக் கொள்க.

"நீர்" என்னும் முன் னிலைச் சொல் லாகிய எழுவாய் எஞ்சி நின்றமையின் வருவித் தாம். ஏனைய செய்யுளிடத்தும் வரு மிடங்களில் இவ் வாறே காண்க.

"பெருமானே" என்பது விளி. நீர் - தோன்று எழுவாய், வந்தவரோ - பய னிலை. வந்தவர் - வினையா லணையும் பெயர். ஓ - வினு.

(1)

[ஆசாரியர் இருக்க வேண்டும் தானத்தினைக் கருதாது, ரத சாரதியா யிருந்து, யுத்த மாகிய சுதர்மத்தைச் செய்ய, அர்ஜுனனுக்கு ஆத்ம ஞானத்தினை அநுக்கிரகஞ் செய்தவர் நீரே எனக் கூறுகின்றார்.]

திருத்தேரிற் சாரதியாய்ச் சேர்ந்திருந்துங் கீதையினல்,
அருச்சுனற்கு மெய்ஞ்ஞான மனைத்துமுரை செய்தவரோ. (2)

(இ—ள்) திரு - சிறந்த, தேரில் - ரதத்தில், சாரதி ஆய் - பாகன் ஆய், சேர்ந்திருந்தும் - கூடியிருந்தும், கீதையினல் (பகவற் கீதை யாகிய தமது) வாக்கியத்தினல், அருச்சுனற்கு - பார்த்தனுக்கு, மெய் ஞானம் - சத் ரூபப் பிரத்திய கபின்ந ப்ரஹ்ம சாக்ஷாத் கார ஞானத்தினையும், அனைத்தும்- (அவற்றிற்குச் சாதந மான) யாவற்றையும், உரை - உபதேசம், செய்தவரோ - செய்தருளிய பகவானே (நீர்), (எ-று).

அனைத்தும் - உம் - முற்று. செய்தவரோ - ஓ - வினு.

தேருக்கு "திரு" என்னும் விசேஷணம் கொடுத்தது - பகவான் சாரதி யாக இருந்து ஆத்ம ஞானத்தினை உபதேசித்ததனுலும், காண்டவ வந தகந காலத்தில் அர்ஜுனனுக்கு அக்நி பகவானல் கொடுக்கப்பட்டு, நவ ரத்நங்கள் இழைத்த ஸ்வர்ண ஸ்தூபி வைத்து, சுவேதப் புரவிகள் பூட்டி, அநும த்வஜம் நாட்டப் பெற்று, அழியாத ரத மானதாலும், என உணர்க.

"சேர்ந்திருந்தும்" என்ற இழிவு சிறப் பும்மை கொடுத்துக் கூறியது, ஆசார்ய சிஷ்யக் கிரமம் பிறழ்ந் திருந்தமையா லாம்.



அஃது எங்ஙன மெனின்; தலை மயிரில் நெருப்புப் பற்றியவனும், பல நாள் உபவாசம் இருந்தவனும், மது விழையும் வண்டும், வேறு ஒன்றையும் விரும்பாது, அதி விரை வாக முறையே ஜலம், அந்நம், நறவு பொலி மலர், என்பவற்றை விரும்பித் தேடிச் சென்று அடைவது போல, ஜநந மரண சம்சாரத்தில் கிடந்து வருந்துபவன், அந்தத் துக்கத்தினை நிவிர்த்தித்தற் குரிய ஞான ஆசார்யர் எங் குளர் என விரும்பித் தேடிப் போய் அடைந்து, அஷ்டாங்க பஞ்சாங்க பூர்வக மாக வணங்கி எழுந்து, வா யாரப் பல வாறு துதித்து, அவ் ஆசாரியருக்குக் கிருபை வரும் அளவும், ஆப்தம் முதலிய பணிகளைச் செய்து வருகிற சாதந சதுஷ்டயமுள்ள சீடன், அதி தீவிர பக்குவ னுக இருப்பின், அவனுக்கு அநுக்கிரகிக்க விரும்பிய குரு, ஏகாந்த ஸ்தாநத்தில், அந்தச் சிஷ்யன் பய பக்தி விசுவாச விநயத் தோடு கூடிக் கை கட்டி வாய் புதைத்துத் தாழ்ந்த ஸ்தாநத்தினின்று கேட்பத், தாம் உயர்ந்த ஆசநத்தின் கண் இருந்து, ஞான உபதேசம் செய்வது, குரு சிஷ்ய மரபா யிருக்க, அதற்கு மாருக, அர்ஜுனன் ஆகிய சிஷ்யன் இருக்கும் இடத்திற்கு ஆசாரிய ராகிய தாம் வந்து, அவனது ஏவற் ருெழில் செய்யுஞ் சாரதி யாய்ப், பலருங் கூடி யிருக்கும் யுத்த கள மத்தியில் சென் றிருக்கும் இரதத்தில், பாச மநத்தை யுடைய சீடன் ஆன அர்ஜுனன் உந்நத ஸ்தாநத்தி லிருந்து கேட்கத், தாம் தாழ்ந்த ஸ்தாநத்தில், ஒரு பதம் மடித்து, ஒரு பதம் பொற் றேர் மிதித்து, ஒரு கையிற் கசை குசை பிடித்து, ஒரு கையில் சிந் முத்திரை கொண்டு இருந்து, உபதேசித்தமையே அம் முறை பிறழ் வாம் என உணர்க.

அர்ஜுனனுக்கு ஸ்ரீ கிருஷ்ண பகவான் யுத்தஞ் செய்த லாகிய சுதர்மத்தின்மேல் வைத்து உபதேசித்தார் என்பது,

"மன்னருள் விசயன் கேட்ப வாளம ரதன்மே விட்டு,
மின்னவிர் படைக்கை மாய னுரைத்தமெய்ப் பொருளை" 2.

என்னும் பகவற் கீதைப் பாவாற் சித்த மாம்.

ஞாநம் - சொரூப ஞாநம் என்றும், விருத்தி ஞாநம் என்றும், இரு வகைப்படும். விருத்தி ஞாநமும், பரோக்ஷ ஞாநம் என்றும், அபரோக்ஷ ஞாநம் என்றும் இரு வகைப்படும். அபரோக்ஷ ஞாநமும், அதிட அபரோக்ஷ ஞாநம் என்றும்; திட அபரோக்ஷ ஞாநம் என்றும் இரு வகைப்படும். அவற்றுள், அதிட அபரோக்ஷ ஞாநத்தைச் சந்தேக விபரீதத்தோடு கூடிய ஞாநம் என்றும், திட அபரோக்ஷ ஞாநத்தைச் சந்தேக விபரீதம் அற்ற ஞாநம் என்றும் கூறுவர். இவை யாவும் ஞாநத்தின் பாகுபா டாம். அவற்றுள், ஈண்டு "மெய்ஞ் ஞாநம்" என்றது, திட அபரோக்ஷ (பரமாத்ம ஐக்கிய) தத்துவ ஞாநத்தை என்க.

அந்த மெய் ஞாநத்தின் பகிரங்க அந்தரங்க சாதநங்க ளாவன:- நித்திய அநித்திய வஸ்து விவேகம், இக அமுத்திரார்த்த பல போக விராகம், சமாதி ஷட்க சம்பத்தி, முமுக்ஷுத்வம், சிரவண மநந நிதித்தியாசநம், தத் துவம் பதார்த்த சோதநே, ஸ்தூல சூக்ஷ்ம காரண தேக ரூப பஞ்ச கோச விவேசநம் (9) முதலியன வாம். (2)

செஞ்சமரிற் பந்துசநச் சேதம்வரு மென்றிரங்கி,
அஞ்சினவன் பயந்தீர்த்தே யமர்செய்யச் சொன்னவரோ. (3)

(இ—ள்) செம் - நேர்மை யான (தர்ம நீதி யான), சமரில் - யுத்தத்தில், பந்து சநம் - உறவின ராகிய மனிதர்க்கு, சேதம் - நாசம், வரும் - வந்து எய்தும், என்று - என (க் கருதி), இரங்கி - பரிதபித்து, அஞ்சினவன் - பயந்த அர்ஜுநனது, பயம் - பீதியினே, தீர்த்து - (தத்துவ ஞாநோபதேசத்தால்) நிவிர்த்தித்து, அமர் - (ஸ்வ தர்ம) யுத்தத்தினே, செய்ய - செய்யும் ஆறு, சொன்னவரோ - கூறியருளிய பகவானே (நீர்). (எ-று).



ஏ - அசை. சொன்னவரோ - ஓ - வினு. இவ் வாறு மேல் பாக்களின் ஈற்றில் வரும் - ஓ - வெல்லாம் வினுப் பொருளன எனக் கொள்க.

"சநம் சேதம்" எனப் பாடம் ஓதுவாரும் உளர். அங்ஙனம் ஆயின், "சநஞ் சேத முறும்" என்று இருக்கவேண்டும்.

சமர் - செஞ் சமர் என்றும், கொடுஞ் சமர் என்றும், இரு வகைப்படும். தநுர் வேதத்திலும், அதனைச் சார்ந்த நூலிலும், கூறியபடி நியாய மாகச் செய்யும் சமர் செம் சமர் ஆம். அங்ஙனம் இன்றி, சாஸ்திர விரோத மாய் அநியாய மாகச் செய்யும் சமர் கொடும் சமர் ஆம். இங்குத் தர்மர் முதலியோர் செய்த சமர் செம் சமர் ஆகும். திருதராட்டிரன் புத்திரர் துர்யோதநன் முதலியோர் செய்த சமர் கொடும் சமர் ஆகும்.

அஞ்சினவன் என்றது, துரோணர், கிருபர் முதலிய நம் குருமார்கள், பீஷ்மர், துர்யோதநன் முதலிய நம் குலத்தினர், இவர்கட்குத் துணை யாக வந்த ஏனைய தேசத் தாசர்கள், ஆகிய அனைவரும் தங்கள் தங்களுக் குரிய சுகங்களை இழந்து, நம் பொருட் டாக இப் போர்க் களத்தில் மரணம் அடைவார்கள். இவர்கள் மரணம் அடைவதால், இவர்களால் இரக்ஷிக்கப்பட் டுள்ள அனைவரும் துன்பம் அடைவார்கள். அல்லாமலும், பரம்பரை யாக அநுஷ்டித்து வந்த இவர்க ளுடைய குல தருமம் கெடும். குல தருமம் கெடவே, அந்தக் குலத்தினே அநாசார வடிவம் ஆன அதர்மம் வந்து தன் வசம் செய்து கொள்ளும். அதனல், குல ஸ்திரீகள் அனைவரும் வியபிசாரிகள் ஆவார்கள். அங்ஙனம் ஆகவே, உலகத்தில் பொருந்தியிருக்கின்ற குலம் முழுதும் வர்ண சங்கரம் ஆம். அவ் வர்ண சங்கரம், அக் குலத்தில் பொருந்தி யிருக்கின்ற வருக்கும், அக் குலம் கெடுதற்குக் காரண மாய செய்கைகளைச்

செய்தவருக்கும், கொடிய நரகத்தைப் பயக்கும். அஃ தன்றியும், முன்னமே புண்ணியத்தினல் ஸ்வர்க்கம் அடைந் துள்ள அவர்கள் பிதிர்க்களும், தங்களிடம் வந்து பொருந்தும்படியான பிண்டக் கிரியை, ஜலக் கிரியைகளைச் செய்தற்கு உரிய புத்திரப் பே றின்மையினல், ஸ்வர்க்கத்தினின்றும் நீங்கி இருண்ட நாகத்தில் வீழ்ந்து வருந்துவார்கள். இவ் வாருய அநர்த்தங்கள் யாவுக்கும் நாமே காரணம் ஆனமையினல், நம்மைக் குல க்ஷயஞ் செய்ததனல் ஆம் தோஷம் வந்து பொருந்தி, நரகத்தினிடத்துச் செலுத்தும் என்னும் இவ் வா ருய பற் பல வியாகூல சிந்தையாற் கலக்கம் உற்றனன் என்று கூறுங் கருத்தின ராய், "அஞ்சினவன்" என்றார்.

அர்ஜுநன் அஞ்சினன் என்பதனை,

"இவ்வண்ண மறிவொதுங்க வெழுகின்ற விரக்கத்தாற்,
செய்வண்ண மறியாது திகைத்திருந்த தேர்விசய,
னுய்வண்ண மதுநாடி யொருவண்ண முலகோதுங்,
கைவண்ண மலருடைய கார்வண்ணன் கட்டுரைப்பான்."

— பகவற் கீதை 2—1.

"ஆயா தவர்க்கு மலிகட்கு மடுப்ப தழியாப் பழியுனது,
தேயா வறிவைத் தேய்ப்பதறச் சிறுமை களிலே சிறுமையது,
சாயா நரகத் திடைசாயப்ப துன்போல் பவர்க்குத் தகுதியன்றீ,
தேயா நிலத்தே யுனையையா வெவ்வா றடைந்த தெனவறியேன்."

— பகவற் கீதை. 2—2.

"ஒவ்வாதி தொழிந்தமர்மே லொருப்படுகென் றுருக்கரிய
செவ்வாயன் திருமொழிய"

— பகவற் கீதை. 2—3.

என இதன் முத நூ லாகிய பகவற் கீதை கூறி யிருப்பது கொண்டு உணர்க.



"நிவிர்த்தித்து" என்றது, முன் ஆறு அத்தியாய ரூப கர்ம காண்டத்தினல், க்ஷத்திரிய தர்ம மாகிய யுத்தத்தினைச் செய்யாமையினல், உள வாம் பாப நிவிர்த்திக்காக அவசியம் செய்ய வேண்டும் என்றும், மத்திய ஆறு அத்தியாய ரூப பக்தி காண்டத்தினல், சூத்திரதாரி சூத்திரத்தினல் ஆட்டுகிறபடி, பாவை ஆடுகிறது, அது போல், புண்ணிய பாப ரூப சூத்திரத்தினல் சீவர்களை ஆட்டுகிற சூத்திரதாரி ரூப பகவ னகிய நான் ஆட்டுகிறபடி, பாவை நிலையி லுள்ள நீ ஆடி, அதன் பலனை வாசுதேவ னகிய எனக்கு அர்ப்பணம் செய்யில், பாப புண்ணிய சம்பந்தம் உனக்கு இல்லை என்றும், பின் ஆறு அத்தியாய ரூப ஞாந காண்டத்தினல், கருவி காணுதிகள் தொழில் செய்கின்றன. நிஷ்கிரிய ஆத்மா ஒன்றும் செய்வ தில்லை. தேகங்கள் அழிவன. ஆத்மா அழி வற்றது என்றும் கூறியருளி, இங்ஙன் காண்டத் திரயங்களினலும் அர்ஜுநனது பயத்தை நீக்கி என்ப தாம்.

ஸ்வ தர்மம் என்பது — க்ஷத்திரியனுக்கு யுத்தம் செய்வதே தனது கடமை என்பதை உணர்த்துவ தாம். (3)

சுற்றமறிற் சோகமெனச் சொல்லினைசற் றறிந்தவன்போல்,
கற்றுணர்ந்த பேரதனுற் கலங்கார்கா ணென்றவரோ. (4)

(இ—ள்.) சுற்றம் - உறவினரும் (மற்றைய ஜநங்களும்), அறில் - நாசம் உறில், சோகம் - (அதனல் எனக்குத்) துக்கம் (உண்டாம்), என - என்று, அறிந்தவன் போல் - (சகலமும்) தெரிந்த பண்டிதன் போல, சற்று - சிறிது, சொல்லினை - கூறினுய், அதனல் - (சுற்றத்தவர்கள் நாசம் உறுத லாகிய) அவ் வேதுவினல், கற்று - (குரு சந்நிதியில் சாஸ்திரங்களைச் செவ்வனே) படித்து (ஆராய்ந்து), உணர்ந்த பேர் - (பிரஹ்மத்தைச்) சாக்ஷாத்

கரித்த ஞானிகள், கலங்கார் - (மநச்) சலந முறார், என்றவரோ - என்று உபதேசித்தருளிய பகவானே (நீர்), (எ-று).

காண் - முன் னிலை யசைச் சொல்.

துஷ்ட நிக்கிரகத்தின் பொருட்டு, க்ஷத்திரியன் ஸ்வ தர்மம் ஆன யுத்தம் செய்ய வேண்டும் என்றும், அதனால் உண்டாம் கொலை முதலியவற்றால் பாபம் அவனை வந்து சாராது என்றும், தர்ம சாஸ்திரங்கள் கூறுவதனை உணர்ந்திருந்தும், தேகங்கள் அழிவன, தேகி அழி வற்ற நித்தியம் என்னும் பகுத் தறி வற்று யுத்தத்தினால் துர்யோதநாதி சுற்றத்தார் இறப்பர் என்றும், அதனால் உனக்கு நரக துன்பம் உண்டாம் என்றும், மயக்கத்தாற் கூறுகின்றாய் என்பார், "சற்று அறிந்தவன் போல்" என்றார்.

ஓர் அவஸ்தையில், வேறு ஓர் அவஸ்தை நிலைபெறாது கெடு கின்றமையின், அவஸ்தாத் திரயங்களும், அவஸ்தாத் திரயப் பிரபஞ்சங்களும், எவ் வித ஏதுக்களினாலும் நிலைபெறாது அழியத் தக்கன எனவும், சுத்தி - ரஜதம், கானல் - ஜலம் போன்று பொய் யெனவும், ஆத்மா, அவஸ்தாத் திரயங்களும், அவஸ்தாத் திரயப் பிரபஞ்சப் பொருள்களும் நிலைபெறாது அழியினும், தான் அவற்றின் அழிவை விகாரம் இன்றிச் சாக்ஷி மாத்திர மாக அறிந்து கொண்டிருத்தலின், எக் காலத்தினும், எவ் வேதுக்களினாலும், அழிவு பெறாத நித்தியமா யுள்ள சத்தியப் பொருள் என்றும், சுருதி யுக்தி அநுபவங்களால் அபரோக்ஷ மாக அறிந்து, அந்த "ஆத்ம சொரூபமே நாம்" என்று இருக்கும் பெரியோர்கள், தமது சரீரத் தின் நாசத்திற்கும், தம் சுற்றத்தா ராகிய ஏனையோர் சரீரத்தின் நாசத்திற்கும், மநக் கலக்கம் அடையார் என்பார் "கற்று உணர்ந்த பேர் அதனால் கலங்கார்" என்று கூறினார்.



இதனை பகவற் கீதை 2-வது அத்தியாயம் 10-வது சுலோ கத்தில்,

**अशोच्यानन्वशोचस्त्वं प्रज्ञावादांश्च भाषसे ॥**
**गतासूनगतासूंश्च नानुशोचन्ति पण्डिताः ॥ २-१० ॥**

இதன் பொருள் — "நீ துக்கிக்க வேண்டாதவரைப் பற்றித் துக்கப்படுகிறாய். ஞாந வார்த்தைகளையும் பேசுகிறாய். ஞாநிகள், உயிர் போனவரையும், உயிருடன் வாழ்பவரையும், பற்றித் துக்கி யார்" எனவும்,

"அன்னவர்கள் சோகிதரெ னவமுத லாலும்,
பன்னவரி யோர்கண்முறை யேபகர்த லாலும்,
மன்னமய லேறியண்ம யங்கினைகொல் வாயா,
தின்னதொழி லானதைம றந்திடிவை யுங்கேள்".

— பகவற் கீதை. 2—12.

"மாயுமவ ராலுமுயிர் வாழுமவ ராலு,
மாயமறி வோர்களழி யாமையறி யாயோ".

— பகவற் கீதை. 2—13.

என இதன் முதல் நூலிலும் கூறியிருத்தல் காண்க. (4)

கலங்காரோ விறப்புவரிற் கற்றுணர்ந்த பேரேனு,
மலங்காம ஞனிருக்கும் வகையுரையு மேனவினவ. (5)

(இ—ள்.) கற்று - (குரு முக மாக ஞாந சாஸ்திர அர்த்தங் களைச் செவ்வனே) ஆராய்ந்து, உணர்ந்த - (பிரத்திய கபிந்த பிரஹ் மத்தைச்) சாக்ஷாத்கரித்த, பேரேனும் - ஞானிகளா யிருப்பினும், இறப்பு - (சுற்றத்தார்களுக்கு, அல்லது, தனக்கு) மரணம், வரில் -

வருமிடத்து, கலங்காரோ - பயப்படமாட்டார்களோ?, [அங்ஙன மாயின், அவ் வுபாயத்தினை அடியேனுக்கு உபதேசிக்க வேண்டு மேன்று அர்ஜுநன் கேட்கின்றன்.] நான் - (அங்ஙன மாயின் அவர்கள் போல்) அடியேனும், மலங்காமல் - கலக்கம் உருமல், இருக்கும் - இருக்கும்படியான, வகை - உபாயத்தினை, உரையும் - உபதேசித்தருள்வீ ராக, என - என்று, வினவ - (அர்ஜுநன்) கேட்க, (எ-று).

'நான்' என்பதன் ஈற்றில் உள்ள இறந்தது தழீய எச்ச வும்மை செய்யுள் விகாரத்தால் தொக்கது.

'பேரேனும்' என்ற உம்மை - உயர்வு சிறப்பு.

கலங்காரோ - ஓ - வினு. ஆகார எதிர்மறை இடை நிலை தொக்கது.

'வரில்' என்னும் வினை யெச்சம், "கலங்காரோ" என்னும் வினை முற்றுக் கொண்டது.

அர்ஜுநன் என்னும் தோன்று எழுவாய், 'வினவ' என்னும் வினை யெச்சங் கொண்டது.

'வினவ' என்னும் செய வென் வாய்பாட்டு வினை யெச்சம், பிற கர்த்தாவினை யடியாகப் பிறந்த வினையா லணையும் பெயர் கொண்டது.

கற்றுணர்ந்த பேர் - எழுவாய். கலங்கார் - பய னிலை. (5)

[எவரும் பிறந்து இறப்பது இல்லை எனல்.]

நீயுநா னும்புவிமே னிருபர்களு மேய்யுணர்வால்,
ஆயுங்காற் பிறந்திறப்ப தார்க்குமிலை யேன்றவரோ. (6)

(இ—ள்.) மெய் உணர்வால் - உண்மை யுணர்ச்சி கொண்டு, ஆயுங்கால் - விசாரிக்குமிடத்து, நீயும் - (அர்ஜுநனுகிய) நீயும், நானும் - (பகவானுகிய) யானும், புவி மேல் - இப் பூவுலகில் (உள்ள), நிருபர்களும் - முடி மன்னர்களும் (இன்னும்), ஆர்க்கும் - (எனேச் சேதந சீவர்க ளாகிய) எவர்க்கும், பிறந்து - ஜநித்து, இறப்பது - மரிப்பது (ஆகிய தொழில்), இலை - இன்று, என்றவரோ - என்று கூறி யருளிய பகவானே? (நீர்). (எ-று).



ஆரும் என்பது, யாரும் என்பதன் விகாரம்.

ஆர்க்கும் - என்ற உம்மை முற் றும்மை. நீயும் - நானும் - நிருபர்களும் - என்ற உம்மைகள் எண்ணுப் பொருளில் வந்தன. இறப்பது - தொழிற் பெயர்.

ஆயுங்கால் என்னும் தெரி நிலை வினை யெச்சம், இலை என்னும் குறிப்பு வினை கொண்டது.

பிறத்தல் - சீவன் பிராரப்த வசத்தால் ஒரு தூல சரீரத்தினை எற்றல்.

இறத்தல் - சீவன் பிராரப்த வசத்தால் எற்ற தூல சரீரத் தைக் கர்ம ஒழிவில் விட்டுப் பிரிதல்.

"எவரும் பிறந் திறப்ப தில்லை" என்பதனை,

"சாவதிலை யாவர்களும்" — பகவற் கீதை. 2—11.
என்பதனுல் உணர்க. (6)

ஈங்கெவர்க்கும் பிறந்திறப்ப தில்லையேன்றீ ரிவ்வுலகில்,
நீங்குபவ மார்க்கிதனை நிச்சயமாய்ச் சோல்லுமேன. (7)

(இ—ள்) ஈங்கு - இவ் வுலகத்தில், பிறந்து - ஜநித்து, இறப்பது - மரிப்பது, எவர்க்கும் - யாவர்க்கும், இல்லை - இல்லை, என்றீர் - என்று உபதேசஞ் செய்தீர், இவ் வுலகில் - (அங்ஙன மாயின்) இப் பூ லோகத்தில், பவம் - ஜநித்தலும், நீங்கு - மரித்த

ஆம், ஆர்க்கு - எவர்க்கு, இதனை - இவ் விஷயத்தினை, நிச்சயம் ஆய் - (உள்ளபடி) உறுதி யாக, சொல்லும் - உபதேசஞ் செய்யும், என - என்று (அர்ஜுனன் பகவானிடத்து) விண்ணப்பிக்க. (எ-று).

"ஈங்கு" நீட்டல் விகாரம். "நீங்கு" முத னிலைத் தொழிற் பெயர். எவர்க்கும் - உம் - முற்று. யார்க்கு என்பது, ஆர்க்கு என விகார மாயிற்று.

(7)

இத்தரையிற் பிறந்திறப்ப தெடுத்தவுடற் கடுத்தபொறி,
நித்தியமா கியவாங்மா நின்சொருப மென்றவரோ. (8)

(இ—ள்.) இத் தரையில் - இப் பூ மண்டலத்தில், பிறந்து - ஜனித்து, இறப்பது - மரிப்பது, எடுத்த - (முற் சென்ம கர்மாதீனப் படி) தாங்கிய, உடற்கு - சரீரத்திற்கு, அடுத்த - கிட்டிய, பொறி - தன்மை யாம், [ஆயின் என் ஸ்வரூபம் யா தெனிற் கூறுகின்றார்.] நின் - உன் னுடைய, சொருபம் - (யதார்த்த) ஸ்வரூபம், நித்தியம் ஆகிய - நாசம் இன்றிய தாய, ஆங்மா - ஆத்மா வே யாம், என்றவரோ - என்று உபதேசித்த பகவானோ (நீர்), (எ-று).

'ஆங்மா' என்பத னிறுதியில் தேற்றம், அல்லது, பிரி நிலை ஏகாரம் விகாரத்தாற் றொக்கது.

'பொறி' என்பது ஈண்டுக், குறி, அல்லது, குணம். அதாவது, இயல்பு அல்லது, தர்மம் ஆம்.

பிராக் அபாவம், பிரத்தொம்ச அபாவம், அந்யோந்ய அபாவம், அத்யந்த அபாவம் என்னும் நான்கு அபாவங்களும் இன்றிச் சதோதிதமா யிருப்பது என்பார், "நித்தியம் ஆகிய ஆங்மா" என்றார்.

ஈண்டுப் பிராகபாவம், பிரத்தொம்சாபாவங்களுக்குப் பிரதி யோகியாகாதது, நித்திய மாம். நித்தியம் எதுவோ, அது



பரிச்சிந்ந மற்றதா யிருக்கும். சர்வாங்மகத் தன்மை யாகிய, வஸ்து பரிச்சேத மற்ற தன்மையை, அந்நியோந்நியாபாவ மற்ற தன்மையினாலும், வியாபகத் தன்மை யாகிய தேச பரிச்சேத மற்ற தன்மையை, அத்தியந்தாபாவ மற்ற தன்மையினாலும் அறிக.

இறத்தல் பிறத்த லாதி தர்மங்கள் உடற்கே யன்றி ஆங்மாவுக் கில்லை என்பதை,

"பொன்றுவது டம்பதனு ணின்றபொருள் பொன்று
தென்றுமொரி யற்கையொடு நிற்குமியல் பைக்கேண்
முன்றொடர்ம கப்பருவம் விட்டிளமை மூப்போ
டொன்றுமுட லாயினுமு யிர்க்கியல்ப தன்றால்."

— பகவற் கீதை. 2—14.

"அன்னவகை யாலுருவ ழிந்துவரு மாங்கே
என்னுருவ மாமறிவி றந்துபிற வாதால்."

— பகவற் கீதை. 2—15.

என்பதனால் உணர்க. (8)

அங்கமுயி ரிந்தியநா னன்றிவே றெனைக்காணேன்,
இங்குயான் வேறுண்டே லெனக்கறியப் புகலுமென. (9)

(இ—ள்.) நான் - நான் (என்னும் பதப் பொரு ளாய எனது ஸ்வரூபம்), அங்கம் - (தூல) சரீரமும், உயிர் - (பஞ்சப்) பிராண னும், இந்தியம் - (தச) இந்திரியங்களும் (ஆகிய இவைகளே), அன்றி - அல்லாமல், வேறு - (இவற்றிற்கு) அந்நிய மாக, எனை - எனது ஸ்வரூப மாக (நீவிர் கூறிய நித்திய மாகிய ஆங்மா என்னும்) ஒன்றை, காணேன் - அறிந்திலேன், இங்கு - ஈண்டு (இந்தக் கட்டத் தில், அதாவது இந்தச் சந்தர்ப்பத்தில்), யான் - நான் (என்னும் சொல்லுக்குப் பொரு ளான அத் தகைய ஆத்ம ஸ்வரூபம்), வேறு -

(இவற்றிற்கு) அந்நிய மாக, உண்டேல் - (ஒன்று) இருக்கு மாயின், எனக்கு - அடியேனுக்கு, அறிய - தெரியும்படி, புகலும் - (அதனை) உபதேசஞ் செய்யும், என - என்று (அர்ஜுநன்) விண்ணப்பிக்க. (எ-று).

" அங்கம், உயிர், பிராணன், இந்தியம் '' என்பவற்றில், எண்ணும்மைகள் செய்யுள் விகாரத்தால் தொக்கு நின்றன. (9)

மெய்யுயிரிந் தியங்களல்லால் வேறறியே னென்றவனைப்,
பையவவை யாலறியப் படானுநீ யென்றவரோ. (10)

(இ—ள்.) மெய் - (தூல) சரீரம், உயிர் - (பஞ்ச) பிராணன், இந்தியங்கள் - (தச) இந்திரியங்கள், அல்லால் - (ஆகிய இவைகளே நா ஞக விளங்குகின்றனனே) அன்றி, வேறு - (இவற்றிற்கு) அந்நிய மாக, அறியேன் - (எனது ஸ்வரூபத்தினை) யான் அறிந்திலேன், என்றவனை - என்று கூறிய அர்ஜுநனை (ப் பார்த்து), பைய - குழந்தாய், அவையால் - அச் சரீர இந்திரியப் பிராணாதிகளால், அறியப்படானும் - உணரப்படாதவனும், நீ - நீ யாவாய், என்றவரோ - என் றருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

" அறியப்படானும் '' என்ற எச்ச உம்மையால், சரீர இந்திரியப் பிராணாதிகளை யறிபவனும், அவற்றிற்கு விலக்ஷணனும், நீ என்பதனை உபதேசஞ் செய்தன ரெனக் கொள்க.

" வேறறியேன் - என்றவர் '' இரண்டும் தெரி நிலை வினையாலணையும் பெயர்கள். பைய - விளி.

படானும் - படாதவனும் என்பதன் விகாரம்.

படாதவன் - செயப்பாட்டு வினையா லணையும் பெயர்.

" அவையால் அறியப்படான் '' என்று இங்குக் கூறியிருப்பது போலவே,



பிரஹ்ம கீதை 4-து அத்தியாயம் கோ உபநிஷதார்த்தம் 7-வது கவியில்,

" வாக்குமனங் கண்செவியான் மன்னினின்ற பிராணனினுல்,
நீக்கியுள கரணத்தா னின்மலன்கோ சரிக்கவுருன்.'' (4—7)

என்று கூறியிருப்பது காண்க. (10)

தேகம்வே ருகிலதைச் சேர்ந்ததிவ ணேதேனவே,
சோகமே விளைகருமத் தொடர்ச்சியினு லென்றவரோ. (11)

(இ—ள்.) தேகம் - சரீரம், வேறு ஆகில் - (எனது ஸ்வரூபத்திற்கு) அந்நிய மாகு மாயின், அதை - அந்தச் சரீரத்தினை, இவண் - இவ் விடத்து, சேர்ந்தது - (அவ் ஆத்மா) சம்பந்தித்தது, ஏது - எப்படி, என - என்று (அர்ஜுநன் கேட்க), [விடை அருளிச் செய்கின்றர்.] சோகமே - (ஜநந மாரணாதிகளின் வாயிலாய்) துன்பமே, விளை - உண்டாக்குகின்ற, கரும - (பூர்வ புண்ணிய பாவ) கருமங்களின், தொடர்ச்சியினுல் - சம்பந்தத்தினுல், என்றவரோ - (அவ் ஆத்மா சரீரத்தினைச் சம்பந்தித்தது) என்று அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).
ஏ - அசை. ஏது - நீண்ட வினு.

" சோகமே '' என்பதில், ஏ காரம் தேற்றப் பொருளில் வந்தது. பிரிநிலையு மாம். என்னை? சச்சிதாநந்த சொரூப மாகிய பிரஹ்மாபிந்ந ஆத்மாத் தவிர, அநாத்மா வாய காரிய சகித அஞ்ஞாந மனைத்தும் அசுத்த, சட துக்க மெனச் சுருதி கூறுகின்றமையினுனும், கட்டையிற் கள்ளன் போலத், துக்க மய மான பிரபஞ்சத்தில், சுக உணர்ச்சி பிராந்தி யாதலினுனும், உண்மைச் சுகம் சிறிது மின்றித் துக்கமே யுள்ளது எனச் சுகத்தினின்றும் பிரித்துக் காட்டுதலின் என்க.

"சோகம்" என்பது, சோகத்தை என்பதி லுள்ள அத்துச் சாரியையும், இரண்டாம் வேற்றுமை ஐ உருபும் தொகப் பெற்று நின்றது.

"விளை கருமம்" வினைத் தொகை. அது விளைக்கின்ற கருமம் என விரியும். விளைக்கின்ற என்னும் பிற வினை யடியாகப் பிறந்த நிகழ் காலப் பெய ரெச்சம், கின்று என்னும் நிகழ் கால இடை நிலையும், அ என்னும் பெய ரெச்ச விகுதியும் தொக்கு முத னிலை மாத்திர மாய் நின்றது. சேர்ந்தது - சேர்ந்த சேர்க்கையைக் குறித்தலின் தொழிற் பெயர்.

வர்ணச்சிரமிகட்கு வேதங்களாற் பிரவிருத்தி, அல்லது, நிவிர்த்தி ரூப மாகப் போதிக்கப்படுவது கன்மம் ஆம். வேதங்களாற் போதிக்கப் படாத ராகத் துவேஷ மின்றிய கமந ஆகமந (போதல், வருதல்) சௌசாதி உதாசீநக் கிரியைகள் கர்மம் அன்றும். கர்மமும், பிரவிருத்தியைப் போதிக்கிற விகித கர்மம் எனவும், நிவிர்த்தியைப் போதிக்கிற நிஷித்த கர்மம் எனவும் இரு வித மாகும். விகித கர்மமும், நித்தியம் - நைமித்திகம் - காமியம் - பிராயச்சித்தம் என நான்கு பிரகார மாகும் என உணர்க.

வேத விகித சகாம கர்மமும், நிஷேத கர்மமும், ஜன்ம மாண துக்கங்களையே உண்டாக்குவதற்கு நிமித்த மாம் அன்றிச், சம்சார நிவிர்த்தி யாகிய சித்த விசிராந்தியை உண்டாக்குவதற்குக் காரணம் ஆகாமையின் அவற்றைக் குறிப்பான், "சோகமே விளை கருமம்" எனச் சோகத்திற்குப் பிரி நிலையும் தோற்றமு மாகிய ஏகாரங் கொடுத்துக் கூறினர் எனக் கொள்க.

(11)

தேகமேடா முன்கருமச் செயல்வருமா றேதெனவே,
ஏகமா மரமும்வித்து மேனுமுறைபோ லேன்றவரோ. (12)



(இ—ள்.) தேகம் - சரீரம், எடா - எடுத்தற்கு, முன் - பூர்வம், கருமச் செயல் - (சரீரத்தால் நிகழத் தக்க புண்ணிய பாவ ஏது வான) கருமங்க ளாகிய தொழில், வரும் ஆறு - வரும் வழி (விதம்), ஏது - யாது, என - என்று அர்ஜுனன் வினவ, [சமாதாநங் கூறுகின்றர்.] வித்தும் - (காரிய மரத்திற்கு அதனை யுண்டாக்கிய) பீஜமும், மரமும் - (அப் பீஜமும் மரத்தின் காரியமாதலின், அதற்கு அதனை யுண்டாக்கிய) விருக்ஷமும், எனும் - (நிமித்த மாம்) என்று கூறப்படுகின்ற, ஏக மாம் - (இவ் விதம் பின்னுள்ள காரியங்கட்கு, முன் முன் னுள்ளவை காரணங்க ளாக மாறுத லின்றித் தொடர்ந்து எல்லை யற்றுச் செல்கின்ற) ஒரே தன்மைத் தாகிய, முறை - கிரமம் (பீஜாங்குர நியாயம்), போல் - போல (த் தேகத்திற்கு முன் வினையும், அவ் வினைக்கு அதன் முன் னுள்ள தேகமும், நிமித்த மாக எல்லை யின்றித் தொடர்ந்து செல்லும்), என்றவரோ - என் றருளிச் செய்த பகவானோ (நீர்), (எ-று).

மரம், முன் வித்தாலும், அவ் வித்து, முன் மரத்தாலும் உண்டாவன வாய் முடி வின்றித் தொடர்ந்து செல்லும் முறையைப் பீஜ அங்குர நியாயம் என்பர்.

தார்ஷ்டாந்தத்தில் தேகம் முன் கர்மத்தாலும், அக் கர்மம் முற் சரீரத்தாலும் ஆம் என, இவ் வாறு காரிய காரணங்கள் எல்லையின்றித் தொடர்ந்து செல்லுதலின், இத் தேகத்திற்கு, முற் சரீரத்தில் செய்த கர்மம் காரணம், முன் செய்த கருமத்திற்கு, அதற்கு முன் னுள்ள தேகம் காரணம் என இவ் வாறு தேகமும், கர்மமும், பின் பின்னவைக்கு, முன் முன்னவை காரணம் ஆம் என விரித்துப் பொருள் கொள்க.

இத் திட்டாந்த தாட்டாந்தங்களில் முறையே மர நிலையில் தேகமும், வித்து நிலையில் கருமமும் உள்ளமை அறியத் தக்கது.

மாரமும் வித்தும், பின் பின் னுள்ள காரியங்கட்கு, முன் முன் னுள்ளவை நிமித்த மாக எல்லை யின்றித் தொடரச் செல்லும் இக் காரிய காரண தாரை, அல்லது முறை, பிறழ் வின்றி ஒரே படித்தா யிருத்தலின், அதனைக் குறிக்க வேண்டி அம் முறைக்கு "ஏக மாம்" என்னும் அடை கொடுக்கப்பட்ட தென அறிக.

எடா - ஈறு கெட்ட எதிர் மறைப் பெய ரெச்சம், முன் என்னும் காலப் பெயர் கொண்டு, ஒரு சொல்லாய் நின்று, 'வருதற்கு முன்' என்னும் பொருள் தந்தது. "வரு முன்னர்க் காவாதான்" என்பது போலும்.

கருமச் செயல் - பண்புத் தொகை. எனவே - ஏ - அசை நிலை. மாரமும், வித்தும் - உம் - இரண்டும் எண்ணுப் பொருளன. ஏது - நீண்ட வினா. தாட்டாந்தம் இசை யெச்சத்தால் வருவிக்கப் பட்டது. (12)

காயமுந்தா னும்பிறிதேற் கன்மமேவர் செய்ததெனத்,
தீயவுடற் கலதுகன்மச் செயறனக்கே தென்றவரோ. (13)

(இ—ள்.) காயமும் - சரீரமும், தானும் - (தான் என்ப தாகிய) ஆத்மாவும், பிறிதேல் - வெவ் வே றாயின், கன்மம் - (தீய, நல்ல) செயல்கள், எவர் - யாவர், செய்தது - செய்தனர், என - என்று அர்ஜுனன் கேட்க, [அதற்குப் பகவான் சமாதாநங் கூறு கின்றார்.] கன்மச் செயல் - அத் தீ வினை நல் வினை யாகிய தொழில் கள், தீய - குற்றம் பொருந்திய, உடற்கு - சரீரத்திற்கே, அலது - அன்றி, தனக்கு - (ஆத்மா வாகிய) தனக்கு, ஏது - எப்படி (ஆம்). (இல்லை என்றபடி), என்றவரோ - என் றருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

"எவர் செய்தது" என்பதில், "செய்தனர்" என உயர் திணை முற்றை ஏற்காமையின் வழு வமைதி யாகக் கொள்க.



காயமும், தானும் - உம் - இரண்டும் எண்ணுப் பொருளன.

ஏது - என்னும் வினா ஈண்டு எதிர் மறைப் பொருளது.

ஆன்மா - என்பது கடவுள் என்பது போன்று இரு திணைக்கும் பொது. உதாரணம்:- அஃறிணை - பரமாத்மா ஜகத் காரணமா யுள்ளது. உயர் திணை - பரமாத்மா வானவன் ஜகத் காரணன், நித்தியன். எனவே ஈண்டு உயர் திணை யாகிய ஆன்மாவோடு அஃறிணை யாகிய தேகத்தைச் சேர்த்து வினவும் போது, ஆன்மா வின் சிறப்புப் பற்றித் தேகத்தையும், அதில் அடக்கி, உயர் திணை வினையால் உயர்த்தற்கட் பன்மை யாக, 'எவர்' என வினவுகின்றார் என்க. அல்லது, ஆத்மா தேகம் இரண்டையும் அஃறிணை யாக வைத்து, இவற்றுள் எதற்கு என வினவ வேண்டிய விடத்து, எவர்க்கு என்று வினவியது திணை பால் வழு வமைதியா மென்க.

தூல சூக்கும உடல்கள், அநாத்மா வாதல் பற்றி, அசுத்த, சட, துக்க, அநித்தியம், நரை, திரை, மூப் பாதி அவஸ்தைகள், ஷட் பாவ விகாரம், இராகத் துவேஷாதி தோஷங்களை யுடைமை யின், அவற்றை யறிவிப்பான், அதற்குத் "தீய" என்னும் அடை கொடுக்கப்பட்டது. (13)

படர்கரும முடல்செய்யிற் பலமுறுவ தார்க்கெனவே,
அடர்பலமு முடற்கேயா மறிவார்க்கே தென்றவரோ. (14)

(இ—ள்.) படர் - விரிந்த, கருமம் - (சுபாசுபக்) கிரியைகள், உடல் - சரீரம், செய்யில் - இயற்றுமாகில், பலம் - (அவற்றின் புண்ணிய பாவ) பலன்களை, உறுவது - அடைதல், ஆர்க்கு - எவர்க்கு (உரியது), என - என்று அர்ஜுனன் வினவ, [உத்தரங் கூறுகின்றார்.] அடர் - நெருங்கிய, பலமும் - (புண்ணிய பாவ) பயன்களும், உடற்கே யாம் - சரீரத்தினுக்கே யாகும், அறிவார்க்கு - (சாக்ஷி ரூப) ஆத்மாவிற்கு, ஏது - எப்படி (ஆம்) (இல்லை

என்றபடி), என்றவரோ - என் றருளிச் செய்த பகவானே (நீர்); (எ-று).

'பலமும்' என்ற உம்மை - இறந்தது தழீஇய எச்சம். எனவே - ஏ - அசை நிலை. உறுவது - தொழிற் பெயர். "யார்க்கு" என்பது, ஆர்க்கு எனத் திரிந்து நின்றது. எது - நீண்ட வினா. அறிவார்(க்கு) - தெரி நிலை வினையா லணையும் பெயர்.

கடம் முதலியவற்றைச் செய்வதனால் வரும் இலாப நஷ்டங்கள், அவற்றைச் செய்யும் குலாலனை அடையும் அன்றிக், குலாலனாற் செய்யப்படும் குடம் முதலியவற்றையும், அங்கு அதனை விநோத மாகப் பார்த்துக் கொண்டு இருப்பவர்களையும், அடையாமை போலக், கன்மங்களைச் செய்வதனால் உண்டாம் பயன்கள், கன்மங்களைச் செய்வ தாகிய சரீரத்தினை அடையுமே அன்றிச், சரீரத்தாற் செய்யப்படுங் கன்மங்களையும், அங்கு இவற்றிற்குச் சாக்ஷி மாத்திரமா யிருக்கும் ஆத்மாவையும், அடையா என்பது தாற்பரியம். (14)

வெய்யவினை யுடற்கென்றால் மெய்யிங்கே விழவாங்மா,
ஐயமற நரகசொர்க்க மநுபவிப்ப தேதேனவே. (!5)

(இ—ள்.) வெய்ய - கொடிய, வினை - (அக்) கருமங்களின் (பலன்கள்), உடற்கு - சரீரத்திற்கு (உரிமை), என்றால் - என்று கூறின், மெய் - (தூல) சரீரம், இங்கே - இவ் வுலகத்திலே, விழ - (பிண மாகி) விழுந்து போக, ஆங்மா - (சேஷித்திராநின்ற) ஆத்மா, ஐயம் - சம்சயம், அற - இன்றி, நரக - (அக் கர்ம பலமாகிய) நரக (துன்ப)த்தினையும், சொர்க்கம் - ஸ்வர்க்க (இன்ப)த்தினையும், அநுபவிப்பது - (சென்று) நுகர்வது (என்பது), எப்படி (ஆம்), என - என்று அர்ஜுநன் வினவ, (எ-று).



இங்கே - ஏ - அசை நிலை. ஏ - ஈற்று அசை, வினை - லாக்ஷணிக பத மாம். அதாவது, ஆகு பெயர்.

நல் வினை தீ வினை யாகிய காமிய கர்மங்கள், தம் பல போகத்தை யளிப்பான், அவற்றிற் கேற்ற பந்த ரூப மான ஜந்மங்களைக் கொடுத்தலால், முக்திப் பிரதிபந்தக மாதலின், அவ் வினைகளை 'வெய்ய வினை' என அடை கொடுத்துக் கூறினார் ஆசிரியர்.

"ஐயம் அற அநுபவிப்பது" — சட மாகிய உடலுக்கு அநுபவ மாகிய ஞாநம் சிறிதும் பொருந்தாமையினானும், தேகம் இங்கே பிண மாகி விழுந்து அழிந்துவிடல் பிரத்தியக்ஷ மாதலினானும், உலகத்தில் "இவன் பூர்வ புண்ணியத்தால் அட்ட ஐசுவர்யத்தோடு சுகத்தை யநுபவிக்கின்றான்" என்றும், "இவன் பூர்வஞ் செய்த பாபத்தால் அட்ட தரித்திரனாய்த் துக்க மநுபவிக்கின்றான்" என்றும் கூறப்படுகின்ற இத் தகைய பல உலகாநுபவங்களினானும், சாஸ்திரங்களில் இன் னின்ன தருமங்களை, அல்லது, தவங்களைச் செய்வோர், உடல் நீத்த பின், இன் னின்ன பதவிகளை அடைவார்களென்றும், கூறுகின்றமையின், சுக துக்காநுபவம் உடலுக்கு ஒரு போது மின்று; ஆங்மாவுக்கே என்பதிற் சிறிதும் சந்தேக மில்லை; என்பதை யுணர்த்த "ஐய மற" என்னும் அடை அநுபவத்திற்குக் கொடுக்கப்பட்ட தென்க.

இதனால், அர்ஜுநன் உடல் என்னும் பதத்திற்குத் தூல சரீர மாத்திர மாக அர்த்தங் கொண்டு கேட்கின்றான் எனத் தெரிகிறது. இதற்கு விடை யாக வுள்ள அடுத்த பாட்டில், பகவான் "தநு கரணச் செயல் தன தாச் சார்வது போல்" என்று விடை கூறுகின்றமையின், உடல் என்னும் பதத்தால், தூல சூக்ஷும தேக மிரண்டினையும் சேர்த்தே சொல்கின்றார் என அறிக. (15)

அநுபவமே யிலையதுவீ ணாரோபி தநிகழ்த்தில்,
தநுகரணச் செயறனதாச் சார்வதுபோ லென்றவரோ. (16)

(இ—ள்.) அது - (ஆன்மா நரக சொர்க்க மநுபவிக்கிறது என்னும்) அவ் வுலகாநுபவம், நிகழ்த்தில் - புகலு மிடத்து, அநுபவமே இலை - (உண்மை) அநுபவமே யின்று (பின்னர்), தநு - (ஸ்தூல) சரீரத்தினதும், கரண - (இந்திரிய அந்தக்) கரணங்களினதும், செயல் - (ஆகிய) தொழில்கள், தனது ஆ (க) - தன்னுடைய தொழில்க ளாக, சார்வது போல் - (அத்தியஸ்த மாய்ப்) பொருந்தித் தோற்றுவது போல, வீண் - வியர்த்த மான (பயனற்ற), ஆரோபிதம் - அத்தியாசத் தோற்ற மாம் (பொய்த் தோற்ற மாம்), என்றவரோ - என் றருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

அநுபவமே - ஏ - தேற்றம். இலை - இல்லை என்பதன் விகாரம்.

தனது - பன்மையில் ஒருமை மயங்கிற்று.

செயல் - பால்பகா அஃறிணைப் பெய ராகலின், ஒருமை பன்மை கட்குப் பொது. இங்கே கரணங்கள் பல வாகலின், செயல்களும் பலவே. ஆகவே, செயல் ஈண்டுப் பன்மைபாலது.

ஆரோபிதம் - தனது அபாவ அதிகரணத்தில், தனது அவபாசம் (தோற்றம்), அல்லது, அதிஷ்டாநத்தினும் விஷம சத்தையுடைய வேற்றுச் சொரூபம். உதாரணம் - இரச்சுவில் சர்ப்பம், சுத்தியில் வெள்ளி முதலியன.

கரணம் - சுரோத்திரம், துவக்கு, சக்ஷுா, சிஹ்வை, கிராணம் என்னும் ஞானேந்திரியங்களும், வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம் என்னும் கர்மேந்திரியங்களும் ஆகிய பாகிய இந்திரியங்கள், மநம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்னும் அந்தக் காரணங்கள், இவை சூக்ஷ்ம சரீரத்திற் சேர்ந்தவை. சுரோத்திராதியவற்றின் தொழில் - கேட்டல் முதலியன. வாக்காதிகளின் தொழில் - வசநித்தல் முதலியன. மந மாதிகளின் தொழில் - நினைத்தல் முதலியன.



தூல தநுவின் செயல் - புசித்தல் ஆதியன.

இத் தொழில்கள் ஆன்மாவிற் கில்லாம விருந்தும், பளிங்கை யடுத்த செவ் வரத்தம் பூவின் நிறம், பளிங்கில் அத்தியஸ்த மாய்த் தோற்றுவது போல, ஆன்மாவை யடுத்த இவற்றின் தொழில்கள், ஆன்மாவில், "நான் புசித்தேன்" என்ப தாதியாகவும், "நான் கேட்டேன்" என்ப தாதியாகவும், "நான் வசனித்தேன்" என்ப தாதியாகவும், "நான் நினைத்தேன்" என்ப தாதியாகவும், அத்தியஸ்த மாய்த் தோற்றுதல் காண்க.

இவ் வாரோபிதங்கட்கு ஆன்மா அதிஷ்டாந மாம். அதிஷ்டாநம் - ஆரோபம் தோற்றுங் காலத்து, எது தோற்றுகிற தில்லையோ, எது தோற்றுவதனால், ஆரோபம் தோற்றுவ தில்லையோ, அது அதிஷ்டாநம். அது ஆரோபித சர்ப்பந் தோற்றுங் காலத்து, இரச்சு (கயிறு) தோற்றுவ தில்லை. அதிஷ்டாந இரச்சுத் தோற்றுங் காலத்து ஆரோபித சர்ப்பந் தோற்றா தென அறிக.

ஆன்மாச் செல்லல், அநுபவித்த லாதி எத் தொழிலு மில்லாத நிஷ்கிரியம் என்பதற்குச் சுருதி:

पाशुपत ब्रह्म उपनिषत्.

"आकाशमेकं संपूर्णं कुत्रचिन्नहि गच्छति ॥
तद्वद्ब्रह्मात्मविच्छ्रेष्टः कुत्रचिन्नैव गच्छति ॥ ३५ ॥

— பாசுபத பிரஹ்ம உபநிஷத்.

"ஆகாசம் ஒன்று சம்பூர்ணம். ஓரிடத்துக்கும் செல்வ தில்லை. அது போன்று, ஆத்மவித் சிரேஷ்டன் ஓரிடத்துக்கும் செல்வ தில்லை." என்று, ஆத்மா வியாபக அக்கிரிய மாகலின், நரகம் முதலிய ஓரிடத்துக்கும் செல்வ தில்லை என்று கூறுகின்றது. (16)

மற்றுடலின் செய்கைதன்மேல் வருமயக்க மேதேனவே,
முற்றுணர்வோன் றில்லாத மோகமேன்று சொன்னவரோ. (17)

(இ—ள்.) மற்று - (தனக்கு) வே றான, உடலின் - (ஸ்தூல சூக்ஷ்ம) சரீரங்களின், செய்கை - (பருத்த லாதி, காண்ட லாதி) தொழில்கள், தன் மேல் - (ஆத்மா வாகிய) தன் மீது, வரும் - (நான் பெருத்தேன், நான் பார்த்தேன், நான் நடந்தேன் என்பன வாதி யாக) வந்து தோற்றுகின்ற, மயக்கம் - பிராந்தி, ஏது - எப்படி, என - என்று அர்ஜுனன் வினவ, [அதற்கு உத்தரங் கூறுகின்றார்.] முற்று - பூரண மான, உணர்வு - ஞானத்தை, ஒன் றில்லாத - அடைத லின்றிய, மோகம் - மயக்கத்தினால் (வந்து பொருந்துகின்றது) என்று - என, சொன்னவரோ - உபதேசித்த பகவானே (நீர்), (எ-று).

ஏ - அசை. "ஒன்று" என்பது, அல் விகுதி குறைந்த முதல் நிலைத் தொழிற் பெயர். ஏது - நீண்ட வினா. (17)

அறிவுதே கந்தனக்கோ வாந்மாவிற் கோவேனவே,
பிறிவுசெயி லகித்துடலம் பிரமமறி வேன்றவரோ. (18)

(இ—ள்.) அறிவு - (அந்தப் பூரண) ஞான மானது, தேகம் தனக்கோ - தேகத்திற்கா, ஆந்மாவிற்கோ - ஆத்மாவிற்கா, என - என்று அர்ஜுனன் வினவ, [சமாதாநங் கூறுகின்றார்.] பிறிவு செயில் - (தேகத்தினையும், ஆத்மாவினையும்) பாகுபடுத்தி (ப் பார்க்கி)ல், உடலம் - சரீரம், அசித்து - ஜட மாம், பிரமம் - (ஆந்மா வாகிய) பிரஹ்மம், அறிவு - ஞான ஸ்வரூப மாம், என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

ஏ - அசை. தன் - சாரியை. தனக்கோ - ஆந்மாவிற்கோ - ஓ - இரண்டும் வினா. (18)



தேகமசித் தாகிலிந்தச் செயல்வருவ தேதேனவே,
ஏகபரஞ் சோதியின்முன் னிருக்கையினா லேன்றவரோ. (19)

(இ—ள்.) தேகம் - சரீரம், அசித்து ஆகில் - ஜடம் ஆயின், இந்தச் செயல் - (அதற்கு இயங்க லாதி) இத் தொழில்கள், வருவது - வந்து பொருந்துதல், ஏது - எப்படி, என - என்று அர்ஜுனன் வினவ, [அதற்குச் சமாதாநங் கூறுகின்றார்.] ஏக - அத்வைத ரூப, பரஞ் சோதியின் - பிரஹ்மப் பிரகாசத்தின், முன் - சந்நிதியில், இருக்கையினால் - (தேகம்) இருக்கின்றமையினால், என்றவரோ - (அதற்குச் செயல்க ளுண்டாம்) என் றருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

ஏ - அசை. வருவது - தொழிற் பெயர்.

ஏகம் - சஜாதீய, விஜாதீய, சுவகத பேத மற்றது. பரஞ் சோதி - சூர்யாதிப் பிரகாசங்கட் கெல்லாம் மே லாகிய பிரகாசம், அது பிரஹ்ம மாம். (19)

இருக்கினும சேதநத்திற் கிச்செயலுண் டோவேனவே,
உருக்குபடாக் காந்தமுன்னி லூசிநிக ரேன்றவரோ. (20)

(இ—ள்.) இருக்கினும் - (சேதந சந்நிதாநத்தினைப் பெற்று) இருப்பினும், அசேதநத்திற்கு - (கற் போன்ற) ஜட மாகிய சரீரத் திற்கு, இச் செயல் - (வளர்தல் காண்ட லாதி) இத் தொழில்கள், உண்டோ - உள வாமோ? என - என்று அர்ஜுனன் வினவ, [அதற்குத் திருஷ்டாந்த வாயிலாக உத்தரங் கூறுகின்றார்.] உருக்கு படா - (அக்கினியில் வைத்து) உருக்குதலைப் பொருந்தாத (உருக்கப் படாத என்பது அர்த்தம்), காந்த முன்னில் - காந்த சந்நிதியில், ஊசி நிகர் - (ஜட) ஊசி (க்குச் சேஷ்டை உண்டாதல்) போல, (ஆத்ம சந்நிதியில் ஜட சரீரத்திற்கும் பருத்தல், காண்ட லாதி

சேஷ்டைக ளுண்டாம்), என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

ஏ - அசை. ‘இருக்கினும்’ என்ற உம்மை உயர்வு சிறப்பு.

இசை யெச்சத்தால் எஞ்சி நின்ற தார்ஷ்டாந்தம் வருவித்து உரைக்கப்பட்டது. இதனைச் சூசி (ஊசி) காந்த (காந்தம்) நியாயம் என்பர். காந்த சந்நிதியில், ஜட ஊசி தொழிற் படுதல் போலச், சேதந ஆத்ம சந்நிதியில், ஜட சரீரமும், பருத்தல், காண்டல், நடத்தல் முதலிய தொழில் செய்த லுண்டு. காந்தமும், ஆத்மாவும், நிஷ்க்கிரியமா யிருக்கின்றன. ஊசியும், தூல சரீரமும், சக்கிரியம் ஆகின்றன என்று பகுத்து உணர்தல் வேண்டும்.

உருக்கு - ஈறு குறைந்த முத னிலைத் தொழிற் பெயர்.

படா - படாத என்னும் எதிர் மறைப் பெய ரெச்சத்தின் ஈறு தொக்கு நின்றது.

உருக்கப்பட்ட காந்தத்தில் அதன் சக்தி சிறிது குறையு மாதலின், குறையாத பூரண சக்தி யுடைய காந்த மென்று காட்டற்கு “உருக்கு படாக் காந்தம்” என்றார். (20)

சொன்னசெய லுடற்கானாற் சுகதுக்கம் யார்க்கெனவே,
அன்னசுக துக்கமுந்தா னவ்வுடற்கே யென்றவரோ. (21)

(இ—ள்.) சொன்ன - (முற்) கூறிய, செயல் - (அச் சுபா சுபத்) தொழில்கள், உடற்கு ஆனால் - சரீரத்திற் காமாயின், சுகம் - (அதனால் வரும் பய னாகிய) இன்பமும், துக்கம் - துன்பமும், யார்க்கு - எவர்க்கு, என - என்று அர்ஜுநன் கேட்க, [அதற்கு விடை யிறுக்கின்றார்.] அன்ன - அவ் வா றாய, சுகம் - இன்பமும், துக்கமும் - துன்பமும், அவ் உடற்கே - அந்தச் சரீரத்திற்கே யாம், என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்). (எ-று).



எனவே - ஏ - அசை. தான் - அசை.

உடற்கே - ஏ - பிரி நிலையும் தேற்றமு மாம். சுக துக்கம் உம்மைத் தொகை. சுகமும், துக்கமும் என்ற எண் ணும்மைகளில், முதலது தொக்கு நின்றது.

“படர் கருமம்” என்னும் 14-வது செய்யுளில் கூறப்பட்ட விஷயமே 21-வது ஆகிய இச் செய்யுளிலும் கூறப்பட்டமையின், கூறியது கூறல் என்னுங் குற்ற மாமே என்னின், ஆகாது. என்னை? 14-வது செய்யுளில் தூல சரீர நோக்கினால் வினவப்பட்டது. அதற்கு அடுத்த பாவில் “தநு கரணச் செயல்” என வெளிப்படை யாகச் சூக்ஷ்ம சரீரத்தையும் சேர்த்துக் கூறியதி லிருந்து, தூல சரீரம் இங்கே விழுந்து அழிந்து விடுவதால், அதற்கு ஒரு போதும் நரக சொர்க்க அநுபவம் கூடா தென்று ஐய மற அறிந்த அர்ஜுநன், சூக்ஷ்ம சரீரத்திற்குத் தான் நரக சொர்க்க அநுபவங் கூறுகின்றார் போலும்; அஃ தெங்ஙன் பொருந்தும்? என்னும் ஐய முடையவ னாய், 21-வது ஆகிய இச் செய்யுளில் சூக்ஷ்ம சரீரத் தைப் பற்றியே வினவுகின்றமையின், இது வேறு விடய மாகவே, கூறியது கூறல் என்னும் குற்ற மின்று. (21)

சேதநமா மாந்மாவைச் சேராத துக்கசுகம்,
ஓதுசட மாமுடலை யுற்றிடுமோ சொல்லுமென. (22)

(இ—ள்.) சேதநம் ஆம் - அறிவு ஸ்வரூப மாகிய, ஆந்மாவை - ஆத்மாவினை, சேராத - பொருந்தாத, துக்கம் - துக்கமும், சுகம் - சுகமும், ஓது - (அதற்குப் போகாயதந (போகத்திற் கிட) மாகச்) சொல்லப்பட்ட, சடம் ஆம் - அறி வின்றிய தாகிய, உடலை - சரீரத்தினை, உற்றிடுமோ - பொருந் துமா? சொல்லும் - (அடியேனுக்குக்) கூறி யருளும், என - என்று அர்ஜுநன் வினவ, (எ-று).

துக்க சுகம் - உம்மைத் தொகை.

உற்றிடுமோ - இடு - பகுதிப் பொருள் விகுதி. ஓ - வினா வகையால் எதிர் மறைப் பொருள் தந்து நின்றது.

தாத்பரியம் - ஒருவன் வேறு ஒருவனை வாளினால் வெட்டிக் கொலை செய்தானாயின், அக் கொலைக் குற்றத்துக் குரிய தண்டனையை, அப் புருஷன் அடைவனே யன்றி, அசேதனக் கருவி யாய வாளாயுதம் அத் தண்டனையை அடையாதது போல, "ஆத்மா ஜட மாகிய சரீரத்தினைக் கொண்டு, நல் வினை தீ வினைகளைச் செய்வதால், அக் கர்த்தா வாகிய ஆத்மாவை, அவற்றின் சுக துக்கங்க ளாய பலன்கள் பொருந்துமே யன்றி, அதன் கருவி யாகிய சரீரத்தினைப் பொருந்தா" என்னும் கருத்தை உட் கொண்டு, "சட மாம் உடலை உற்றிடுமோ" என்று அர்ஜுநன் வினவுகின்றான் என உணர்க. (22)

பூதமைந்தோ டைந்துயிர்கள் புலன்கள்பத்து மநமுதனான்,
கீதிருமெய் யிதின்மநத்துக் கின்பதுன்ப மேன்றவரோ. (23)

(இ—ள்.) பூதம் ஐந்தோடு - (ஸ்தூல) பஞ்ச பூத (காரிய மாகிய ஸ்தூல சரீர)த் தோடு, ஐந்து உயிர்கள் - பஞ்சப் பிராணனும், பத்து புலன்கள் - (அறி கருவி தொழிற் கருவி யாகிய) தசேந்திரியங்களும், மநம் முதல் நான்கு - மநம் முத லாக வுள்ள (புத்தி, சித்தம், அஹங்காரம் என்னும்) நான்கு (அந்தக்கரணமு)ம், ஈது - (ஆகிய) இந்த இரு பத்து நான்கு தத்துவங்களே, இரு மெய் - (ஸ்தூலம் சூக்ஷ்மம் என்னும்) இரண்டு சரீரங்க ளாம், இதில் - இவ் விரு சரீரத்தினுள், மநத்துக்கு - மநதிற்கு, இன்ப துன்பம் - சுக துக்கங்கள் (பொருந்தும்), என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).



'ஈது', 'இதில்' — என்பன பன்மையில் ஒருமை மயக்கம்.

பூதங்களின் காரிய மாகிய ஸ்தூல சரீரத்தினைப் பூதம் எனக் காரண வாகு பெயர் என்னும் லக்ஷணையினாற் கூறினர்.

"ஐந் துயிர்கள், புலன்கள் பத்து, மந முத னான்கு" என்பவற்றி னீற்றில் முற்றும், எண்ணு மாய உம்மைகள் தொக்கன.

இதில் - இல் - ஏழ னுருபு, இன்ப துன்பம் - உம்மைத் தொகை.

தூல சரீரத்தில், பிருதிவியின் பாகம்:- உரோமம், தோல், நாடி, மாமிசம், எலும்பு - 5. ஜலத்தின் பாகம்:- உமிழ்நீர், வியர்வை, மூத்திரம், சுக்கிலம், சோணிதம் - 5. தேயுவின் பாகம்:- நித்திரை, தாகம், பசி (உதராக்கினி), காந்தி, சோம்பல் - 5. வாயுவின் பாகம்:- விரிதல், ஓடுதல், இருத்தல், நடத்தல், சுருங்குதல் - 5. ஆகாயத்தின் பாகம்:- சிரம், கண்டம், இதயம், உதரம், இடை இவற்றி லுள்ள வெளி - 5. எனவே, தூல சரீரம் பஞ்சீகிருத பஞ்ச மஹா பூதங்களுள், ஒவ் வொன்றின் ஐந் தைந்து தத்துவங்களா யுள்ள இரு பத் தைந்து தத்துவங்களா யிருத்தலின், அதனைப் "பூத மைந்து" என்றார்.

தூல சரீர தத்துவத்தைச் சூக்ஷ்ம சரீர தத்துவத்தி னின்றும் வேறு காட்ட, 'ஓடு' என்னும் இடைச் சொற் கொடுத்துப் பிரித்தார்.

சட சூக்ஷ்ம சரீரத் துள்ளும், பிராணனும், கர்மேந்திரியமும் போன் றில்லாமல், விலக்ஷண மான சத்துவ குணம்சப் பிரதிபிம் பாசிரய யோக்கிய மந மாதிய அந்தக்கரணத்திற்கு, அத் தகுதி யிருத்தலின், அதனை விதந் தெடுத் தோதினா ரென்க.

தூல சரீரம், 5 தத்துவம், 6 தத்துவம், 7 தத்துவம் என மூ விதக் கொள்கையும் நூல் வழக்கில் உள.

சூக்ஷ்ம சரீரம் - வியாநன், பிராணன், அபாநன், சமாநன், உதாநன் என்னும் வாயுக்களும், சுரோத்திரம், த்வக், சக்ஷு, சிஹ்வை, கிராணம் என்னும் ஞாந இந்திரியமும், வாக், பாதம், பாணி, பாயு, உபஸ்தம் என்னும் கர்ம இந்திரியமும், மநம், புத்தி, சித்தம், அஹங்காரம் என்னும் அந்தக் கரணமும் சேர்ந்து 19 தத்துவங்க ளாம்.

சூக்ஷ்ம சரீரம், 20 தத்துவம், உள்ளத்தை நீக்கி 19 தத்துவம், சித்தத்தை மநத்திலும், அஹங்காரத்தைப் புத்தியிலும் அடக்கி 17 தத்துவம் என மூ விதக் கொள்கையும் நூல் வழக்கில் உள.

வேதாந்த சூடாமணி "ஈங்கு மந மிரு பத்து நான்காவ தாகும்" (76) என்று கூறுவதும் உதாரணம் ஆம். (23)

இந்தவிரு வகைத்தநுவிற் கேதுவே தேனவினவ,
முந்தியகா ரணமதனுன் மூன்றுதநு வென்றவரோ. (24)

(இ—ள்.) இரு வகை - (தூலம், சூக்ஷ்மம் என) இரண்டு வித (மாக மேற் கூறப்பட்ட), இந்த தநுவிற்கு - இச் சரீரங் களுக்கு, ஏது - காரணம், ஏது - யாது, என - என்று, வினவ - (அர்ஜுநன்) கேட்க, [அதற்குச் சமாதாநங் கூறுகின்றார்.] முந்திய - (இவற்றிற்கு) முற்பட்ட (பரம்பரா காரண மாய), காரணம் - (அஞ்ஞாந மென்னும்) காரண (சரீர) மாம், அதனுல் - அக் காரண சரீரத்தோடு (மேற் கூறப்பட்ட இரண்டுஞ் சேர), மூன்று தநு - மூன்று சரீர மாம், என்றவரோ - என்று அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

இச் செய்யுள்; சூசிக் கடாஹ நியாய முடைய தாம்.

முந்திய என்பது ஈண்டு அஞ்ஞாநத்தைக் குறிப்பித்து "து" விகாரத்தாற் றொக்கது.



துக்க சுகங்கள் சரீரத்திற்கா, ஆத்மாவிற்கா என்ற விரிந்த விசாரம் நடக்கும் போது, இடையில், தூல சூக்ஷ்ம சரீரங்கட்குக் காரண மாகிய காரண சரீரத்தை வினவி விடை இறுத்தல், மற் றொன்று விரித்தல் என்னுங் குற்ற மாகாதோ? எனின், ஆகாது. என்னை? விரிந்த சரீர விசாரணையில் முற் கூறிய சரீரங்கட்குக் காரணங் கூறுவதும், அக் காரண அஞ்ஞாநமும், ஒரு சரீர மாதலின், அதனையுஞ் சேர்த்துச் சரீரம் மூன் றென்பதும், அம் முச் சரீரங்களுள் மநதிற்கே இன்ப துன்பங்கள் என்பதும் பிரசங்கத் தொடர் புடைய வாகலான் என்க.

இந்த - இ - என்னும் அண்மைச் சுட்டின் விகாரம். ஏ தென - ஏது - நீண்ட வினு. முந்திய - பெய ரெச்சம். அது காரணம் என்னும் பெயர் கொண்டது.

அதனுல் - ஆல் - கருவி கர்த்தாப் பொருட் டாய மூன்ற னுருபு. அது இங்குத் "தூங்கு கையா லோங்கு நடைய" என்பது போல, உட னிகழ்ச்சிப் பொருட் டாயது. அல்லது, முந்திய காரண மதனுல் - (இவற்றிற்கு) முற்பட்ட (அஞ்ஞாந வடிவ) காரண சரீரம் ஒன் றிருக்கின்ற அத் தன்மையினுல், என அர்த்தங் கொண்டு அதனைக் கருவிப் பொருளது எனக் கொள்ளினும் அமையும். (24)

மநமறியுந் துக்கசுக வரவென்றீ ரம்மநமும்,
வினவிலசே தநமலவோ விரித்தெனக்கு விளம்புமென. (25)

(இ—ள்.) துக்க சுக - துன்ப இன்பங்களின், வரவு - வருதலை, மநம் - மநது, அறியும் - உணரும், என்றீர் - என (தேவரீர்) கூறி யருளினீர், அம் மநமும் - அந்த மநமும், வினவில் - விசாரிக்கு மிடத்து, அசேதநம் - ஜடம், அலவோ -

அன்றே, விரித்து - (ஜடத்திற்கு அறியுந் தன்மை எங்ஙன் பொருந்தும் என்னும் விஷயத்தினை) விஸ்தரித்து, எனக்கு - அடியேனுக்கு, விளம்பும் - கூறி யருளும், என - என்று அர்ஜுநன் வினவ, (எ-று).

வரவு - தொழிற் பெயர்.

"மநமும" என்ற உம்மை இறந்தது தழீஇய எச்ச வும்மை யாம், "தூல சரீரம் ஜட மாதல் போன்று" (மநமும் ஜடம்) என்பதை, உம்மை உணர்த்தி நின்றமையின்.

அலவோ - ஒருமையிற் பன்மை மயக்கம். (25)

அம்மநத்தி லாங்மா வபேதம்போற் றேன்றுதலால்,
விம்முதுக்க சுகத்தைமந மேவுமென்று சொன்னவரோ. (26)

(இ—ள்.) அம் மநத்தில் - (முற் புகன்ற) அந்த மநத்தின் கண், ஆங்மா - (சேதந ரூப) ஆத்மா, அபேதம் - ஒன்றுபட்டது, போல் - போல, தோன்றுதலால் - பிரதீதி யாதலினால், விம்மு - மிகுந்த, துக்க சுகத்தை - துன்ப இன்பங்களை, மநம் - மநது, மேவும் - பொருந்தும், என்று - என, சொன்னவரோ - கூறி யருளிய பகவானே (நீர்), (எ-று).

மநம் ஆத்ம சம்பந்தி யாகலின், பாஷாணம் போ லன்று. என்னை? அசங்க ஆங்மாவோடு உண்மையில் மநத்திற்கு எச் சம்பந்தமும் பொருந்தாது. ஆயினும், பிரதிவிம்பித்தலால் மநத்தில் ஆங்மாவின் கற்பித சம்பந்தம் தோன்றுகின்றது. பிரதிபிம்பாசிரய யோக்கியதை யற்ற கல்லி (பாஷாணத்தி)ல், அவ் வித சம்பந்த மின்று என்ப தாம்.

'போல' என்று கூறியதன் கருத்து, ஆங்மாவுக்கும், மநதுக்கும், ஞாந காலம், அஞ்ஞாந காலம் ஆகிய எந்தக்



காலத்திலும் ஏகத்வம் இன்று என்பது தோன்ற, 'அபேத மாய்த் தோன்றுதல்' எனக் கூறுது, "அபேதம் போற் றேன்றுதல்" எனக் கூறிய தாகும். (26)

அந்தமநோ துக்கசுக மதனிடத்து நில்லாமல்,
வந்திலங்கு மாங்மாவை மருவியதேன் சொல்லுமென. (27)

(இ—ள்.) அந்த - (முற் புகன்ற) அம், மநோ - மநத்தினது, துக்க சுகம் - துன்ப இன்பங்கள், அதனிடத்து - அந்த மநத்தினிடத்தே, நில்லாமல் - இராமல், வந்து - போந்து, இலங்கும் - (அபேதம் போல்) விளங்கும், ஆங்மாவை - ஆத்மாவினை, மருவியது - பொருந்தியது, என் - எங்ஙன் (அல்லது, எத் தன்மையது), சொல்லும் - (இதனைக்) கூறி யருளும், என - என்று அர்ஜுநன் வினவ, (எ-று).

மந: + துக்கம் - மநோ துக்கம் - வட மொழிச் சந்தி.

மநம் என்பது, மநோ எனச் சம்ஸ்கிருத முதல் வேற்றுமை யோடு கூடி வந்தது.

இக் கேள்வியி லிருந்து, இது வரை கூறி யருளியதை அர்ஜுநன் நன் குணர வில்லை யென் றறிந்த ஸ்ரீ பகவான், துர்ச்சந துஷ்யது (கெட்டவர்கள் சந்தோஷம் அடைக.) நியாய ரீதியால் அவன் கொள்கையை, அதாவது, சுகாதிகள் ஆங்மாவைப் பொருந்திய தென ஒப்புக் கொண்டு, விடை கூறத் தொடங்குகின்றார். (27)

வெய்யகன லின்சூடு மேல்வைத்த சட்டியினூ,
டுய்யபுன லூடுவந்தங் கோன்றுதல்போ லென்றவரோ. (28)

(இ—ள்.) வெய்ய - வெப்பம் (மிகுந்த), கனலின் - அக்கினியின், சூடு - உஷ்ணம், மேல் வைத்த - (அந்த அக்கினி

யின்) மீது (சம்பந்த முற) வைக்கப்பட்ட, சட்டியின் ஊடு - பாத்திரத்தின்கண், உய்ய - விடப் பெற்ற (உய்த்தல், அல்லது, உய்க்கை = செலுத்துதல்), புனல் ஊடு - ஜலத்தி னிடத்தில், வந்து - வந்து, ஒன்றுதல் - பொருந்துதல், போல - ஒப்ப (மனோ சம்பந்தி யாய ஆத்மாவினைச் சுக துக்கங்கள் சாரும்), என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

அங்கு - அசை. ஊடு - இரண்டும் ஏழ னுருபு.

உய்ய - உய்த்த என்னும் இறந்த காலப் பெய ரெச்சம், எதுகை நோக்கித் தகர விடை நிலை தொக்கு "உய்ய" வென விகார மாயிற்று.

வெய்ய - என்னும் அடை, மணி மந்திராதிகளாற் றடைப் பட்ட அக்கினி, சலத்திற் சூடு பிறப்பிக்குந் தகுதி யற்ற சிறிய அக்கினி யாதிகளை நீக்கற் கென்க.

தார்ஷாடந்தம் எஞ்சி நின்றமையின் இசை யெச்சத்தால் விரித் துரைத் தாம்.

இதனை, தப்த ஜல (காய்ச்சிய நீர்) அக்கினி உஷ்ண (நெருப்பு சூடு) நியாயம் என்பர். தப்த ஜலம் என்பது காய்ச்சிய நீருக்குப் பெய ராம். அக்கினி உஷ்ணம் என்பது நெருப்பின் சூட்டுக்குப் பெய ராம். காய்ச்சிய நீரில், நெருப்பின் சூடு சம்பந்த மாத்திரத் தால் அத்தியாச மாகக் காணப் படுவது போல, ஆத்மாவில், மனத்தின் சுக துக்கங்கள், சம்பந்த மாத்திரத்தால், அத்தியாச மாகக் காணப் படுவதே யன்றி உண்மை யன்றாம் என உணர்க. (28)

சித்தாகு மாங்மாவுஞ் செடமாகுஞ் சித்தமுந்தான்,
ஒத்தாங்கி ரண்டுமொன்று யுற்றவகை சாற்றுமேன. (29)



(இ—ள்.) சித்து ஆகும் - அறிவு ரூப மாகிய, ஆங்மாவும் - ஆத்மாவும், செடம் ஆகும் - அறி வற்ற தாகிய, சித்தமும் - மனமும், இரண்டும் - (ஆகிய) இரு பதார்த்தங்களும், ஒத்த ஆங்கு - வேற்றுமை யின்றிய (ஒத்த)ன போல, ஒன் றாய் - ஒற்றுமை யாய், உற்ற வகை - பொருந்தின விதம், சாற்றும் - கூறி யருளும், என - என்று அர்ஜுனன் வினவ, (எ-று).

தான் - அசை. "ஆங்மாவும் சித்தமும்" என்ற உம்மைகள் எண் ணும்மைக ளாம்.

செடம் - சடம் என்பது, மோனை நோக்கிச் செடம் என விகார மாயிற்று.

ஒத்த - அன் சாரியை தொக்க அஃறிணைப் பலவின்பாற் படர்க்கைப் பெயர். ஆங்கு - உவமை யுருபு. (29)

வல்லிரும்பு கனலுடனே மருவியது போன்மநமும்,
ஒல்லையிலாங் மாவுடனே யுற்றதுகா ணென்றவரோ. (30)

(இ—ள்.) வல் - கடின மான (கரிய), இரும்பு - அயம், கனல் உடன் - (சிவந்த ஒளி யுடைய) அக்கினியோடு, மருவியது - (அபேத மாகப்) பொருந்தியது, போல் - ஒப்ப, மநமும் - (சட) மநமும், ஆங்மாவுடன் - (சின்மய) ஆத்மாவோடு, ஒல்லையில் - பழமை யாகவே (நீண்ட கால மாகவே), உற்றது - (அபேத மாகப்) பொருந்தியது, என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

ஏ - ஏ - காண் - அசை. மநமும் என்ற உம்மை இறந்தது தழீஇயது.

பிரகாச ரூபமாய்ச் சூக்ஷ்மமா யுள்ள அக்கினியோடு, அப் பிரகாச மாய்த் தூல மா யுள்ள இரும்பு சம்பந்தித்து அபேத

மாய் விளங்குவது போல, ஸ்வப் பிரகாச மாய்ச் சூக்ஷ்ம மாயுள்ள ஆத்மாவோடு, அப்பிரகாச மாய்த் தூல மாய் உள்ள மநம் சம்பந்தித்து அபேத மாய் விளங்குகின்றது என உணர்க.

இதனை, தப்த (காய்ச்சிய) அயப் பிண்ட (இரும்புத் துண்ட) நியாயம் என்பர். தப்தம் - காய்ச்சியதற்குப் பெய ராம். அயப் பிண்டம் என்பது இரும்புத் துண்டத்துக்குப் பெய ராம். காய்ச்சிய இரும்புத் துண்டத்தில், நெருப்பு ஒன்றுபடலால், அத னிடத் துள்ள நீளம் அகல மாதியவற்றை யுடையதாகத் தோன்றுவது பிராந்தியே யன்றி உண்மை யன்று. அது போன்று, மநத்தில் ஆன்மா பிரதிவிம்பித்து ஒன்றுபடலால் மநம் போன்று, கர்த்தா, போக்தா, சுகி, துக்கி யாகத் தோன்றுவது, அத்தியாச மாத்திரமே யன்றி, உண்மை யன்று என்னுங் குறிப்பை உணர்க.

(30)

உற்றதேத னாலெனவே யுள்ளமவி வேகமுறப்,
பற்றியதன் மேலுமதன் பண்புவந்த தேன்றவரோ. (31)

(இ—ள்.) பற்றிய - (மநத்தினைப்) பொருந்திய, தன் மேலும் - (ஆத்மா வாகிய) தன் னிடத்தும், அதன் பண்பு - அம் மநத்தின் தர்மங்க ளாய (சுக துக்க இச்சை யாதி) சுபாவம், உற்றது - பொருந்தியமை, எதனால் - எக் காரணத்தினால், என - என்று அர்ஜுநன் வினவ, [அதற்குச் சமாதாநங் கூறுகின்றார்.] உள்ளம் - மநம், அவிவேகம் - அவிசாரத்தினை, உற - பொருந்த (அதனால்), வந்தது - (ஆன்மாவி னிடத்து மநத்தின் தர்மம்) வந்து பொருந்தியது, என்றவரோ - என் றருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

ஏ - அசை. தன் மேலும் - உம் - இறந்தது தழீஇயது.



31-வது பாவில் "பற்றிய தன் மேலும் அதன் பண்பு வந்தது" என்பது, "வெய்ய கனலின்" என்னும் 28-வது செய்யுளில், முற் கூறப்பட்டதே கூறப்படுதலின் கூறியது கூறல் என்னும் குற்றம் நீக்க அநுவாத மாம் என்ன லாமோ எனின், ஆகாது. என்னை? 27-வது செய்யுளில் மநத்தின் துக்க சுகம் ஆன்மாவை மருவியது எவ் விதம், அல்லது, எப்படி என்னும் வினாவிற்கு, 28-வது செய்யுளில் இவ் விதம் எனத் திருஷ்டாந்தங் கொடுத்து விளக்கினார். இந்த 31-வது செய்யுளில் எதனால் எனக் காரணம் கேட்க, அக் காரணங் கூறுகின்றார். ஆகவே, அதே விடயம் இங்குக் கூறப்படாமையின், கூறியது கூற லென்னுங் குற்றமு மாகாது; அநுவா தமு மாகாது என்க.

"பற்றிய தன் மேலும் அதன் பண்பு உற்றது எதனால் என, உள்ளம் அவிவேக முற (அதனால்) வந்தது என்றவரோ" என அந்வயிக்க.

(31)

அடுத்தகுணம் போமோபின் னான்மாவை விட்டெனவே,
எடுத்தசெம்பூ நிறம்படிகத் தேறுதல்போ லேன்றவரோ. (32)

(இ—ள்.) ஆன்மாவை - ஆத்மாவினை, அடுத்த - (அவ் விதம்) சம்பந்தித்த, குணம் - (சுக துக்க ஆசை யாதி) பண்புகள், பின் - (ஞாநம் வந்த) பின், விட்டு போமோ - (ஆத்மாவை) விட்டு நீங்குமா, என - என்று (அர்ஜுநன்) வினவ, [திருஷ்டாந்த வாயிலாக விடை யருளிச் செய்கின்றார்.] எடுத்த - (படிக சந்நிதியை) எற்ற, செம் பூ - செவ் வரத்தம் புஷ்பத்தின், நிறம் - (செந்) நிறம், படிகத்து - (அவ் வெண்மை) ஸ்படிகத்தில், ஏறுதல் - (அப் பூ வாகிய உபாதி அங் குள்ள வரை) படிந்து தோன்றலும் (அது நீங்கிய போது நீங்கலும்), போல் - ஒப்ப, என்றவரோ - (ஆன்மாவில் அவ் வான்ம சந்நிதி யாய சம்பந்த முற்ற மநத்தின்

சுக துக்கங்கள், அம் மந உபாதி யுள்ள வரை பிரதீதி யாதலும், அது நீங்குங் காலத்து நீங்கலு மாம்.) என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

ஓ - வினு. ஏ - அசை. இசை யெச்சத்தால் தார்ஷ்டாந்தம் வருவித்து உரைக்கப்பட்டது. இதனை, ரக்த (சிவப்பு) ஸ்படிக (படிகம்) நியாயம் என்பர்.

ரக்தம் என்பது சிவப்பு நிறத்துக்குப் பெய ராம். ஸ்படிகம் என்பது வெண்மை யான பளிங்குக் கல்லுக்குப் பெய ராம்.

வெண் படிக சந்நிதியை யடைந்த செம் பூவின் செந் நிற மானது, அப் படிகத்தில் அப் புஷ்ப உபாதி யுள்ள வரை "ரக்த ஸ்படிகம்" என்று அத்தியாசம் ஆகத் தோன்றி, அவ் வுபாதி நீங்கும் போது நீங்குவது போல், நெடுங் கால மாக ஆத்மாவினைச் சம்பந்தித்த மநத்தின் தர்மங்க ளாய சுக துக்காதிகள், ஆத்மாவில் அம் மந வுபாதி உள்ள வரை "சுகி, துக்கி, கர்த்தா, போக்தா" என்று அத்தியாச மாகத் தோன்றி, அவ் வுபாதி நீங்கும் போது நிவிர்த்தி யாகும் என்பது தாற்பரியம்.

"செம்பூ நிறம் படிகத்து ஏறுதல் போல்" என்று கூறிய அத்தியஸ்த திருஷ்டாந்தத்தைக் கொண்டே, தார்ஷ்டாந்தத்திலும், ஆத்மாவி னிடத்தில் மநத்தின் குணங்கள் அத்தியாசம் என்று பொருள் கொள்ளும்படி யாக வைத்தார் என்க. (32)

சுத்தபடி கம்போற்சொ ரூபமாய்த் தானிருக்க,
மெத்தவுமா சாமலிந மேவியதேன் சொல்லுமேன. (33)

(இ—ள்.) சுத்த - களங்க மின்றிய, படிகம் போல் - பளிங்கினைப் போல, தான் - (ஆத்மா வாய) தான், சொரூபம் ஆய் - (சச்சிதாநந்த) வடிவ மாக, இருக்க - (எப் பொழுதும் ஒரு



படித் தாக) இருக்க, ஆசா - ஆசை யாகிய, மலிநம் - களங்கம், மெத்தவும் - மிகவும், மேவியது - (ஆத்மாவினைப்) பொருந்தியது, என் - யாது காரணம், சொல்லும் - (இதனைக்) கூறி யருளும், என - என்று (அர்ஜுநன்) கேட்க, (எ-று).

மெத்தவும் - என்ற உம்மை - மிகுதி காட்டும் வினை யெச்ச விகுதி, அல்லது, மெத்தவும், என்ற வினை யெச்சம், மேவியது என்னும் வினை முற்றுக் கொண்டது. (33)

அநாதியாம் வாசனையா லடைந்ததா சாமலிந,
மநோபந்த மிருக்கின்முத்தி வாராதேன் றுரைத்தவரோ.(34)

(இ—ள்.) அநாதி ஆம் - தொன்று தொட்டுள்ள, அல்லது, பழமை யான, வாசனையால் - (காரண) சம்ஸ்காரத்தினால், ஆசா - ஆசை யாகிய - (அதாவது தேகாதிகளிற் பிரிய மாகிய), மலிநம் - களங்கம், அடைந்தது - (வந்து ஆத்மாவினைப்) பொருந்தியது, [அவ் வாசைக்குக் காரண மாய வாசநா ரூப பந்த மிருக்கின் முத்தி வாராதோ? எனின், வரா தென்று கூறுகின்றார்.] மநோ - மநத்தின் கண், பந்தம் - (வாசநா ரூப சம்சாரக்) கிரந்தி, இருக்கின் - இருக்கு மாயின், முத்தி - (அநர்த்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி யாகிய) மோக்ஷம், வாராது - சித்தியாது, என்று - என, உரைத்தவரோ - கூறியருளிய பகவானே, (நீர்), (எ-று).

'மநம்' என்பது, 'மநோ' எனச் சம்ஸ்க்ருத முதல் வேற்றுமையோடு கூடி வந்தது.

ஆசா மலிநம் - வட மொழிச் சந்தி.

அநாதி யாம் வாசனை - அந்தக் காரணம் சூட்சும சரீரத்தின் பகுதியாதலினாலும், அச் சூட்சும சரீரமும் உற்பத்தி யுடைய

காரியம் என "இந்த இரு வகைத் தநுவிற்கு ஏது எதென வினவ, முந்திய காரணமதனுல் மூன்று தநு என்றவரோ" என்னும் பாவாற் பெறப்படலானும், உற்பத்தி யுடைய அந்தக் கரணத்தி லுள்ள வாசனையும், உற்பத்தி யுடைய தாதல் நியம மாதலினுனும், ஜீவன், ஈசன், சுத்த சேதநம், அவித்தை, சேதந அவித்தைகளின் சம்பந்தம், அவற்றின் பேதம், என வரை யறுக்கப்பட்ட அநாதி பதார்த்தம் ஆறினும் வே ருதலினுனும், இக் கரண வாசனை எங்ஙன் அநாதி யாம்? எனின், சுழுத்தியில் வாசனை யோடு கூடிய அந்தக் கரணம் அவித்தையில் ஒடுங்கி மீண்டும் சாக்கிரத்திற் ருேன்றுவது போலப், பிரளயத்திலும் அவித்தை (மாயை) யி லொடுங்கிச் சிருஷ்டியிற் ருேன்றுதலினுனும், பிரபஞ்சத்துள் ஒரு பதார்த்தமா யடங்கி விடலானும், பிரபஞ்சம் போற் பரம்பராநாதி யே யன்றி, இயல் பான அநாதி யன்று என உணர்க. (34)

பந்தமேது முத்தியேது பகுத்துரைக்க வேண்டுமென்றன்,
சிந்தைதே ளியவேன்று திருத்தாளி னைவணங்க. (35)

(இ—ள்.) பந்தம் - (அவ் வாசநா ரூப) பந்தம், ஏது - யாது, முத்தி - மோக்ஷம், ஏது - யாது, பகுத்து - (இவற்றைப்) பிரித்து, என் - அடியேனது, சிந்தை - சித்தம், தெளிய - தெளி வடைதற் பொருட்டு, உரைக்க வேண்டும் - கூறி யருளல் வேண்டும், என்று - என (விண்ணப்பித்து), திரு - மேன்மை (பொருந்திய), தாளினை - (திரு) வடிகளை, வணங்க - (அர்ஜுநன்) நமஸ்கரிக்க, (எ-று).

என் றன் - தன், தாளினை - இன் சாரியைகள்.

தெளிய உரைக்க வேண்டு மென்று வணங்க, எனக் கூட்டுக.

இராமாவதாரத்தில் பாத பரிசத்தால் அகலிகையின் சாபம் நிவிர்த்தியானமையாலும், வாமநாவதாரத்தில் மஹா பலிச் சக்ர



வர்த்தியி னிடம் மூன் றடி இடம் யாசித்து, மூ வுலகையும் மூன் றடிக்கு ளடக்கினமையானும், இன்னும் இவை போன்ற பல அரிய காரியங்களை ஆற்றினமையானும், அடியினைச் சர ணுக அடைந்த பக்தர்கட்குப் பந்த நிவிர்த்தி ஆநந்தப் பிராப்தி யாகிய மோக்ஷத் தினை யளித்தருளி, இனி யடைபவர்க்கும் அங்ங னருளும் மகத்துவ முடைத் தாதலினுனும், பகவா னுடைய தாளிற்குத் "திரு" என்னும் அடை கொடுத்துத் "திருத் தாள்" என்ருர். (35)

தேகாதி தானேனவே சேரபிமா நங்கள்பந்தம்,
ஆகாத மாநம்விடி லரியமுத்தி யேன்றவரோ. (36)

(இ—ள்.) தேக ஆதி - தேகம் முதலியவற்றை, தான் - தன் சொரூபம், என - என்று, சேர் - பொருந்துகின்ற, அபி மாநங்கள் - (நான் என்ப தாதி யாக வுள்ள வாசநா வடிவ) பற்றுக் களே, பந்தம் - பந்த மாம், ஆகாத - (மோக்ஷத்திற்கு) அநுகூல மாகாத (அதாவது பிரதிகூல மாக வுள்ள என்றபடி), மாநம் - அவ் வபிமாந (வடிவ பந்த)ம், விடில் - நீங்கில், அரிய - (அருவே பெறுதற்கு) அரிய, முத்தி - மோக்ஷம் ஆம், என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

ஏ - அசை. ஆதி - என்பதால், பிராணன், மநம், விஞ்ஞாநம், ஆநந்தம் என்னும் கோசங்களையும் கொள்க.

மாநம் - முதற் குறை. விடில் - என்னும் வினை யெச்சம் எஞ்சி நின்ற ஆம் என்னும் வினை முற்றுக் கொண்டது. (36)

அபிமாநம் வரும்வகையு மாங்கதனைத் தீர்வகையுந்,
தபியாம ஞனறியத் தயவாகக் கூறுமேன. (37)

(இ—ள்.) அபிமாநம் - (முற் புகன்ற தேகாதிகளில் நான் என்னும்) பற்று வடிவ பந்தம், வரும் வகையும் - வருகின்ற

தன்மையும், அதனை - அவ் வபிமானத்தினை, தீர் வகையும் - நிவிர்த்திக்கின்ற தன்மையினையும், நான் - அடியேன், தபியாமல் - தாபத்தினை யடையாமல் (வருந்தாமல்), அறிய - உணர்தற் பொருட்டு, தயவு ஆக - கிருபையோடு, கூறும் - திரு வாய் மலர்ந் தருளும், என - என்று (அர்ஜுனன்) வினவ, (எ-று).

ஆங்கு - அசை. வகையும் - வகையும் - உம் - இரண்டும் எண்ணுப் பொருளன.

தாபம்:— அத்யாத்மம், அதி தெய்வம், அதி பூதம் என மூ வகைப்படும். ஆன்மாவை ஆசிரயித் திருக்கும் ஸ்தூல சூட்சும சரீரங்கள் அத்யாத்ம மாம்; அதி லுள்ள தாபம் அத்யாத்ம தாப மாம். அதுவும், ஆதி, வியாதி என இரு வகைப்படும். அவற்றுள், ஆதி என்பது, சித்த வியாகூலத்திற் கேது வான காமக் குரோதாதி மானச தாபங்கள்; வியாதி என்பது, ஸ்தூல சரீர சம்பந்த மாக உண்டாம் குன்ம மாதி வியாதியால் அடையும் பீடை யாம். அதி தெய்வ மாவது, தேவதைகளின் சம்பந்த மாக வுள்ள இடி யாதி யால் தூல சரீரத்துக் குண்டாம் பீடை யாம். அதி பூத மாவது, தேள், பாம்பு, கொசுகு முதலிய பிராணிகளால் தூல சரீரத்திற் குண்டாம் பீடை யாம்.

தயவு ஆக - என்பது, ஆசாரிய ரிடத்து மாணக்கன்;

"கோடன் மரபே கூறுங் காலைப்
பொழுதொடு சென்று வழிபடன் முனியான்
குணத்தொடு பழகிஅவன் குறிப்பிற் சார்ந்து
இருவென விருந்து சொல்லெனச் சொல்லி
... ... ... ... ... ... ... ...
போவெனப் போதல் என்மனர் புலவர்." நன் னூல்.

என்றபடி பணிந்து அவர் உத்தரவின் மேல் கேட்க வேண்டுமே அன்றி, உத்தர வின்றி அடிக் கடி இஃ்டப்படி வினவின் பகவா



ஞகிய ஆசாரியர் முனி வுறுவரோ என்னும் பயத்தால் அறிவிலி யாகிய தன்பால் அங்ஙன் முனி வுறாது கிருபை கூர்ந்து கூறி யருள வேண்டும் என்பது தோன்ற, கூறுதலுக்கு "தயவு" என்னும் விசேஷணங் கொடுத்துக் கூறினன் எனக் கொள்க. (37)

மறந்திடுமஞ் ஞானத்தான் மானம்வந்த தஞ்ஞானம்,
இறந்துவிடின் மானமும்போ மென்னவுரை செய்தவரோ. (38)

(இ—ள்.) மறந்திடும் - (தனது ஸ்வரூபத்தினை) மறக்கின்ற (அயர்க்கின்ற), அஞ்ஞானத்தால் - (மறதி என்னும்) அஞ்ஞானத் தினால், மானம் - அபிமானம் (தேகாதிகளில் நான் என்னும் புத்தி), வந்தது - வந்து பொருந்தியது, அஞ்ஞானம் - (அவ்) அஞ்ஞானம், இறந்து விடின் - நாச மாயின், மானமும் - (அவ்) அபிமானமும், போம் - நிவிர்த்தி யாம், என்ன - என்று, உரை செய்தவரோ - கூறியருளிய பகவானே (நீர்), (எ-று).

மானமும் - என்ற உம்மை இறந்தது தழீஇயது. காரண மான அஞ்ஞான நாசத்தோடு கூடவே அதன் காரிய அபிமான நாசமும் ஆம் ஆகலின்.

அஞ்ஞானத்திற்கு "மறந்திடும்" என்று விசேஷணங் கொடுத்தது, அஞ்ஞானம் - (ஞானத்தால் அழிவுறுந் தன்மைய வாய) காரண அஞ்ஞானம், காரிய அஞ்ஞானம், மூல அஞ்ஞானம், தூல அஞ்ஞானம், ஸ்வரூப அஞ்ஞானம், விஷய அஞ்ஞானம், எனப் பலபடக் கூறப்படும் அஞ்ஞானம் யாவும், ஓடுகின்ற ஓட்டம், அறி கின்ற அறிவு, என்புழிப் போல, மறந்திடு மறதியே அவ் வஞ்ஞா னத்தின் சொரூப மென்று காட்டற்கு என்க. (38)

அந்தமுறை யஞ்ஞான மணுகுவதும் போவதுவுஞ்,
சந்தயமி லாதறியத் தயவாகக் கூறுமென. (39)

(இ—ள்.) அந்த முறை - (முன் அபிமானம் வரும் வகையும் அஃது தீர் வகையும் எப்படிச் சொன்னீர்களோ) அப்படியே, அஞ்ஞானம் - (அவ்) வறியாமை, அணுகுவதும் - பொருந்துவதனை யும், போவதுவும் - நீங்குவதனையும், சந்தயம் - (யான்) ஐயம், இலாது - இன்றி, அறிய - உணரும் பொருட்டு, தயவு ஆக - கிருபையோடு, கூறும் - திருவாய் மலர்ந் தருளும், என - என்று (அர்ஜுநன்) வினவ, (எ-று).

சந்தேகம் - சந்தயம் என மரீஇயது.

அணுகுவதும் - போவதுவும் - என்ற உம்மைகள் எண்ணுப் பொருளன.

(39)

அஞ்ஞானம் வந்த தநாதியது சொல்வதன்று,
மேய்ஞ்ஞாநத் தாலே விடுமேன்று ரைத்தவரோ. (40)

(இ—ள்.) அஞ்ஞானம் - (ஆன்மாவின் அவ்) வறியாமை, அநாதி - அநாதியா யுள்ளது, அது - அவ் வஞ்ஞானம், வந்தது (ஆக) - இடையில் வந்துள்ள தாக, சொல்வது அன்று - கூறத் தகுந்த தன்று, [ஆனாலும், ஞானத்தினால் நிவிர்த்தி யாம் என்கின்றார்.] மெய் ஞானத்தாலே - (சற் குரு அநுக்கிரகித்த பிரமாத்ம ஐக்கிய) தத்துவ ஞானத்தினாலேயே, விடும் - நிவிர்த்தி யாம் (கருமத்தினால் அன்றாம் என்றபடி), என்று - என, உரைத்தவரோ - கூறி யருளிய பகவானோ (நீர்), (எ-று).

அநாதி என்பது:- ஆதி - உத்பத்தி. அஃ தின்றியது அநாதி.

அஞ்ஞானம் அநாதியாயினும், பிராக பாவம் போல் நிவிர்த்தி யாம்.

அநாதி 6. அஞ்ஞானம் (மாயை), ஜீவன், ஈசுவரன், பிரஹ்மம், அவற்றின் சம்பந்தம், பேதம் என்பன வாம்.



வாஸ்தவ அநாதி, பிரஹ்மம் ஒன்று மாத்திர மாம். கற்பித அநாதி, அஞ்ஞானம் (மாயை), ஜீவன், ஈசுவரன், அவற்றின் சம்பந்தம், பேதம் என்னும் ஐந்து மாம். கற்பிதம் ஐந்தும் நிவிர்த்தியா வன வாம்.

(40)

இரவியேதி ரடுத்துவந்த விருள்போல வஞ்ஞானம்,
வரவிதியோ சோதிதன்பால் வந்தவகை யேதேனவே. (41)

(இ—ள்.) இருள் - அந்தகாரம், இரவி - சூரியனது, எதிர் - முன்னர், அடுத்து - நெருங்கி, வந்த(து) - வந்துள்ளது (போந்தது), (என்பது) போல - எனல் (சிறிதும் பொருந்தாமை) ஒப்ப, சோதிபால் - (ஸ்வயம்) பிரகாச ரூப சி தாத்மாவி னிடத்து, அஞ்ஞானம் - (இருள் வடிவ) அறியாமை, வர(ல்) - (பொருந்தி) வருதல், விதியோ - முறையோ (முறையாகாது, அதாவது தகுதி யன்று என்றபடி), வந்த வகை - (அங்ஙன மாக அது ஸ்வயம் பிரகாச ஆத்மாவைப் பொருந்தி) வந்த (தென்னும்) விதம், எது - எப்படி, என - என்று (அர்ஜுநன்) கேட்க, (எ-று).

ஏ - அசை. தன் - சாரியை.

இருள் போல - இருள் (வருதல் அடாதது) போல என அர்த்தப்படுதலால், வருதற் றொழிலுக்கு இருள் கர்த்தா வாதலின், எழுவாய்த் தொடர். நன் னூல் - மெய் யீற்றுப் புணரியல் - 26-வது, "குறில் செறியா லள" என்ற சூத்திரத்து "வலி வரி னியல்பும்" என்ற விதிப்படி "மரங்கள் கடிய" என்பது போல, எழுவாய்த் தொடரில் சில மொழி யீற்று ளகரம் இயல்பாய் நின்று புணர்ந்தமை காண்க.

ஈண்டுத் தொழில் பற்றிய உவம மாதலின், இருள் வந்தது போல என அர்த்தங் கொண்டு, அதற் கியைய, வந்த என்பது வந்தது எனத் து விகுதி குறைந்த வினையாக நின்று, "அவன்

நடந்தது தவறு" என்புழிப் போல, வந்த தன்மையை, அல்லது, வந்த வரவைக் குறித்த தெனக் கொள்க. இன்னும், இரவி முன் இருள் அடுத்து வந்த தாகக் கோடல் எவ் விதத்தும் சம்பவியா தாகலின், அதனை இல் பொரு ளுவமை யணியாகக் கூறுங் கூற் றெனக் கொண்டு, "என்பது" என்னுஞ் சொல்லை இசை யெச்சத் தால் வருவித் துரைத் தாம்.

வரல் விதியோ என்பது, முற் கூறிய தொழி லுவமத்திற் கேற்ப "வர விதியோ" என எதுகை நோக்கி லகர வீறு குறைந்த தொழிற் பெய ரெனக் கொண்டாம் என்க.

திருட்டாந்தத்தில் இல் பொரு ளுவமை யணியாகக் கூறுங் கூற்றக் கியையத், தாட்டாந்தத்தும் வந்த வகை என்பதற்கு, வந்தது என்னும் விதம், என என்னும் என்பது சொல் லெச்சத் தாற் கொள்ளப்பட்டது.

தாத்பரியம் - சூரிய சந்நிதியில், இருள் வருவதற்குச் சம்பவமே யில்லை. சூரிய உதய மான மாத்திரத்தில் இருள் நாசம் ஆகி விடும். அது போல, ஆத்ம சந்நிதானத்தில், அஞ்ஞானம் வருவதற்குச் சம்பவமே யில்லை, என்னும் கருத்தை மநதில் கொண்டு, அர்ஜுனன் திருஷ்டாந்த பூர்வக மாகத் தார்ஷ்டாந்தத்தில் சங்கை செய்தனன் என உணர்க. (41)

அந்தவறி வுவந்தா லஞ்ஞாந மில்லையப்பாற்,
சந்ததமு மாநந்த சாகரங்கா ணென்றவரோ. (42)

(இ—ள்.) அந்த அறிவு - (ஸ்வயம் பிரகாசப் ப்ரஹ்ம ரூப ஆத்மாவில் அஞ்ஞாந விருள் பொருந்தல் ஒரு போதும் ஒவ்வாது என்னும்) அவ் வித விவேகம், வந்தால் - (திட மாய்) உண்டாயின், அஞ்ஞாநம் - அறியாமை என்பது, இல்லை - (ஆத்மாவில் உண்மை யாக ஒரு போதும்) இன்றாம், [பின்னர் யாது உள தெனிற் கூறுகின்றார்.] அப்பால் - (இவ் வித விவேகம் திட மாய்த் தோன்றிய) பின், சந்ததமும் - சதா காலமும் (எப்போதும்), ஆநந்த சாகரம் - இன்பக் கடல் வடிவம் (நினது சொரூபம் என்பதை), காண் - (நீ நன் றாய்) அறிவாய், என்றவரோ - என அருளிச் செய்த பகவானோ (நீர்), (எ-று).



சந்ததமும் என்ற உம்மை - முற்று.

காண் - ஆய் விகுதி குறைந்து நின்ற முன் னிலை எதிர் காலத் தெரி நிலை வினை முற்று.

தாற்பரியம்:- இப் பாவில், ஒளிக்கு முன், இருள் இருத்தல் எக் காலத்தும், எவ் விதத்தும் பொருந்தாது. அது போலப், பரம ஸ்வயம் பிரகாச ஆத்மாவி னிடத்து அஞ்ஞாந இரு ளிருத்தல் எக் காலத்தும், எவ் விதத்தும் பொருந்தா தென்பது, ஞாநிகள் திருட்டிக்கு விடய மாய முக்கிய முடிந்த சித்தாந்த மாதலின், அதனை, "அந்த விவேகம்" (அதாவது சூரிய சந்திராதி ஒளிகட் கெல்லாம் ஒளி கொடுக்கின்ற பே ரொளி யாய பிரஹ்மாபிந்ந ஸ்வயம் பிரகாச சச்சிதாநந்த ஆத்மாவி னிடத்து, அஞ்ஞாந விருள் எக் காலத்தும், எவ் விதத்தும், வந்தது மில்லை; போனது மில்லை; வரப் போவது மில்லை. அத் தகைய அஞ்ஞாந வஸ்து ஒன்று உண்மையில் இல்லவே இல்லை என்னும் விவேகம்) உனக்குச் சந்தேக விபரீத மின்றித் தெளி வாய்த் திட மாய் வந்துவிடின், அதனால் உனது உண்மை வடி வாய பிரஹ்மாபிந்ந சிதாத்மா, எப்போதும் (அதாவது முக் காலத்தும்) இன்பக் கடல் வடிவா யுள்ள தன்மையை நீ அறிவாய் என ஸ்ரீ பகவான் அருளிய தாம்.

அஞ்ஞாந வஸ்து ஒன்று உண்மையில் உண் டென்பதை எவ் விதத்தும் எவ் விடத்தும் நிரூபிக்க முடியாமையைக் காட்டுதும்:- மாயை, அவித்தை என்பன ஒரு பொருட் சொற்கள்.

அவ் வொன்றையே சுத்த சத்துவப் பிரதானத்தால் மாயை என்றும், மலிந சத்துவப் பிரதானத்தால் அவித்தை என்றும் சிறிது வேறு படுத்திக் கூறுவதே யன்றி, உண்மையில் வேறன்று. மாயா விசிட்டன் ஈசுவரன், அவித்தையா விசிட்டன் சீவன். இப் பாகுபாடுடைய மூலப் பிரகிருதியானது சீவனையோ, அல்லது, ஈசுவரனையோ ஆசிரயித் திருத்தல் முடியாது. என்னை? தனிச் சேதநம் ஈசுவரன் என்றோ, சீவன் என்றோ கூறப்படவில்லை. விசேஷண சட பாகமும் சேர்ந்த விசிட்டமே அவர்களின் சொரூப மாகக் கூறப்பட்டிருக்கின்றது. விசிட்டத்தினை ஆசிரயமாகக் கொள்ளும் போது, விசேஷண பாக மாகிய தானும், தனக்கு ஆசிரய மாக, ஆந்மாசிரய தோடம் வருதலினானும் என்க.

இனிச் சுத்தப் பிரஹ்மத்தை அதற்கு ஆசிரய மாகக் கொள்ள லாகாதோ? எனின், ஆகாது. என்னை? அஞ்ஞாநம் அச் சுத்த சேதநம் முழுதிலும் ஆசிரயித் திருந்து அதனை முழுதும் மறைக்கின், ஒருவருக்கும் அறி வில்லாமற் போதல் வேண்டும். அதுவு மன்றிப் பிரஹ்மத்திற்குப் போல, அதற்கும் நிரபேட்சிக வியாபகங் கூறல் வேண்டும். சாபேட்சிக வியாபகங் கூறல் அடாது. அங்ஙன் எல்லாவற்றானும் பரிச்சிந்நத் தன்மை யற்ற நிரபேட்சிக வியாபகங் கூறின், அத் தகைய வியாபக முடையது எதுவோ, அது நித்தியம் என்பதும், எது நித்தியமோ, அது சேதநம் என்பதும் நியமம். அங்ஙன மாயின், அது ஞாநத்தால் அழிவது என்றும், பரிச்சிந்நம் என்றும், சடம் என்றுங் கூறும் சுருதிக் கூற்றுக்கு முரணாம்.

அப்படி யன்றிச் சுத்த சேதநத்தின் ஏக தேசத்தை ஆசிரயித் திருந்து மறைப்ப தெனின், அதுவும் பொருந்தாது. என்னை? அங்ஙன் கூறின், அச் சேதநம் அவயவப் பாகுபா டுடைய தாகும். அங்ஙன மாயின், எது அவயவப் பாகுபா டுடையதோ, அது அழி வுடைய தாகும். அது, நித்தியன், நிர்விகாரன் ஆதி யாகக் கூறுஞ் சுருதிகட்கு முரணா மாகலின் அதுவும் பொருந்தாது என்க.

இனி எனை அநாத்ம வஸ்துக்க ளனைத்தும் அஞ்ஞாநத்தின் காரிய மாகலின், தன் காரியங்களை ஆசிரயித்து அவற்றின் பரிணாமி உபாதாந காரண மாகிய அவ் வஞ்ஞாநம் ஒரு போதும் எவ் விதத்தும் இருத்தல் அடாது. எனவே, எவ் விடத்தும் பெறப்படாத ஒரு வஸ்துவை இருப்ப தாகக் கூறல், மலடி மகன் இருக்கின்றான் என்பது போ லன்றி வே றில்லை என்க. இவ் விடயத்தின் விரிவைச் சித்தாந்த முக்தாவலி முதலிய நூல்களிற் காண்க. (42)

வேதாந்தத் தாற்குருவான் மெய்ஞ்ஞாநம் வந்தவுடன்,
தீதான துக்கசுகந் தீராத தேதேனவே. (43)

(இ—ள்.) குருவால் - ஞாநாசாரியரது (அநுக்கிரகத்தாற் கிடைத்த), வேதாந்தத்தால் - வேதாந்த சாஸ்திர ஆராய்ச்சியால், மெய் ஞாநம் - உண்மை யான (ஆத்ம) ஞாநம், வந்த உடன் - வந்த அந்த க்ஷணத்திலே (அஞ்ஞாநம் நாச மாயின்), தீது ஆன - கொடி தான, துக்க சுகம் - (அதன் காரிய) துக்க சுகங்கள், தீராதது - நிவிர்த்தியாகாமை, ஏது - யாது (காரணம்), என - என்று (அர்ஜுநன்) கேட்க, (எ-று).

ஏ - அசை. தீராதது - தீராத தன்மையைக் குறித்து நின்றது.

**வினுவின் கருத்து:-** ஒளி முன் இருள் இருத்தல் இயலாது. அது போல, ஆந்ம ஒளி முன் அஞ்ஞாந இருள் இருத்தல் இயலாதே. அங்ஙன மாக, ஆந்ம ஒளி முன் அஞ்ஞாந இருள் வந்தது எனல் முறையோ? அஃது எப்படி என்று முன் (41-வது பாவில்) கேட்டேன். ஆயினும், உபாதாந காரண

மின்றிக் காரியம் நிகழா தென்பது சர்வ தந்திர சித்தாந்தமும், உலகப் பிரசித்தாநுபவமு மாம். ஆகவே, "நான் அஞ்ஞன்", "நான் சுகி", "நான் துக்கி" என்னும் அநுபவத்தினானும், அஞ்ஞாந மாகிய பரிணாமி உபாதாந மின்றி, அதன் சுக துக்காதி காரிய மிருத்தல் கூடாது என்னும் யுக்தியினானும், "आत्मनि देहत्वं पश्यत्यज्ञानयोगतः" (யோகோபநிஷத்) என்னுஞ் சுருதியினானும், அஞ்ஞாநம் நன்கு பெறப்படுகிறது. அங்ஙன மிருக்க, என் கேள்விக்கு விடை யாக, அதனை மலடி மகன் போல, அத்தியந்தம் துச்ச மாக எக் காலத்து மில்லை எனக் கூறலும் பொருத்தமற்ற தாகவே தோன்றுகின்றது. இஃது மன்றித், தேவரீர் முன்னர் அதனை, "அஞ்ஞாநம் வந்தது அநாதி. அது சொல்வ தன்று. மெய்ஞ் ஞாநத்தாலே விடும்" என ஒப்புக் கொண்டுங் கூறியுள்ளீர்கள். அவ் விதம் தேவரீரது உபதேசத்தால் எனக்கு மெய்ஞ் ஞாநம் வந்திருக்க, அஞ்ஞாநம் நீங்கி யிருக்குமே. அங்ஙன மாயின், உபாதாந காரண மின்றிக் காரிய நிகழ்ச்சி கூடாதே. அஞ்ஞாந மாகிய உபாதாநம் போயும், அதன் காரிய சுக துக்க நிகழ்ச்சி நீங்காததன் காரணம் என்னை? என்பதே.

அர்ஜுநன் இவ் வாறு கேட்ட வினாவால், ஸ்ரீ பகவான் தான் முன்னர்க் கூறிய அதி தீவிர பக்குவர்க் குரிய முடிந்த சித்தாந்தத்தில், அர்ஜுநனுக்கு நம்பிக்கை யில்லாமையும், அதனை நன்கு தெளியாமையுங் கண்டு, அவ னதிகாரத்துக்குத் தக்கபடி மீண்டும் அஞ்ஞாநத்தை முன் போலச் சேதநத்தில் ஒப்புக் கொண்டு அடுத்த பாட்டில் அதற்கு விடை கூறுகின்றார். (43)

பற்றறுமோ துக்கசுகம் பரோக்ஷஞா நத்தாலே,
அற்றமா மவ்விரண்டு மபரோக்ஷத் தென்றவரோ. (44)

(இ—ள்.) பரோக்ஷ ஞாநத்தால் - (சாஸ்திர ஜந்ய) பிரத்தியக்ஷ மின்றிய (தத்துவ) ஞாநத்தினால் (அஞ்ஞாநம் நீங்காத



போது), துக்க சுகம் - (அதன் காரிய) துக்க சுகங்களின், பற்று - சம்பந்தம், அறுமோ - நாச மாமோ (நாச மாகா தென்பது கருத்தாம்), [பின் எந்த ஞாநத்தினால் நாச மா மெனிற் கூறுகின்றார்.] அபரோக்ஷத்து - அபரோக்ஷ ஞாநத்தினால் (அஞ்ஞாநம் நசிக்க), அவ் விரண்டும் - (அதன் காரிய) அந்தச் சுக துக்கங்க ளிரண்டும், அற்றம் ஆம் - நாச மாம், என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

ஏ - அசை. பற்றறுமோ - ஓ - எதிர் மறை. இரண்டும் - உம் - முற்று.

அபரோக்ஷத்து - அத்து - சாரியை. 'அபரோக்ஷத்தால்' என இருக்க வேண்டியது, 'அபரோக்ஷத்து' என மூன்றும் வேற்றுமை யுருபு தொக்கு நின்றது.

ஞாநம் இரு வகை. அவை:- பரோக்ஷ ஞாநம், அபரோக்ஷ ஞாநம் என்பன. சாஸ்திர ஜந்ய ஞாநம், பரோக்ஷ அப்பிரத்தியக்ஷ ஞாநம் ஆம். இந்திரிய விடய சம்பந்தத்தாற் றோன்றும் ஞாநமும், சுரோத்திர சம்பந்தி மஹா வாக்கிய ஜந்ய ஞாநமும், அபரோக்ஷ ஞாநம் ஆம். பரோக்ஷ ஞாநத்தினால், அசத்துவ ஆபாதக ஆவரணம் நிவிர்த்தி யாகும். அபரோக்ஷ ஞாநத்தினால் அபாந ஆபாதக ஆவரணம் நிவிர்த்தி யாகும். ஈண்டு இப் பிராந்தி அபரோக்ஷம் ஆகலின், அதனை நிவிர்த்திக்கும் ஞாநமும் அபரோக்ஷ மாதல் வேண்டும். பரோக்ஷப் பிராந்தியைப் பரோக்ஷ ஞாநம் நிவிர்த்தி செய்யும் என உணர்க.

"அர்ஜுநா! நீ யௌத்திகர் நிலையி லிருத்தலினால், யௌத்திகர் (சாஸ்திர யுக்தி யுடையோர்) கட்குச் சுருதி கூறிய விதம் முன் போல் அஞ்ஞாநத்தை ஒப்புக் கொண்டு யுக்திக்குப் பொருந்த விடை கூறுகின்றேன்; கேள். அக்கினி, சாமாந்யம், விசேஷம் என இரு வகைத் தாம். சாமாந்ய அக்கினிக்கும், இருளுக்கும், விரோதம்

இன்றும். சூரியன் விசேஷ அக்கினி யாம். விசேஷ அக்கினி யாகிய சூரியனுக்கும், இருளுக்குமே விரோதம் இருக்கின்றது. அது போல, சேதநம், சாமாந்ய சேதநம் - விசேஷ சேதநம் என இரு வகைத் தாம். சாமாந்ய சேதநம் எங்கும் இருப்ப தாம். சாமாந்ய சேதநத்திற்கும், அஞ்ஞாநத்திற்கும் விரோதம் இன்றும். விசேஷ சேதநம் சில இடத்து இருப்ப தாம். அதாவது, பிரத்தியக் அபிந்ந அகண்ட பிரஹ்மாகார விருத்தியில் விளங்குவ தாம். அதற்கும், அஞ்ஞாநத்திற்கும் விரோதம் ஆம். அதாவது, நான் ஆநந்தப் பிரஹ்ம வடிவ சின்மாத்திரன் என்று விருத்தி திட மாய் உண்டாம் இடத்து, "நான் அஞ்ஞன்" என்னும் அநுபவம் ஒரு போதும் உண்டாகாது. ஆனதால், விசேஷ சேதநத்திற்கும், அஞ்ஞாநத் திற்கும் விரோதம் ஆம். ஆகவே, விசேஷ அக்கினி யாகிய சூரிய சந்நிதியில், இருள் இராமை போல, விசேஷ சேதநம் விளங்கும் "நான் சச்சிதாநந்த அகண்டப் பிரஹ்ம ரூபன்" என்னும் விருத்தியின் சந்நிதியில், அஞ்ஞாநம் இராது. ஆனல், உனக்கு அத் தகைய அபரோக்ஷ ஞாநம் இல்லை. பரோக்ஷ ஞாநமே உளது. அதனல், அஞ்ஞாநம் நீங்க வில்லை." என்னும் இவ் வளவு விஷயங்களையும் மநத்துட் கொண்டு, ஸ்ரீ பகவான் "பற்றறுமோ துக்க சுகம் பரோக்ஷ ஞாநத் தாலே" என்று கூறினர் எனக் கொள்க. (44)

பரோக்ஷமப ரோக்ஷமேது பகுத்துரைக்க வேண்டுமென்றன்,
றிரோதமாம் புத்திநன்றுத் தெளியும்ப டிக்கெனவே. (45)

(இ—ள்.) பரோக்ஷம் - பரோக்ஷ (ஞாந)ம் (என்பது), எது - யாது, அபரோக்ஷம் (எது) - அபரோக்ஷ (ஞாந)ம் (என்பது) யாது, என் - அடியேனது, திரோதம் ஆம் புத்தி - மறைப் புடைய தாகிய புத்தி, நன்று - செவ்வை யாக, தெளியும்படிக்கு - (அம் மறைப்பு நீங்கித்) தெளிவை யடையும்படிக்கு, பகுத்து - (இவ் விரண்டின்



இயல்புகளைப்) பாகுபடுத்தி, உரைக்க வேண்டும் - கூறி யருள வேண்டும், என - என்று (அர்ஜுநன்) கேட்க, (எ-று).

எ - அசை. என் றன் - தன் - சாரியை.

எது - கடை நிலைத் தீப மாய் நின்று முன்னதோடும் சென் றியைந்தது. நன்று - நன்று + ஆ - ஆக என்பதன் கடைக் குறை. (45)

பகர்ந்தசத்த ஞாநம்ப ரோக்ஷம நுபவத்தால்,
அகம்பிரம மெனுஞாந மபரோக்ஷ மென்றவரோ. (46)

(இ—ள்.) சத்த ஞாநம் - சப்த (ரூப சாஸ்திரத்தினுல் உண்டான) அறிவு, பகர்ந்த - (முன்னர்க்) கூறிய, பரோக்ஷம் - பரோக்ஷ (ஞாந) மாம், அநுபவத்தால் - (விசார, தியாந) அப்பியாச முதிர்ச்சியால், அகம் - நான், பிரம்மம் - பிரஹ்மம், எனும் - என உண்டாகின்ற, ஞாநம் - ஞாநம், அபரோக்ஷம் - அபரோக்ஷ (ஞாந) மாம், என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

பரோக்ஷ ஞாநம்: அசத்துவாபாதக (அசத்து (இல்லை)த் தன்மையைச் சம்பாதிப்ப தாய) ஆவரணத்தை மாத்திரம் நிவிர்த்திக்கும் ஞாநம். இது, குரு முன்னிலையில் வேதாந்த சாஸ்திர ஆராய்ச்சி செய்தலா லுண்டாம் ஞாந மாம்.

அபரோக்ஷ ஞாநம்: அபாநாபாதக (தோற்ற மின்மையைச் சம்பாதிப்ப தாய) ஆவரணத்தை நிவிர்த்திக்கும் ஞாநம். இது, குரு முக மாகக் கிடைத்த "பத்தா மவன் நீ" என்பது போன்ற, "தத்துவ மஸி" என்னும் மஹா வாக்கிய சிரவணத்தால் உண் டாகிய, "இது கடம்" என்னும் கடத்தின் பிரத்தியக்ஷ அநுபவம் போன்று, "நான் பிரஹ்மம்" எனப் பிரத்தியக்ஷ அநுபவ மாய் உண்டாம் ஞாந மாம். (46)

தான்பிரம மென்றறிந்துந் தநுவைத்தா னென்றபுத்தி,
ஏன்போக வில்லையதை யெனக்கறியப் புகலுமென. (47)

(இ—ள்.) பிரமம் - (சச்சிதாநந்த) பிரஹ்ம (சொரூப)மே, தான் - தனது சொரூபம், என்று - என, அறிந்தும் - (அபரோக்ஷமாய்) உணர்ந்த பின்னும், தநுவை - (முன் போல்) சரீரத்தினையே, தான் - தனது சொரூபம், என்ற - என்கின்ற, புத்தி - (விபரீத) ஞானம், ஏன் - யாது காரணத்தினல், போக இல்லை - நீங்க வில்லை, அதை - அக் காரணத்தினை, எனக்கு - அடியேனுக்கு, அறிய - தெரியும்படி, புகலும் - கூறியருளும், என - என்று (அர்ஜுநன்) கேட்க, (எ-று).

அறிந்தும் - என்ற உம்மை, இறந்தது தழீஇய எச்ச வும்மை. பரோக்ஷ ஞானத்தில் போல என்பதைக் குறித்தலின், உயர்வு சிறப்பு மாம்.

43-வது பாவில், "வேதாந்தத்தாற் குருவால் மெய்ஞ் ஞானம் வந்த வுடன், தீதான துக்க சுகம் தீராதது ஏது" என்று கேட்டதற்கு, அந்த ஞானம் பரோக்ஷம். அதனல், தீராது. பின்னர், அபரோக்ஷ ஞானத்தாற் றன் தீரும் என்று கூறிய போது, அபரோக்ஷ ஞானத்தின் லக்ஷணங் கேட்க, அதனை, 46-வது பாவில், "அநுபவத்தால் அகம் பிரமம் எனும் ஞானம்" அபரோக்ஷம் என்றார். பின்னர், அர்ஜுநன் அந்த அபரோக்ஷத்தையே சுட்டித், "தான் பிரமம் என்று அறிந்தும் என் போக வில்லை" என்கின்றான். அதற்குப் பகவான், 48-வது பாவில், "ஆள் பிரமத்து அநுபவம் வந்து அது தீரும்" எனத் திட அபரோக்ஷத்தைக் கூறுகின்றார். ஆகலின், இப் பாவில், "தான் பிரமம் என்று அறிந்தும்" என்னும் ஞானம் அதிட அபரோக்ஷமே யாம். (47)

கேள்வியினன் மநநத்தாற் கிளர்ந்தயோ கங்களினல்,
ஆள்பிரமத் தநுபவம்வந் ததுதீரு மென்றவரோ. (48)



(இ—ள்.) அது - தேகாத்ம புத்தியானது, கேள்வியினல் - (ஷட் வித லிங்க தாற்பரிய) சிரவணத்தினலும், மநநத்தால் - மநநத்தினலும், கிளர்ந்த - விளங்காநின்ற (அல்லது சிறந்த), யோகங்களினல் - (விசார) நிதித்தியாசநங்களினலும், பிரமத்து - (பிரத்திய கபிந்ந) பிரஹ்மத்தினது, ஆ(ள்)ழ் - அழுந்திய (அதாவது சந்தேக விபரீத மின்றித் திட மான), அநுபவம் வந்து - அபரோக்ஷ ஞானம் வருதலால், தீரும் - நிவிர்த்தி யாம், என்றவரோ - என அருளிச் செய்த பகவானே, (நீர்), (எ-று).

ஆழ் - என்பது எதுகை நோக்கி - ஆள் - என் றாயிற்று.

ஆல் - மூன்றும் கருவிப் பொருளில் வந்த மூன்ற னுருபு.

வந்த - செய வென் எச்சம். இங்கே காரணப் பொருளில் "வந்து" எனத் திரிந்து நின்றது.

**சிரவணம் - மநநம் - நிதித்தியாசநம் - விசாரம் ஆவன:—**

1. சிரவணம் இரு வகைத் தாம். ஒன்று, குருவால் உபதேசிக்கப்படும் வேதாந்த வாக்கியத்திற்கும், கேட்பவனது சுரோத்திரத்திற்கும், உள தாய சம்பந்தம், அதாவது, நேரே அவ் வாக்கியத்தினைச் சுரோத்திரத்தாற் கேட்டல் ஆம். மற்றென்று, குரு முன்னிலையில் வேதாந்த வாக்கியத்தின் விசார ரூப மாம். அதாவது: உபக்கிரம உபசங்காரம், அப்பியாசம், அபூர்வதை, பலம், அர்த்த வாதம், உபபத்தி என்னும் ஷட் வித லிங்க தாற்பரியங் கொண்டு, வேதாந்த வாக்கியம் இன்ன அர்த்தத்தைத் தான் பிரதிபாதிக்கின்றது என நிச்சயித்த லாம். முதற் சிரவணம் ஞானத்திற்கு ஏது வாம். இரண்டாவ தன்று. என்னை? சத்த ஜந்ய ஞானத்தில் சுரோத்திரத்தோடு சத்தத்தின் சம்பந்தமே எங்கும் ஏது வாம். ஆதலின், முதற் சிரவணத்தால் பிரஹ்ம ஞானம் உண்டாகின்றது. அவாந்தர வாக்கியத்தின் சிரவணத்தால் பரோக்ஷ ஞானம் உண்டாகின்றது. "பத்தா மவன் நீ" என்பது போன்ற "தத்துவ மஸி"

என்னும் மஹா வாக்கிய சிரவணத்தால், அபரோக்ஷ ஞாநம் உண்டாகின்றது. ஒருவனுக்கு ஞாந முண்டான பின்னும் சந்தேக விபரீதங்க ளுண்டா மாயின், அவன், இரண்டாவது சிரவணத்தைச் செய்வதோடு, மநந நிதித்தியாசநங்களையும் செய்தல் வேண்டும். வேதாந்த வாக்கியத்தின் விசார ரூப மான இரண்டாவது சிரவணத்தால், வேதாந்த வாக்கியத்தின் அசம்பாவனை, அதாவது, பிரமாண கத சந்தேகம் நிவிர்த்தி யாம். வேதாந்த வாக்கியம் பிரஹ்மத்தைக் கூறுகின்றதா? அல்லது, வேறு வஸ்துக்களைக் கூறுகின்றதா? என் றுள தாகும் ஐயம் பிரமாண கத அசம்பாவனை யாம். முதற் சிரவணத்தால், அர்ஜுநனுக்கு அபரோக்ஷ ஞாநம் வந்தும், சந்தேக விபரீத மிருத்தலின், அது, அதிட அபரோக்ஷ மாம். அச் சந்தேகத்தை நீக்குவது இரண்டாவது சிரவண மாதலின், ஈண்டுக் "கேள்வி" என்றது இரண்டாவது சிரவணத்தை என்க.

2. மநநம் - ஜீவேசுவர அபேத சாதகமும், பேத பாதகமுமான யுக்திகளால் அத்வைதப் பிரஹ்மத்தினை இடைவிடாது தைல தாரை போன்று, சதா சிந்திப்பது மநந மாம். இது, பிரமேய கத சம்சயத்தை நிவிர்த்திக்கும். சீவப் பிரஹ்மங்களின் ஏகத்துவம் வேதாந்தத்தின் பிரமேய மாம். அவ் வேகத்துவம் உண்மையா? அல்லது, சீவப் பிரஹ்மங்களின் பேதம் உண்மையா? என்பது பிரமேய கத சந்தேக மாம்.

3. நிதித்தியாசநம் - அநாத்மாகார விருத்தியின் திரோதாநம் இன்றி, "அஹம் பிரஹ்மாஸ்மி" என்று இடைவிடாது தைல தாரை போன்று, விக்ஷிப்த விருத்தி யின்றி நெடுங் காலம் நேயத்தோடு ஏக ஆகார அநுசந்தாநம் ஈண்டு நிதித்தியாசநம் ஆம். இந் நிதித்தியாசநத்தால், விபரீத பாவனை நீங்கும். கட்டையைக் கள்ளன் என்றாற் போல, ஆத்மா வல்லாத அநாத்மாக்களில் ஆத்ம புத்தி விபரீத மாம்.



4. விசாரம் - முஞ்சத்தி னின்றும் ஈஷிகையைப் பிரிப்பது போன்று, பஞ்ச கோசங்களி னின்றும் ஆத்மாவைப் பிரித்து, கட, மட, ஜல, மேக, ஜல ஆகாசம், மஹா காசத்திற்கு வேறாகாதது போல, ஜீவ, ஈசுவர, கூடஸ்த, பிரஹ்ம, சேதநங்களை அபேத மாக அறிவது விசார மாம். இஃது திட அபரோக்ஷ ஞாந ஜநக மாம்.

"இந்த நான் எவன்? சித் தெது? சட மெது? இரண்டும் ஒன்றாகக்கூடும், பந்த மேது? வீ டேது? என உசாவுதல், பகர் விசாரம தாகும்"

— கைவல்யநவநீதம், சந்தேகந் தெளிதற் படலம், பாட்டு - 63.

"சிந்தனையால் ஞாநமுதித் திடுமிச்சை தீரினுந்தீ ராது நிற்கும்,
வந்துறன்மாத் திறத்தாற்றான் பவத்தகிலம் வாய்மையெனன்
மடியப் பண்ணும்"

— பஞ்ச தசீ - 9-வது தியாந தீபம் - பாட்டு - 32.

என்பன அதற்குப் பிரமாணம் ஆம். (48)

ஆதியாஞ் சிற்சொரூப மாகாத தானினிமேற்,
சோதிமந நாதியினாற் சொரூபமா மோவெனவே. (49)

(இ—ள்.) ஆதி ஆம் - முதன்மை யாகிய, சித் சொரூபம் - சேதந ரூபப் பிரஹ்மம், ஆகாத - ஆக (முன்னர்) இராத, தான் - (ஆத்மா வாகிய) தான், மநந ஆதியினால் - (சிரவண) மநந, விசார, நிதித்தியாசநங்களினால், இனி மேல் - பின்னர், சோதி சொரூபம் - சேதந ரூபப் பிரஹ்மம், ஆமோ - ஆகுமோ, என - என்று (அர்ஜுநன்) வினவ, (எ-று).

எ - அசை.

தாத்பரியம்:- முன்னே இயல் பாகச் சிற் சொரூப மாக இல்லாத தான் (ஆத்மா), பின் மநந ஆதியினால் சிற் சொரூப

மாயின், அது ஒரு நிமித்தத்தால் இடையில் வந்தமையின், அது செயற்கை வடி வாகும். செயற்கை நிலையா யிராது. பின் நீங்கக் கூடும். அதாவது, பால் தயிர் ஆவது போல, பிரஹ்மம் அநாதி யாகவே ஈச ஜீவ ஸ்வரூப பரிணாமத்தினை அடைந்திருந்தால், தயிர் மீண்டும் பால் ஆகாமை போல, அச் சீவ ஈசுர வடிவம் பிரஹ்ம மாகா வெனின், அப்படி யன்று. வேற் றுருவம் அடைந்த ஜீவ ஈசுரர்கள், பரிசந வேதியால் இரும்பு தங்கம் ஆவது போல், சிரவண, மநந, நிதித்தியாசநங்கள் செய்த பின், அகண்டைக ரசப் பிரஹ்ம சொரூபம் ஆதல் கூடும் எனின், அங்ஙனம் கூடு மாயின், நீரிற் கலந்த பாலை அன்னப் பக்ஷி பிரிப்பது போன்று, இரும்பில் பரிசந வேதியின் சையோக சாமர்த்தியம் வே றோர் நிமித்தத்தால் காலாந்தரத்தில் விபாக மாக, அச் செயற்கைத் தங்கம் மீண்டும் இரும்பு ஆவது போல, பிரஹ்மத்துவம் கெட்டு ஈச சீவத்துவம் அடைந்த சேதநம், சிரவண மநந, நிதித்தியாசநங்களால் மீண்டும் பிரஹ்ம மாயின், அகண்ட பிரஹ்மாகார விருத்தியின் சையோகம் நீங்கிய காலத்தில் மீண்டும் ஈச ஜீவர் ஆகி விடும். அங்ஙன மாயின், நீ ஞள் குருவை யடைந்து காமக் குரோதாதி விருத்திகளை அடக்கிச், செய்த சிரவண மநந நிதித்தியாசநங்கள் நிஷ்பலம் ஆகும்" என்னும் கருத்தை உட் கொண்டு, அர்ஜுனன் "ஆதி ஆம் சித் சொருபம் ஆகாத தான், மநந ஆதியினால் இனி மேல் சோதி சொரூபம் ஆமோ" என்று வினவிய தாகும். (49)

எப்போதுஞ் சிந்மயந்தா னெனன்மறந்து தேடுவது,
செப்புமிடற் றிணியிருக்கத் தேடுதல்போ லென்றவரோ. (50)

(இ—ள்.) தான் - (ஆத்மா வாகிய) தான், எப் போதும் - முக் காலத்தும், சிந் மயம் - சித் ஸ்வரூபமே, எனல் - என்பதனை, மறந்து - அயர் வுற்று, தேடுவது - (தனது யதார்த்த ஸ்வரூபம் சிந் மய மாவ தெங்ஙன் என) விசாரிப்பது, செப்பு - (அழகின்



பொருட்டுத் தான் முன்னர் அணிந் துள்ள தாகச்) சொல்லப்படு கின்ற, அணி - ஆபரணம், மிடற்று - (தனது) கண்டத்தில், இருக்க - இருக்கும் போதே, தேடுதல் - (அதனை மறந்து அது தவறி விட்ட தாக எண்ணி) விசாரித்தல், போல் - போல ஆம், என்றவ ரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

எப்போதும் - உம் - முற்று. செப்பு அணி - வினைத் தொகை.

ஆம் - என்னும் பய னிலை வருவிக்கப்பட்டது.

இதனை, கண்ட (கழுத்து) சாமீகர (பொன் ஆபரணம்) நியாயம் என்பர். கண்டம் என்பது கழுத்துக்குப் பெய ராம். சாமீகரம் என்பது பொன் ஆபரணத்துக்குப் பெய ராம். கழுத்தில் அணிந் திருந்த ஆபரணத்தை கழற்றி வைத்துப், போய்விட்ட தாகக் கருதி, வியவகார மிகுதியால் ராஜஸ விருத்தியினால் மறந்து துன்பப் பட்டுத் தேடல், கண்ட சாமீகர நியாய மாம். அது போன்று, அஞ்ஞாந காலம், ஞாந காலம் ஆகிய எப் போதும் சச்சிதாநந்த சொரூப மாகவே யிருக்கின்ற தன் யதார்த்த சொரூப ஆத்மாவை மறந்து, மாயை, அவித்தைகளின் வசத்தால் அநாதியே அசத்து ஜட துக்க ரூப மாக எண்ணி, ராஜஸ விருத்தியினால் அஞ்ஞாநாதி சப்த அவஸ்தைகளை யடைந்து, ஆத்மா எங்ஙன் சச்சிதாநந்த சொரூப மாகும் என விசாரிப்ப தாம். ஆனதால், ஜீவன் பரிணாம காரிய மல்லன். விருத்தி காரியம், அல்லது, ஆரம்ப காரியமும் அல்லன். பின் யாது எனின், விவர்த்த காரிய மாம். அதாவது, மண் - குடம் ஆவது போலவும், தங்கம் - பணதி ஆவது போலவும், கட்டை - கள்ளன் ஆவது போலவும், கானல் - நீர் ஆவது போலவும், கயிறு - பாம்பு ஆவது போலவும், முன் இருந்த அதிஷ்டாந காரண உருவ மான, மண், தங்கம், கட்டை, கானல், கயிறு என்பவை தத் தம் தன்மைகளை விடாமல், பின் விவர்த்த மாகத் தோன்றிய, குடம், பணதி, கள்ளன், நீர், பாம்பு

என்னும் தன்மைகளை விடுவது போல, முன்பு இருந்த சச்சிதாநந்த ஸ்வரூப அதிஷ்டாந காரண உருவத்தினை விடாமல், பின் விவர்த்த மாகத் தோற்றி வந்த, அசத்து, ஜட, துக்க, நாம, ரூபாதிகளை விடுவ தாம். இதனால் தான், ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ஜுநனை நோக்கி, "தான் எப்போதும் சிந்மயன் எனல் மறந்து தேடுவது மிடற்று அணி யிருக்கத் தேடுதல் போல்" என்று திருஷ்டாந்த பூர்வக மாகத் தார்ஷ்டாந்தத்தினை விளக்கிக் கூறினர் எனக் கொள்க.

(50)

தேடியபின் றேகபுத்தி தீர்ந்துபோய்ச் சிற்சொருபங்,
கூடுவனோ யானென்கு றைதீரச் சொல்லுமென. (51)

(இ—ள்.) தேடிய பின் - (சிரவண, மநந, நிதித்தியாசநங்களினால்) விசாரித்த பின், தேக புத்தி - தேகாத்ம புத்தி, தீர்ந்து போய் - விட்டு நீங்கி, சித் சொருபம் - சேதநப் பிரஹ்ம ஸ்வரூபத்தினை, யான் - நான், கூடுவனோ - அடைவேனோ, என் - எனது, குறை - பூர்த்தி யின்மை (நிறை வின்மை), தீர - நீங்க, சொல்லும் - கூறி யருளும், என - என்று (அர்ஜுநன்) வினவ, (எ-று).

கூடுவனோ என்பதில் உள்ள அன் விகுதி தன்மை ஒருமையில் வந்தது. ஓ - வினா.

(51)

வந்தவுடல் வேறாயும் வாசனையாற் றானெனலாற்,
சந்தயமேன் றற்சொருபந் தானாதற் கென்றவரோ. (52)

(இ—ள்.) வந்த - (கருமத்தினால்) உண்டாய, உடல் - சரீரம், வேறு ஆயும் - (தனக்கு) அந்நியமா யிருந்தும், வாசனையால் - (ஜந்மாந்தர) சம்ஸ்காரத்தினால், தான் - தன் சொருப மாய ஆத்மா, எனலால் - என்று (திட மாய்க்) கூறுகின்றபடியினால், தன் - தனது, சொருபம் - (உண்மை யான) ஆத்ம சொருபமே,



தான் ஆதற்கு - தனது சொருப மாக நிலைத்தற்கு, சந்தயம் - சம்சயம் (ஐயம்), என் - யா துளது, என்றவரோ - என அநுக்கிரகித்த பகவானோ (நீர்), (எ-று).

சந்தேகம் - சந்தயம் என மரீஇயது.

வேறாயும் - உம் - இழிவு சிறப்பு. (52)

தநுவைத்தா னெனும்பிரமை சத்தஞா நத்திலறு,
தநுபவமெய்ஞ் ஞாநத்தா லறும்வகையே துரையுமென. (53)

(இ—ள்.) தநுவை - சரீரத்தினை, தான் - தன் சொருப ஆத்மா, எனும் - என்று (சந்தேக விபரீத மின்றி) அறியும், பிரமை - (அபரோக்ஷப்) பிராந்தி, சத்த ஞாநத்தில் - சாஸ்திர ஜந்ய ("சரீரம் ஆத்மா வன்று" எனும் பரோக்ஷ) ஞாநத்தினால், அறாது - நீங்காமல், அநுபவம் - ("இச் சட சரீரத்திற்கு வேறாய் இதற்கு ஆதார மாய சேதந வடிவ ஆத்மாவே நான்" என்னும் நிச்சய மாகிய) அநுபவ ரூப மான, மெய் ஞாநத்தால் - (சந்தேக விபரீத மின்றிய) திட அபரோக்ஷ ஞாநத்தால், அறும் - நீங்குகின்ற, வகை - காரணம், ஏது - யாது, உரையும் - (என்பதைக்) கூறி யருளும், என - என்று (அர்ஜுநன்) கேட்க, (எ-று).

சத்த ஞாநத்தில் - இல் - ஐந்த னுருபு. "கல்வியிற் பெரியன கம்பன்" என்புழிப் போல ஏதுப் பொருளில் வந்தது.

பிராந்தி - பரோக்ஷம், அபரோக்ஷம் என இரு வகைத் தாம்.

**பரோக்ஷ ஞாந நிவிர்த்தியம்:-** "பிரஹ்மம் இல்லை" என்னும் பரோக்ஷப் பிராந்தியையும், அவ் வியவகாரத்திற் கேது வான அசத்வ ஆபாதக ஆவரணத்தையும் பரோக்ஷ ஞாநம் நிவிர்த்தி செய்யும். தேகத்தில் ஆத்ம புத்தி அபரோக்ஷப் பிராந்தி யாகலின்,

அதனைப் பரோக்ஷ ஞானம் நிவிர்த்தி செய்யாது. பரோக்ஷ ஞானம், அசத்வ ஆபாதக ஆவரணத்தையும், பரோக்ஷப் பிராந்தியையும் மாத்திரம் நிவிர்த்திக்கும்.

அபரோக்ஷ ஞாந நிவிர்த்தியம்:- "நான் கர்த்தா போக்தா சம்சாரி ஜடன் துக்கி, நான் பிரஹ்ம மாக விளங்க வில்லை" என்னும் அபரோக்ஷப் பிராந்தியையும், அவ் வியவகாரத்திற் கேது வான அபாந ஆபாதக ஆவரணத்தையும், "நான் அகர்த்தா, அபோக்தா, அசம்சாரி, சித் சொருபன், சுகி, நான் பிரஹ்மமா யிருக்கிறேன்" என்னும் அபரோக்ஷ ஞானம் நிவிர்த்தி செய்யும். அபரோக்ஷ ஞானம், அஞ்ஞானம், அசத்வ ஆபாதக - அபாந ஆபாதக மாகிய இரு ஆவரணங்கள் விட்சேபம் சந்தேகம் ஆதிய அவித்தையா சாலங்களை நீக்கும். இதனை, கைவல்யநவநீதம், தத்துவ விளக்கப் படலம், 60-வது செய்யுளின் விசேட வுரையில், "நான் பிரஹ்மமா யிருக்கிறேன்" என்னும் அபரோக்ஷ ஞானம் யாது, அது சகல அவித்தையா சாலங்கட்கும் விரோதி யாகலின், "நான் பிரஹ்மத்தை யறிகிறே னில்லை" என்னும் அஞ்ஞானமும், 'பிரஹ்மம் இல்லை', 'பாந மாக வில்லை' என்னும் ஆவரணமும், "புண்ணிய பாவங்களைச் செய்கிற கர்த்தாவும் சுக துக்கங்களைப் புசிக்கிற போக்தாவும் ஆகிய சீவ னாகிறேன்" என்னும் பிராந்தியும் ஆகிய, "அவித்தையா சாலங்களை நாசம் பண்ணுகிற்கும்" எனக் கூறப்பட்டுள்ளது காண்க. இது பஞ்சதசி திருப்தி தீபத்திலுங் கூறப்பட்டுள்ளது.

(53)

விளக்குவிளக் கேனுமதனல் வெய்யவிருள் போய்விடுமோ,
துளக்கமிலா விளக்கேற்றிற் றொலையுமிரு ளென்றவரோ. (54)

(இ—ள்.) விளக்கு விளக்கு - தீபம் தீபம், எனும் அதனல் - என்று கூறுகின்றதனல், வெய்ய - கொடிய, இருள் - அந்தகாரம், போய் விடுமோ - நீங்குமோ (நீங்காது என்றபடி), [பின் எதனல் நீங்கு மெனிற் கூறுகின்றார்.] துளக்கம் இலா - சலந மில்லாத, விளக்கு - தீபத்தினை, ஏற்றில் - ஏற்று மிடத்து, இருள் - அந்தகாரம், தொலையும் - நாச மாகும், என்றவரோ - என அநுக்கிரகித்த பகவானே (நீர்), (எ-று).

"விளக்கு விளக்கு" என்னும் அடுக்குச் சொல், மிகுதி குறித்து வந்தது. போய் விடுமோ - ஓ - வினு வகையால் எதிர்மறைப் பொருள் குறித்து நின்றது.

தார்ஷ்டாந்தம்:- "தநுவைத் தான்" எனும் அபரோக்ஷப் பிராந்தி, "நான் பிரஹ்மம் நான் பிரஹ்மம்" எனப் பன் முறை கூறுதலா லாய பரோக்ஷ ஞாநத்தினுல் நீங்காமல், "நான் பிரஹ்மம்" என்னும் திட அபரோக்ஷ அநுபவ ஞாநத்தினுல் நீங்கும்" எனத் தார்ஷ்டாந்தத்தை வருவித்துக் கொள்க.

"துளக்கம் இலா விளக்கு" என்புழி, விளக்குக்குத் "துளக்கம் இலா" என்னும் விசேஷணம் கொடுத்தது, தார்ஷ்டாந்தத்தை வலி யுறச் செய்தற் கென உணர்க. சலந மற்று விளக்கு இருக்கு மாயின், அது பொருளை நன்ருகக் கண்ணுக்கு எங்ஙனம் விளங்குமோ? அவ் வாறு குரு உபதேசித்த மகா வாக்கிய சிரவணத்தால், மநந நிதித்தியாசநத்தோடு கூடி உண்டான அகண்ட பிரஹ்மாகார விருத்தி யாகிய தீபம், சந்தேக விபரீதம், பூதப் பிரதிபந்தம், வர்த்தமானப் பிரதிபந்தம், ஆகாமியப் பிரதிபந்தங்கள் ஆகிய சலநங்கள் இன்றி யிருப்பின், ஆத்ம ஸ்வ ரூபத்தைச் சத்துவ குணத் தூய சாந்த மதிற்குத் தெளி வாக விளங்கும்படி செய்யும் என்னும் கருத்தைக் கொண்டு கூறிய தாம்.

"வெய்ய இருள்" என்புழி, இருளுக்கு வெய்ய என்னும் விசேஷணம், தார்ஷ்டாந்தத்தில் உள்ள அஞ்ஞானம் கொடியது

என்பது தோன்றக் கொடுக்கப்பட்ட தாம். "விளக்கு விளக்கு" என்பது போன்று, அநுபவ மின்றி, "அஹம் பிரஹ்மம் அஹம் பிரஹ்மம்" என்று வாக்கினுல் பல முறை உச்சரிப்பது வாசா மாத்திர மாம். இதனு லாம் ஞாநம் பரோக்ஷ மாம். இருட்டுக்கு விரோதி தீப மாகிய திரவியமே யன்றித் தீப மாகிய சப்த மன்றும். சப்த அஞ்ஞாநத்தைச் சப்த ஞாநம் போக்குமே யன்றி, இருட்டு ரூப திரவியத்தைப் போக்காது. இருட்டுக்குத் தீப சப்தம் விரோதி யன்று. இருட்டுக்கு விரோதி யாகிய தீப ரூப திரவியம் வரு மாயின், விரோதியைப் பார்க்க விருப்பம் இன்மையால், தறுகண் வரிப் புலி கண்டோன் போல், இருட்டு நாசம் உறும். அது போன்று, தேகாத்மப் பிராந்தி அபரோக்ஷ மாம். அதன் விரோதி சட் வித லிங்க தாத்பரியத்தோடு கூடிய சிரவண மநந நிதித்தியாசநங்களைச் சக காரியாக் கொண்ட சற் குருவா லுபதேசிக்கப்பட்ட மஹா வாக்கியத்தாற் ஜநித்த "அஹம் பிரஹ்மாஸ்மி" என்னும் அபரோக்ஷ ஞாநம் ஆம். "அஹம் பிரஹ்மாஸ்மி" என்னும் அகண்ட பிரஹ்மாகார விருத்தி ரூப அபரோக்ஷ ஞாநம் உண்டாயின், "தேகத்தில் நான்" என்னும் புத்தி ரூப அபரோக்ஷப் பிராந்தி நிவிர்த்தி யாம். பரோக்ஷ ஞாநத்தால் அபரோக்ஷப் பிராந்தி நிவிர்த்தி யாகாது என்பது தோன்றத் திருஷ்டாந்தத்தை மாத்திரம் கூறித், தார்ஷ்டாந்தத்தை உய்த்துணர வைத்தார் எனக் கொள்க. (54)

நெடுங்கால மாந்மாவை நீங்காத வஞ்ஞாநம்,
விடுங்கால மெந்நாளோ மெய்ஞ்ஞாநத் தாலெனவே. (55)

(இ—ள்.) ஆந்மாவை - ஆத்மாவினை, நெடுங் காலம் - நீணாக, நீங்காத - (விட்டு) நிவிர்த்தியாகா(து கூடவே யிருந்)த, அஞ்ஞாநம் - அஞ்ஞாந மானது, மெய் ஞாநத்தால் - (அப ரோக்ஷ) தத்துவ ஞாநத்தினுல், விடும் காலம் - நீங்குகின்ற காலம்,



எந் நாளோ - எக் காலமோ (யான் அறிகிலேன்), என - என்று (அர்ஜுநன்) கேட்க, (எ-று).

ஓ - வினு. ஏ - அசை.

அநாதி அஞ்ஞாநத்திற்கு நிவிர்த்தி உண்டோ எனின், அநாதி யாயினும், அதற்கு ஞாநத்தால் நிவிர்த்தி உண்டு. எங்ஙனம் "அநாதி சாந்தம் (உற்பத்தி யின்றி நாசம்) உடையது" எனப் பிரா கபாவத் திரவியத்தை நையாயிகர் கூறுகின்றனரோ, அங்ஙனமே, "அநாதி சாந்தம் (உற்பத்தி யின்றி நாசம்) உடையது" ஆத்மாவை மறைத்த அஞ்ஞாநம் ஆம், என வேதாந்திகள் கூறுகின்றனர்.

ஞாநம் வந்த அடுத்த க்ஷணத்தில் நீங்குமா? அல்லது, அதிக காலம் செல்லுமா? என்பது அர்ஜுநன் வினுவின் கருத்து என உணர்க. (55)

அந்தகா ரங்குகையி லாயிரநா ளிருந்தாலும்,
செந்தீபங் கண்டவுடன் றீர்வதுபோ லென்றவரோ. (56)

(இ—ள்.) குகையில் - (மலையி லுள்ள) குகையில் (முனையினிடத்து), அந்தகாரம் - இருள், ஆயிரம் நாள் - நீணாக, (அந்தக் குகை உண்டான நாள் தொட்டு), இருந்தாலும் - இருந்திருப்பினும், செம் - சிறந்த, தீபம் - விளக்கினை, கண்ட உடன் - பார்த்த போதே, தீர்வது - (தாமத மின்றி) நீங்குவது, போல் - ஒப்ப (அநாதியா யுள்ள அஞ்ஞாநமும் தத்துவ ஞாநம் உதய மான வுடன் நிவிர்த்தி யாம்), என்றவரோ - என அநுக்கிரகித்த பகவானே (நீர்), (எ-று).

"இருந்தாலும்" என்ற உம்மை உயர்வு சிறப்பு.

தார்ஷ்டாந்தத்தை இசை யெச்சத்தால் வருவித் துரைக்க.

"ஆயிரம் நாள்" என்பது, அநாதி யாக நெடுங் காலம் என்பதைக் குறித்தது.

"செம் தீபம்" என்புழி, தீபத்திற் குரிய "செம்மை" என்னும் விசேடணம், தார்ஷ்டாந்தத்தில், ஞாநத்திற் குரிய அப்பிரதிபந்த திட அபரோக்ஷத் தன்மையைக் குறிப்பா லுணர்த்தி நின்றது. அத் தகைய ஞாநம் உண்டானால், அஞ்ஞாநம் நிவிர்த்தி யாம் என்பது தாற்பரியம்.

அநாதியாகவே ஆத்மாவினை ஆசிரயித்து அஞ்ஞாநம் இருப்பினும், திட அபரோக்ஷ ஞாநம் உண்டான உடனே, கால விலம்பம் இன்றி அழிந்து போம் என உரைத்துக் கொள்க.

இதனை, அந்தகார (இருள்) தீப (விளக்கு) தர்சந (பார்த்தல்) நியாயம் என்பர். அந்தகாரம் என்பது இருளுக்குப் பெய ராம். தீபம் என்பது விளக்குக்குப் பெய ராம். தர்சநம் என்பது பார்த்த லுக்குப் பெய ராம். இருள் தன் விரோதி யாய தீபத்தைக் கண்ட மாத்திரத்தில், நீணாள் வாசமா யிருப்பினும் உடனே நாசம் ஆவது போல், அஞ்ஞாநம் ஆத்மாவை அநாதி யாக அநேக காலம் ஆசிரயித் திருப்பினும், தனது விரோதி யான அபரோக்ஷ ஞாநம் வந்த உடனே நாசம் ஆகி விடும் என்பது பொரு ளாம்.

திட அபரோக்ஷ ஞாநம் வந்த உத்தர க்ஷணத்தில் அஞ்ஞாநம் நிவிர்த்தி யாம். கால விலம்பம் இல்லை. என்பது தோன்ற, திருஷ்டாந்தத்தில் "தீபம் கண்ட வுடன் தீர்வது போல்" என்று கூறினர். (56)

கருமயோ கந்தவமே காரணமா நீங்காமல்,
அருமையா ஞாநம்வந்தோ வஞ்ஞாநம் போமேனவே. (57)

(இ—ள்.) அஞ்ஞாநம் - மூலாவித்தையானது, கருமம் - (யாகாதி புண்ணிய) கருமங்கள், யோகம் - (பிராண பந்த) யோகம், தவம் - (கிருச்சிர சாந்திராயணாதி) தபம் (ஆகிய வற்றையே), காரணம் ஆ(க) - ஏது வாகக் கொண்டு, நீங்காமல் - நிவிர்த்தி யாகாமல், அருமை யாம் ஞாநம் - அடைதற் கரிய (திட அபரோக்ஷ) ஞாநம், வந்தோ - உண்டான பின்னரோ, போம் - நீங்கும்?, என - என்று (அர்ஜுனன்) கேட்க, (எ-று).

ஏ - பிரி நிலை. ஏ - ஈற் றசை. வந்தோ - ஓ - வினா.

கரும யோகந் தவமே - இவற்றி னிடையில் எண் ணும்மைகள் தொக்கன.

**கருமம்** - நித்தியம், நைமித்திகம், காமியம், பிராயச்சித்தம், நிஷித்தம் என ஐ வகைத் தாம். அவற்றுள், காமிய நைமித்திக கர்மங்கள் - அபூர்வம், அபிதாநம், உத்பத்தி, விநியோகம், அதிகாரம், பிரயோகம், அபிதேயம், நியமம், பரிசங்கியை என ஒன்பது வகைத் தாம். முக்தம், அமுக்தம், முக்தாமுக்தம், யந்திர முக்தம், அஸ்திரம், சஸ்திரம் என அறு வகை யாகத் தொழில் கூறப்படும். இவ் விரு பது வகையும் கர்மம் என்னும் சொல்லாற் கூறப்படும். இவற்றின் விரிவை, நாம் மொழி பெயர்த் துள்ள வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா என்னும் நூலில் காண்க.

**யோகம்** - மந்திர யோகம், பரிச யோகம், பாவ யோகம், அபாவ யோகம், மஹா யோகம், லய யோகம், ஹட யோகம், ராஜ யோகம் என எண் வகைத் தாம். 1. ஓங்காரம் முதலிய மந்திர உச்சாரணத்தோடு பிரஹ்மத்தில் மநம் லயம் ஆதல் மந்திர யோகம் ஆம். 2. ஓங்காரம் முதலிய மந்திர உச்சாரணத் தோடு மநமும், பிராண வாயுவும், ஒன்று கூடி மூலாதாரத்தி லிருந்து சுழி முனை நாடி வழி யாகச் சென்று சிரசின் மத்தியில் தேங்கி யிருக்கின்ற ஆத்மப் பிரகாசத்தில் லயம் ஆதல் பரிச

யோகம் ஆம். 3. விராட் புருஷ வடிவத்தை யாயினும், அல்லது, பரிச்சிந்நக் கடவுள் வடிவத்தை யாயினும் நினைத்து, ஒவ் வொரு அவயவங்க ளாக விட்டு, மிஞ்சி யுள்ள அவயவி யாகிய பிரஹ்மத்தி னிடத்தில் மநம் லயம் ஆதல் பாவ யோகம் ஆம். 4. மநமும், வாக்கும், சென்று கோசரிக்க முடியாத நிர்க்குணப் பிரஹ்மத்தில் மநம் லயம் ஆதல் அபாவ யோகம் ஆம். 5. ஞாந அஞ்ஞாந காலம், சிருட்டி திதி சம்மார காலங்களில் ஒரே படியாக விளங்கும் பிரஹ்மத்தில் மநம் லயம் ஆதல் மகா யோகம் ஆம். 6. உத்பத்திக் கிரமத்திற்கு விபரீதக் கிரமம் லயக் கிரமம் ஆம். (அதாவது அநாத்ம மாயா காரியங்களை ஒவ் வொன் றாக முறையே அதது காரணங்களில் அடக்கி இறுதியில் எஞ்சி நின்ற மாயையையும் பிரஹ்மத்தி லடக்கி) அப் பிரஹ்மத்தி னிடத்தில் மநத்தை லயப்படுத்துவது - லய யோக மாம். 7. இயம, நியம, ஆசந, பிராணயாம, பிரத்யாகார, தாரணை, தியாந, சமாதி என்னும் அஷ்டாங்கத்தோடு கூடிப் பிரஹ் மத்தில் மநத்தை ஹடத்தால் நிரோதம் செய்தல் ஹட யோகம் ஆம். 8. யோகத்திற் கெல்லாம் ராஜா வாகலின், ராஜ யோகம் எனப் பெய ராம். இது மற்றை யோகங்களைப் போல், தேகப் பிரயாசம் உடையது அன்று. பிரஹ்மத்தி னிடத்தில் மநத்தை அநாயாச மாக லயப்படுத்துவது ராஜ யோகம் ஆம்.

தவம் - சகாமம் நிஷ்காமம் என இரு வகைப்படும். சகாமம் லோகப் பிராப்திக்கும், நிஷ்காமம் ஞாநப் பிராப்திக்கும் காரணம் ஆம். சகாமம் அநேக விதம் ஆம். அவை கிருச்சிர சாந்திராயணாதி தவங்க ளாம். கிருச்சிரம் சாந்திராயணம் என்பன விரதங்கள் என்றும் கூறப்படும். இவை பாப நிவிர்த்திக் காகச் செய்யப்படும் பிராயச்சித்தங்கள் என்றும் கூறப்படும். இவ் விரண்டும் காய சோஷணங்களே யாகும். கிருச்சிரம் (வற்ற லாதல் - இளைப் புறுதல்) நான்கு வகைப்படும். அவை, பிராஜாபத்ய கிருச்சிரம், தப்த கிருச்சிரம், கிருச்சிர அதி கிருச்சிரம், சந்தாபந கிருச்சிரம் எனக் கூறப் படும். கிருச்சிரம் பன் னிரண்டு திநம் அநுஷ்டிக்கப்படும் விரதம் ஆம்.



1. பிராஜாபத்ய கிருச்சிரம் ஆவது - மூன்று நாள் காலையில் உணவு அருந்தி, மற்றைக் காலங்களில் ஆகாரம் இன்றி யிருந்து, அடுத்த மூன்று நாள் மாலையில் மாத்திரம் உணவு அருந்தி, அடுத்த மூன்று நாள் ஆகாரத்தை தான் விரும்பாது, யாரேனும் கொடுத் தால், உண்டு, மற்றை மூன்று நாள் ஆகாரமே யின்றி இருப்பது ஆம்.

2. தப்த கிருச்சிரம் ஆவது - மூன்று நாள் காய்ச்சிய உஷ்ண ஜலத்தினை மாத்திரம் ஆறு பலம் சாப்பிட்டு, மறு மூன்று நாள் காய்ச்சிய பாலை மாத்திரம் மூன்று பலம் சாப்பிட்டு, அடுத்த மூன்று நாள் காய்ச்சிய நெய்யை மாத்திரம் ஒரு பலம் அருந்தி, மற்றை மூன்று நாள் வாயு பக்ஷணம் மாத்திரம் செய்து இருத்தல் ஆம்.

3. கிருச்சிர அதி கிருச்சிரம் ஆவது - முற் கூறிய தப்த கிருச்சிரத்தினை இரு முறை அநுஷ்டிப்பது ஆம்.

4. சந்தாபந கிருச்சிரம் ஆவது - கோ சலம் (மூத்திரம்), கோமயம் (சாணி), பால், தயிர், நெய், குசோதம் (குசம் - தர்ப்பை. உதகம் - ஜலம். தர்ப்பையை ஜலத்தில் நனைத்து அந்தத் தர்ப்பை நுனியில் ஒழுகும் ஜலம்) இவைகளை முறையே ஒவ் வொன்றையும் ஒவ் வொரு நாள் உட் கொண்டு மறு நாள் பட்டினி யாக இருப்பது ஆகும்.

சாந்திராயணம் - (சந்திர - அயநம் - சந்திர மார்க்கம்) ஐந்து வகை ஆம். அவை, பிபீலிகா மத்தியம், இயம மத்தியம், ரிஷி சாந்திராயணம், சிசு சாந்திராயணம், யதி சாந்திராயணம் என்று

கூறப்படும் சாந்திராயண விரதம், ஒரு மாதம் (இரண்டு பக்ஷம்) அநுஷ்டிப்பது ஆகும்.

1. பிபீலிகா (எறும்பு) மத்தியம் ஆவது - கிருஷ்ண பக்ஷப் பிரதமை முதல் துவக்கி பௌர்ணமியோடு முடிக்கப்படுவது ஆகும். முதல் நாள் (கிருஷ்ண பக்ஷப் பிரதமை யன்று) பதின் நான்கு கவள அந்நமும், மறு நாள் பதின் மூன்று கவள அந்நமு மாக, இவ் வாறு, ஒவ் வொரு நாளைக்கு ஒவ் வொரு கவளம் குறைத்துக் கொண்டு வந்து, அமாவாசை யன்று உபவாசம் இருந்து, மறு நாள் சுக்ல பக்ஷப் பிரதமை முதல் ஒவ் வொரு நாளும் ஒவ் வொரு கவளம் ஆய் அதிகப்படுத்தி பௌர்ணமி யன்று பதி னைந்து கவளம் சாப்பிடுவது ஆகும்.

2. இயம மத்தியம் ஆவது - சுக்ல பக்ஷப் பிரதமை முதல் துவக்கி, அமாவாசையோடு முடிக்கப்படுவது ஆகும். முதல் பக்ஷத்தில் (பாகத்தில்) ஆஹார கவளங்களை விருத்தி செய்து கொண்டு வந்து, பிற் பகுதியில் ஆஹார கவளங்களைக் குறைத்துக் கொண்டே வருவது ஆகும்.

3. ரிஷி சாந்திராயணம் ஆவது - பிரதி தினமும் மும் மூன்று கவளங்கள் வீதம், ஒரு மாதம் சாப்பிட்டு வருவது ஆகும்.

4. சிசு சாந்திராயணம் ஆவது - ஒவ் வொரு நாளும் காலையில் நான்கு கவளமும், மாலையில் நான்கு கவளமும், சாப்பிட்டு ஒரு மாதம் விரதம் இருப்பது ஆகும்.

5. யதி சாந்திராயணம் ஆவது - உச்சியம் போதில் தின மொன்றுக்கு எட்டுக் கவளங்கள் வீதம், ஒரு மாதம் சாப்பிட்டு விரதம் இருப்பது ஆகும். இவற்றின் விசேஷ நிரூபணத்தைத் தர்ம சாஸ்திரங்களிற் காண்க.



திருக் குறள் 27-வது தவ அதிகாரத்தும்

"கூற்றங் குதித்தலுங் கைகூடு நோற்றலின்,
ஆற்றல் தலைப்பட்ட வர்க்கு" 9 - (269)

என்று "தவ வலிமை யுடையார்க்கு யமனைக் கடத்தலுங் கூடும்" என்று கூறி யிருத்தலுங் கொள்க.

இவ் வாறு கிடைத்தற் கரிய சுவர்க்காதி இஷ்ட போக அஷ்ட சித்திகளைக் கொடுக்கக் கூடிய ஆற்ற லுடைய கரும, யோக, தவங்களால், அஞ்ஞானம் நீங்கிவிடாதா? அபரோக்ஷ ஞானம் வந்து தானு போகும்? என்பது அர்ஜுனனது வினாவின் கருத் தாகக் கொள்க.

ஈண்டுத் "தவம்" என்னும் சொல்லால், சகாம தவமே கருத் தாகக் கொள்க.

தவம் இரு வகை என்பதற்கு, கைவல்ய நவநீதம் 2-வது சந்தேகந் தெளிதற் படலம்,

"காமி யத்தவங் காமிய மொன்றையுங் கருதிடாத் தவமென்றும்,
பூமி யிற்றவ மிருவகை சித்தியும் போதமுந் தரும்" 2 - (45)

என்று கூறுவது கொண்டு உணர்க. (57)

குத்துவெட்டும் படைகளினுற் கூடுமோ விருடுரக்க,
உத்தமமாம் ரவியுதித்தா லோடுமிரு ளென்றவரோ. (58)

(இ—ள்.) குத்து - குத்துதற் குரியவும், வெட்டும் - வெட்டுதற் குரியவு மான, படைகளினுல் - (ஈட்டி, வாள் முதலிய) ஆயுதங்களினுல், இருள் - அந்தகாரத்தினை, துரக்க - நிவிர்த்திக்க, கூடுமோ - முடியுமா? (முடியாது என்றபடி), [பின் எதனுல் கூடும் எனில் கூறுகின்றார்.] உத்தமம் ஆம் - (உலகிற்கு எல்லா நன்மை

களையும் செய்விக்கும்) உயர் வாகிய, இரவி - சூரியன், உதித்தால் - உதய மானால், இருள் - அந்தகாரம், ஓடும் - நாச மாம், என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

தார்ஷ்டாந்தம் - தனக்குச் சாதக மான கருமாதிகளால் அஞ்ஞான இருள் அழியாது, தனக்கு விரோதி யான அபரோக்ஷ ஞானம் உண்டாயின், அஞ்ஞான இருள் அழிந்து போகும் எனத் தார்ஷ்டாந்தம் வருவித்துக் கொள்க. இதனை, சூரிய (சூரிய சந்நிதியில்) அந்தகார (இருட்டு) நாச (அழிவு) நியாயம் என்பர். சூரியன் என்பது இரவிக்குப் பெய ராம். அந்தகாரம் என்பது இருட்டுக்குப் பெய ராம். நாசம் என்பது அழிதலுக்குப் பெய ராம். சூரிய சந்நிதியில் இருட்டு நாசம் அடைவது போல, அவித்தையா ரூப இருள், அபரோக்ஷ வித்தையா விருத்தியைக் கண்ட வுடன் நாசம் ஆகும்.

இது போன்றே, விவேக சூடாமணி

"கரணமார் தெளிவி னாலே கறையறத் தீட்டப் பட்ட
அருமையா ஞான மென்னு மசியினாற் சிதையும் பந்தம்
பாவிய வத்தி ராதிப் படைகண்மற் றெவைலும் வந்தி
உரவிய கன்ம கோடி யொன்றிலுஞ் சிதைய மாட்டா" (173)

என்று விவேக சூடாமணியிலும், ஸ்ரீ சங்கர பூஜ்ய பகவத் பாதாசார்ய ஸ்வாமிகள் கூறியிருக்கின்றார்கள்.

தாற்பரியம் - குத்தும் வெட்டும் படைகளா லாகிய கர்மத்தினால், பூத விருளைப் போக்கல் முடியாது. அதற்குப் பரம விரோதி யான சூரியன் உதய மாயின் அவ் விருள் போவது போல, கரும யோக தவங்களால், அவித்தையா அந்தகாரத்தைப் போக்கல் முடியாது. பரம விரோதி யான "அஹம் பிரஹ்மாஸ்மி" என்ற



திட அபரோக்ஷ ஞானம் ஒன்றினாலேயே அவித்தையா அந்தகாரம் அழிவுறும் என்ப தாகும்.

ஆயுதம் நான்கு வகைப்படும் - முக்தம், அமுக்தம், முக்த அமுக்தம், யந்திர முக்தம் எனக் கூறுவர்.

1. முக்தம் - முக்தத்தை அஸ்திரம் என்பர். (கையில்) ஸ்திர மாய் இராதது அஸ்திர மாம். (கையினின்றும்) விடப்படுவது முக்த மாம். பாணம், சக்கரம் முதலியன கையில் நிலை யாக விராமல் விடப்பட்டுச் சென்று குறியைத் தாக்குவதால் முக்தம் எனப்படும்.

2. அமுக்தம் - அமுக்தத்தைச் சஸ்திரம் என்பர். (கையினின்றும்) விடுபடாதது அமுக்த மாம். (கையில்) நிலையா யிருப்பது சஸ்திர மாம். கையை விட்டு நீங்காமல் ஸ்திரமா யிருப்ப தாய வாள் முதலியன அமுக்தம் எனப்படுகின்றன.

3. முக்த அமுக்தம் - ஒரு கால் கையி லிருந்து விட்டும், ஒரு கால் விடாது வைத்தும், பிரயோகிக்கப்படும் ஈட்டி முதலியன ஆம்.

4. யந்திர முக்தம் - அம்பு, குண்டு முதலியன ஆம். அவை வில் முதலிய யந்திரங்களினின்றும் விடப்படுதலின், யந்திர முக்தம் எனப்படும்.

இந் நான்கு வகை ஆயுதங்களும் தநுர் வேதத்தில் கூறப்பட்டிருக்கின்றது.

கூடுமோ - ஓ - எதிர் மறை.

ரவி - வட மொழி. அது தமிழில் இகரத்தை முதலிற் பெற்று வழங்கும். அது ஈண்டுச் செய்யு ளோசை குறித்து முதற் குறையாயிற்று. "உத்தம மாம் ரவி" என, ரவிக்கு 'உத்தம' விசேஷணங் கொடுத்தது, தார்ஷ்டாந்தத்தை உய்த் துணர்ந்து கொள்ளுதற்கு

என உணர்க. அதாவது, உத்தமம் ஆம் ரவி என்பது, மேகம், கிரஹணம் முதலிய மறைப்பின்றி நன்கு பிரகாசிக்கும் மத்தியாந சூரியன் ஆம். மத்தியாந சூரிய சந்நிதியில் இருள் இராது. அது போல, அப்பிரதிபந்த திட அபரோக்ஷ ஞானத்தினுல், அவித்தையா அந்தகாரம் இராது, நாசம் உறும் என்ப தாம். (58)

அஞ்ஞான விருடீரக்க வறியாத நல்லகன்மம்,
மெய்ஞ்ஞாலந் தனைப்பரிக்கும் விதமெவ்வா றெனவினவ. **(59)**

(இ—ள்.) அஞ்ஞான - அவித்தை யாகிய, இருள் - அந்தகாரத்தினை, துரக்க - நிவிர்த்திக்க, அறியாத - தெரியாத, நல்ல - புண்ணிய, கன்மம் - கர்மம் (யோகம் தவங்கள்), மெய் - சத்தியமாயிருக்கின்ற, ஞாலம் தனை - பிரபஞ்சத்தினை, பரிக்கும் - காக்கின்ற, விதம் - தன்மை, எவ் வாறு - எப்படி? என - என்று, வினவ - (அருச்சுநன்) கேட்க, (எ-று).

"ஞாலம் தனை" என்பதில் - தன் சாரியை.

"மெய் ஞாலம்" என்புழி, ஞாலத்துக்கு "மெய்" என்னும் விசேஷணங் கொடுத்தது, ஞாநிகள் நீங்க லாக, ஏனை அஞ்ஞாநிகள் யாவருக்கும் உண்மை போலத் தோன்றுகின்றமையினுல் என உணர்க.

"கர்மம் உலகத்தைக் காத்தல்" எவ் வாறு கூடும் எனின், கூடும். என்னை? புண்ணிய கர்மம் அத்தியந்தம் இன்றேல், அதன் பலனை யநுபவித்தற் கிட மாய சுவர்க்க லோகமு மின்ருய் முடியும். பாப கர்ம மின்றேல், அதன் பலனை யநுபவித்தற் கிட மாய நரகமு மின்ருய் முடியும். மிசிர கர்ம மின்றேல், அதற் கேற்ற இக் கர்ம பூமியு மின்ருய் முடியும். மேலும் யாகாதி கருமங்களைச் செய்வதால் இந்திராதி தேவர்கள் அவற்றின் ஆகுதி மூலந் திருப்தி யடைந்து



மழை பெய்விப்பர். மழையினுல் நெல் முதலிய அன்னங்க ளுண்டாம். அவற்ருல் உலகு விருத்தி யடையும் என்பது தாற்பரியம். இதனை உபநிஷத்துக்கள், "புண்ணிய பாப மிசிர கர்மங்கள் தான் இவ் வுலகு பர உலகு என்பவற்றைத் தாங்குகின்றன" என்று கூறுகின்றமையே பிரமாணம் என்க.

கன்மம் அஞ்ஞானத்தினைப் போக்க ஆற்ற லற்றது எதனுல் எனின்? அதற்குச் சகாயமே யன்றி விரோதி யின்ருகலின். அஞ்ஞானத்தின் விரோதி ஞானம் ஆம். கர்மம் அன்ரும். இதனை,

கைவல்ய நவநீதம் 2-வது சந்தேகந் தெளிதற் படலம் 70ல்,

"பங்க மாகு மஞ்ஞானத்தைக் கருமங்கள் பகைசெயா துற வாக்கும், துங்க ஞானமே கருமவஞ் ஞானத்தைச் சுடுகின்ற நெருப் பாமே" என்றும், 77ல்,

"உலக மானவஞ் ஞானமுங் கருமமு முறவென்ற வழிகூடும்" என்றும் கூறப்படுவது கொண் டுணர்க.

கர்மம் புருஷ தந்திரம் என்றும், ஞானம் வஸ்து தந்திரம் என்றும் உணர்க. (59)

இந்திரசா லம்போல விவ்வுலகை நம்மிடத்திற்,
றந்திரமாத் தோற்றுவித்தோஞ் சத்யமல வென்றவரோ. **(60)**

(இ—ள்.) இந்திர சாலம் போல - இந்திர சாலக்காரனது (வித்தையாற் ருேன்றிய பதார்த்தங்கள் பொய்யாய்த் தோற்றுவது) போல, இவ் வுலகை - இந்தப் பிரபஞ்சத்தினை, நம் இடத்தில் - (சச்சிதாநந்த பிரஹ்ம மாகிய) நம் மிடத்தில், தந்திரம் ஆ(க) - உபாய மாக (அதாவது சத்திய மல்லாததைச் சத்தியம் போலத் தோற்றும்படி சூழ்ச்சி யாக), தோற்றுவித்தோம் - உண்டாக்கு

வித்தோம், சத்யம் அல - (ஆகலின் இது) உண்மை யன்று (மித்தையே), என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

பிரபஞ்சத்தினை இரக்ஷித்தல் கருமத்திற்குப் பொருந்தும் என்பது முன் செய்யுட்குச் சமாதாநங் கூறிய தாகக் கொள்க.

ஜால (வஞ்சக) வித்தை யானது, இந்திர ஜாலம், மஹேந்திர ஜாலம் என இரு வகைப்படும்.

1. இந்திர ஜாலம்:- இந்திரம் - மாயம், அல்லது, பொய். ஜாலம் - தந்திரம், அல்லது நடிப்பு. (பொய் யான நடிப்பு) அதாவது இல்லனவற்றை உள்ளன போற் காட்டல். அது மணலைக் கை முட்டியு ளடக்கி மறைத்துப், பின் அதனை வாசனை யுடைய, பூ, அல்லது, கடலை முதலியன வாக் காட்ட லாதி யாம்.

2. மஹேந்திர ஜாலம்:- மஹா + இந்திர + ஜாலம் - மஹேந்திர ஜாலம். முன் கூறிய இந்திர ஜாலத்தைக் காட்டிலும் சிறப்பும் அரிய மகத்துவமு முடைய தாக, மிக்க சாமர்த்திய முடைய சிற் சிலரால் சிற் சில விடங்களில் மாத்திரம் செய்யப் படுகின்ற, ஒருவரைக் கொன்று மீண்டும் உயிரோ டெழச் செய்தல், ஒரு நூதன உலகைப் புதி தாகத் தோற்றுவித்தல் முதலியன வாம். முற் கூறப்பட்ட இந்திர ஜாலம் பல சால வித்தைக்காரர்களால் சாமான்ய மாகப் பல விடங்களிலும் செய்யப்பட்டு வருகின்றது.

முந்திய செய்யுளில் அர்ஜுநன், "நல்ல கன்மம் மெய் ஞாலந் தனைப் பரிக்கும் வித மெவ்வாறு" என வினவிய வினவிற்கு, அக் கர்மம் அம் மெய்ஞ் ஞாலத்தை இவ் விதம் பரிக்கும் என நேரே விடை கூறவேண்டிய ஸ்ரீ பகவான், அங்ஙனம் கூறாது, இந்திர ஜாலம் போல இவ் வுலகைத் தந்திர மாத் தோற்றுவித்தோம் எனக்



கூறுவதன் கருத் தென்னை? அர்ஜுநன் மெய்ஞ் ஞாலந்தனைப் பரிக்கும் விதம் எவ் வாறு? என்று கேட்டதனால், உலகைச் சத்திய மாகக் கருதிக் கேட்கின்றான் என உணர்ந்த பகவான், சத்திய உலகம் ஒன்று இருந்தா லன்றோ அதனைக் கருமம் பரிக்கும் விதம் இவ் விதம் எனக் கூற லாம். அஃ தில்லாத போது அதனைப் பரிக்கும் விதமும் கூற வேண்டிய தில்லை என்னுங் கருத்தால், அர்ஜுநன் கருதியபடி உலகம் சத்தியம் அன்று. இந்திர ஜாலம் போலப் பொய், என்று காட்டுவான், "இந்திர ஜாலம் போல இவ் வுலகைத் தந்திர மாத் தோற்றுவித்தோம்" என் றருளினர். இன்னும் அதனை வற்புறுத்துவதற்கு, எதிர்மறை முகத்தாலும் "சத்ய மல" என் றருளினர் என்க.

"இந்திர ஜாலம் போலத் தந்திரமாத் தோற்றுவித்தோம்" என்புழித், தந்திரம் - சூழ்ச்சி. அது மித்தையாப் பிரபஞ்சத்தை அவிவேகிகட்கு சத்திய மாகத் தோன்றச் செய்யும் சூழ்ச்சி யாம். இந்திர ஜாலம், அதன் உண்மையை யறிந்தவர்க்குப் பொய்யாகவே தோற்றும். அது போல, இவ் வுலகமும் அத னுண்மையை யறியாத அஞ்ஞாநிகட்கு மெய் யாய்த் தோற்றி, அத னுண்மையை யறிந்த ஞாநிகட்குப் பொய் யாகத் தோற்றும். அவ் வொப்புமை கருதியே, அதற்கு இந்திர ஜாலம் திருட்டாந்த மாகக் கொடுக்கப் பட்ட தென்க.

சத்யம் அல - அல - ஒருமையிற் பன்மை மயக்கம்.

தந்திரமா - ஆ - ஆக என்பதன் கடைக் குறை. (60)

மித்தையெனுஞ் சகத்துநின்பால் விளங்குமோ வெனவினவ,
சுத்திதனி லேரசதந் தோன்றுதல்போ லென்றவரோ. (61)

(இ—ள்.) மித்தை - பொய், எனும் - என்று (அநுபூதி மான்களும், சுருதியும்) கூறும், சகத்து - பிரபஞ்சம், நின்பால் -

(சத் ரூப மான) உன்னிடத்து, விளங்குமோ - பிரதீதி யாமோ, என - என்று, வினவ - (அர்ஜுநன்) கேட்க, [அதற்குச் சமாதாநங் கூறுகின்றார்.] சுத்தி தனில் - (வியாவகாரிக சத்திய மான) கிளிஞ்சிலி னிடத்து, ரசதம் - (பிராதிபாசிக மித்தை யான) வெள்ளி, தோன்றுதல் - பிரதீதி யாதல், போல் - ஒப்ப (ச் சத்தியப் பிரஹ்ம வடிவ நம்மிடத்தில், இம் மித்தை யாகிய சகத்துத் தோன்றுதல் பொருந்தும்), என்றவரோ - என்று அநுக்கிரகித்த பகவானே (நீர்), (எ-று).

தார்ஷ்டாந்தம் - அதிஷ்டாந மாய வியாவகாரிக சத்திய கிளிஞ்சிலி னிடத்து, விரோத மின்றி மித்தை யாகிய வெள்ளி ஆரோப மாகத் தோற்றுதல் உலகாநுபவம்; அது போல, அதிஷ்டாந மாய பாரமார்த்திக சத்தியப் பிரஹ்ம சொரூப மாகிய நம் மிடத்தில், இம் மித்தை யாகிய சகத்து விரோத மின்றி ஆரோப மாகத் தோற்றல் பொருந்தும் என்பது தாற்பரியம்.

இதனை, சுக்திகா (கிளிஞ்சில்) ரஜத (வெள்ளி) நியாயம் என்பர். சுக்திகா என்பது கிளிஞ்சிலுக்குப் பெய ராம். ரஜதம் என்பது வெள்ளிக்குப் பெய ராம். அதிஷ்டாந வியாவகாரிக சத்ய கிளிஞ்சிலி னிடத்தில், ஆரோபப் பிராதிபாசிக வெள்ளி அநிர் வசநீயம் ஆகத் தோற்றுவது என்பது பொரு ளாம்.

சுத்தி தனில் என்பதில் - தன் - சாரியை. ஏ - அசை நிலை. விளங்குமோ - ஓ - வினா. ரஜதம் - என்னும் வட மொழி, தமிழில் இரசதம் என நிற்பது வழக்கு. அது ஈண்டு முதற் குறை யாய் ரசதம் என நின்றது.

இசை யெச்சத்தால் தாட்டாந்தத்தை வருவித் துரைக்க. (61)

அயல்வெள்ளி சுத்தியின்மே லாரோபி தங்கூடும்,
இயலுள்ள சகமுமுன்வே றிருந்ததுமுண் டோவெனவே. (62)



(இ—ள்.) அயல் - (ஆரோபிதத்திற்கு) அந்நிய மான, வெள்ளி - (வியாவகாரிக சத்திய) ரஜதம், சுத்தியின் மேல் - (வியாவகாரிகக்) கிளிஞ்சிலி னிடத்து, ஆரோபிதம் - ஆரோபித்தல், அல்லது, அத்தியஸ்தித்தல், கூடும் - பொருந்தும், உள்ள இயல் - (அது போல) உண்மை யான இயல் புடைய (அதாவது சத்தியத் தன்மை வாய்ந்த), சகமும் - பிரபஞ்சமும், முன் - (இவ் வாரோப சகத்திற்குப்) பூர்வம், வேறு - (இதற்கு) அந்நிய மாக, இருந்ததும் - இருந்தமை, உண்டோ - உளதோ? என - என்று (அர்ஜுநன்) கேட்க, (எ-று).

ஏ - ஈற் றசை. 'சகமும்' என்ற உம்மை இறந்தது தழீஇயது. 'இருந்ததும்' என்ற உம்மை அசை நிலை, உண்டோ - ஓ - வினா.

தாற்பரியம் - சத்திய ரஜத ஞாந சமஸ்காரத்தால், சுத்தி ரஜத அத்தியாசம் உண்டாதல் போல், சத்தியப் பிரபஞ்ச ஞாந சமஸ் காரத்தால், மித்தியாப் பிரபஞ்ச அத்தியாசம் பிரத்திய கபிந்ந பிரஹ் மத்தில் உண்டாம். இப் பொழுது தோற்றும் அத்தியஸ்தப் பிரபஞ் சத்திற்கு வேறாய், அவ் வத்தியாசத்திற்குக் காரண மாகச் சத்தியப் பிரபஞ்சம் ஒன்று இருந்ததா? அவ் வாறு சத்தியப் பிரபஞ்சம் ஒன்று இருந்தால், அதன் ஞாந சமஸ்காரத்தால், கடையில், அல்லது, காந்தையின் காத்தில் உள்ள சத்திய வெள்ளியின் ஞாந சமஸ்காரத்தால், கிளிஞ்சிலில் வெள்ளி அத்தியாசம் ஆவது போல், இம் மித்தையாப் பிரபஞ்ச அத்தியாசம் பொருந்தும். அவ் வாறு சத்தியப் பிரபஞ்சம் ஒன்று இருந்த தாகச் சுருதிகளாலும், பெரியோர்களாலும், கேட்கப்படாமையின், இப் பொழுது தோற் றும் பிரபஞ்சம் சத்தியமே யாம் என்னும் கருத்தால், அர்ஜுநன், "அயல் வெள்ளி சுத்தியின் மேல் ஆரோபிதம் கூடும். இயல் உள்ள சகமும் முன் வேறு இருந்ததும் உண்டோ" என்று வினவு கின்றனன் என உணர்க. (62)

மநமயக்கம் பிடிக்கிலில்லா வத்துவுந்தோன் றிடுமது வோ, கனவில்விண்ணிற் றான்பறக்கக் கண்டதுபோ லேன் றவரோ.
(63)

(இ—ள்.) மநம் - உள்ளம், மயக்கம் - மோகம், பிடிக்கில் - அடையில், இல்லா வத்துவும் - (மூன்று காலத்தும்) இல்லாத பதார்த்தமும், தோன்றிடும் - (ஆரோப மாக) விளங்கும், அது - அது (எது போல் எனில்), கனவில் - ஸ்வப்நாவஸ்தையில், தான் - தானே (தன்னை), விண்ணில் - ஆகாயத்தில், பறக்க - பறப்ப தாக, கண்டது - பார்த்தது, போல் - போல, என்றவரோ - என அருளிச் செய்த பகவானோ (நீர்), (எ-று).

அதுவோ - ஓ - அசை. 'வத்துவும்' என்ற உம்மை இழிவு சிறப்பும் இறந்தது தழீஇயது மாம்.

இல்லா வத்துவும் என்றதனால், பிராந்தி நிமித்த மாய, அநுபவ ஜந்ய சமஸ்காரத்திற் கேது வாகிய சத்திய, அல்லது, மித்தையா வஸ்துவே யன்றி, அச் சமஸ்காரத்திற் கேது வாகாத, இல் பொருளும் அதிஷ்டாநத்தில் ஆரோபித மாகும் என்னும் அர்த்தம் பெறப்படுகின்றது.

சஜாதீய சத்திய வஸ்துவின் சமஸ்காரமே அத்தியாசத்திற்கு ஏது வென்பது நியம மன்று. என்னை? ஒரு புருஷன் மா மரத்தை, அல்லது பே ரீந்தைப் பார்த்தது மில்லை; அது பற்றிக் கேட்டது மில்லை. ஆனால், வித்தையாடியாற் காட்டப் பட்ட பொய் மா மரத்தை, அல்லது, பே ரீந்தைப் பல தடவை பார்த்தும், "இது மா மரம்", அல்லது, "இது பே ரீந்து" என்று அவன் சொல்லக் கேட்டு மிருக்கிறான். அந்தப் புருஷன் இலுப்பை மரத்தை, அல்லது, சிற் றீச்ச மரத்தை, ஒரு காலத்திலும் பார்த்தது மில்லை. "இது இலுப்பை மரம்" அல்லது, "இது சிற் றீச்ச மரம்" என்று, பிறர் சொல்லக் கேட்டது மில்லை. அவனுக்கு இலுப்பை மரத்தை, அல்லது, சிற் றீச்ச மரத்தைக் கண்ட வுடன், அதனிடத்து மா மர, அல்லது, பேரீச்ச மர அத்தியாச முண்டாகின்றது. உண்மை யான மா மரத்தின், அல்லது, பே ரீச்ச மரத்தின் ஞாநமோ அவனுக் கில்லை. ஆனால், வித்தை யாடியால் காண்பிக்கப்பட்ட பொய் மா மரத்தின், அல்லது, சிற் றீச்ச மரத்தின் ஞாந ஜந்ய சமஸ்காரத்தால், இலுப்ப மரத்தில், அல்லது, சிற் றீச்ச மரத்தில், மா மரத்தின், அல்லது, பே ரீச்ச மரத்தின் அத்தியாச முண்டாய் விட்ட தாகலின் என்க.



இன்னும், இச் சமஸ்கார மாதிய பிரமாத்ரு தோஷமும், சாதிருசிய மாதிய பிரமேய தோஷமும், காமாலை யாதிய பிரமாண தோஷமு மாகிய, இம் முத் தோஷங்களு மில்லாமலே அத்தியாசம் உண்டாகக் கூடும். என்னை? ஆகாயத்தில் தோன்றும் நீல நிற அத்தியாசத்தில், சஜாதீய வஸ்து ஜந்ய சமஸ்காராதி பிரமாத்ரு தோஷமும், சாதிருசியாதி பிரமேய தோஷமும், காமாலை யாதி பிரமாண தோஷமும் எவ் விதத்தானும் இயம்பல் முடியா தாகலின் என்க.

ஆகவே, "கநவில் விண்ணில் தான் பறக்கக் கண்டது போல் இல்லா வத்துவும் தோன்றிடும்" என்னுங் கூற்றால், சாக்கிரத்தில் மநிதன் விண்ணிற் பறத்த லான அநுபவம் யார்க்கு மில்லை யாகலின், முன் னுள்ள அநுபவ ஜந்ய சமஸ்காரத்தால் அஃ துண்டாக வில்லை. பின்னர், அவித்தையா தோஷத்தால், அல்லது, மந மயக்கத்தால், முன் இல்லாத வஸ்துவும் அத்தியஸ்த மாகும் என்பது பெறப்படுகின்றது.

எனவே, இப் பிரபஞ்ச அத்தியாசத்திற்கு, இதற்கு முன் சத்திய மாகவோ, அல்லது, மித்தை யாகவோ, ஒரு பிரபஞ்ச

யிருந்து, அதன் அநுபவ ஜந்நிய சமஸ்காரம் எது வாக வேண்டு மென்ப தில்லே. அஃ தில்லாமலும் இப் பிரபஞ்ச அத்தியாசம் உள்ள தாம்; என்பதனை "மந மயக்கம் பிடிக்கில் இல்லா வத்துவும் தோன்றிடும்" என்னும் பாவால் உணர்த்தினர் என்க. (63)

கனவுபோற்பிர பஞ்சமேன்றீர் கண்விழித்தாற் கனவு
போய்யாம், வினவுசகந் திநமுமேய்யா விளங்குவதேன்
சோல்லுமேன. (64)

(இ—ள்.) கனவு - ஸ்வப்ந (ப் பிரபஞ்ச)ம், போல் - (மித்தை யாவது) போல, பிரபஞ்சம் - இவ் வுலகமும், என்றீர் - (மித்தை) எனக் கூறி யருளினீர், [திருஷ்டாந்தம் விஷமம் என வினவு கின்றன்.] கனவு - அச் சொப்பநப் பிரபஞ்சம், கண் விழித்தால் - ஜாக்கிராவஸ்தையினை அடைந்தால், பொய் யாம் - மித்தையாய் (ப் போய்) விடும், வினவு - (நான்) கேட்கின்ற, சகம் - இப் பிரபஞ்சம், திநமும் - நா டோறும், மெய் யா(க) - சத்திய மாக, விளங்குவது - தோற்றுவது, என் - யாது காரணம், சொல்லும் - (என்பதனைக்) கூறி யருளும், என - என்று (அர்ஜுநன்) கேட்க, (எ-று).

'திநமும்' என்ற உம்மை - முற்று.

சாக்கிர அவஸ்தை - யாண்டு பதி ஞன்கு தேவர்களால் அநுக்கிரகிக்கப் பட்டுப், பதி ஞன்கு இந்திரியங்களால் ஸ்தூல விஷய போகமும், விகிதக் கிரியையும், பிராரப்த கர்ம அநு சாரத்தால் உண்டாகின்றனவோ, அச் சத்துவ குண பரிணம ரூப புத்தி விருத்தி, சாக்கிர அவஸ்தை யாம். விசுவன் அதன் அபிமாநி யாவன்.

"திக்கு முதலிய அதிஷ்டாதா தேவதைகளால் அநுக்கிரிக்கப் பட்ட சுரோத்திர முதலிய இந்திரியங்களால், சப்த முதலிய விஷயங்களின் அநுபவம் எவ் வவஸ்தையில் நிகழ்கின்றதோ, அவ் வவஸ்தை சாக்கிரா வஸ்தையாம்" என்பது தத்துவாநுசந்தாநம்.



ஸ்வப்ந அவஸ்தை - யாண்டுச் சாக்கிர போகத்தினைக் கொடுக்கும் கர்மம் க்ஷயம் ஆய், ஸ்வப்ந போகத்தினைக் கொடுக்கும் கர்மம் உதயம் ஆய், வாசநா ரூப இந்திரியங்களால், வாசநா ரூப சூக்ஷ்ம போகமும், கிரியையும், உண்டாகின்றனவோ, அந்த ரஜோ குண பரிணம ரூப புத்தி விருத்தி ஸ்வப்ந அவஸ்தை ஆம். தைஜஸன் அதனது அபிமாநி யாவன்.

"சாக்கிர அவஸ்தைக் குரிய சுக துக்க மாகிய போகத்தைப் பயப்பன வான புண்ணிய பாப கர்மங்களுக்கு உபராமமு (ஓய்வு)ம், சுரோத்திராதி இந்திரியங்களுக்கு உபராமமு முண்டாகவும், சாக்கிரத்தின் அநுபவத்தாற் றேன்றும் சமஸ்காரங்களால் எவ் வவஸ்தையில் சப்த முதலிய விஷயங்களும், அவற்றின் ஞாநமும், உற்பத்தி யாகின்றனவோ, அவ் வவஸ்தை சொப்பநா வஸ்தை யாம்" என்பது தத்துவாநுசந்தாநம்.

சுழுப்தி அவஸ்தை - ஜாக்கிர ஸ்வப்நங்களின் உத்பத்தி லயத்தின் ஸ்தாநம் ஆய், சர்வ விசேஷ விருத்தி அபாவம் யாது, அத் தமோ குண பரிணம ரூப புத்தி விருத்தி சமஸ்கார ரூபம் சுழுப்தி அவஸ்தை ஆம். பிராக்ஞன் அதனது அபிமாநி யாவன்.

"எவ் வவஸ்தையில் சாக்கிர சொப்பநம் என்னும் இரண்டிற்கும் போகத்தைத் தருவ தான கர்மங்களின் உபராமத் தன்மையால், ஸ்தூல சூட்சும சரீரங்களின் அபிமாநம் நீங்குதல் வாயி லாகச் சர்வ விசேஷ ஞாநங்களின் உபராமத் தன்மை யாகிய புத்தியின் காரண அஞ்ஞாந மாக நிலைத்த லுண்டோ, அவ் வவஸ்தை சுழுத்தி அவஸ்தை யாம்" என்பது தத்துவாநுசந்தாநம்.

இம் மூன்று அவஸ்தைகளும் உத்பத்தி நாசம் உடையன வாகலின், பிராரப்த கர்ம அதீநம் ஆம்.

சோபாதிகப் பிராந்தி - உபாதியோடு கூடிய அஞ்ஞாநத்தினால் தோன்றும் பிராந்தி - சோபாதிகப் பிராந்தி யாம். இத் தன்மையன, கண்ணாடியில் பிரதிபிம்பமும், ஜலத்தில் தலை கீழாகத் தோன்றுதலும், பிரபஞ்சமும், முதலியன ஆம்.

நிருபாதிகப் பிராந்தி - கேவல அஞ்ஞாநத்தினால் தோன்றும் பிராந்தி - நிருபாதிகப் பிராந்தி யாம். இத் தன்மையன, ரஜ்ஜுவில் தோன்றும் சர்ப்பம், ஸ்வப்நப் பொருளும், ஸ்வப்நமும் முதலியன ஆம்.

ஸ்வப்நம் நிருபாதிகப் பிராந்தி யாகலின், ஜாக்கிரம் வந்ததும் நிவிர்த்தி யாம். பிரபஞ்சம் சோபாதிகப் பிராந்தி யாகலின், ஞாநம் வந்த பின்னரும் நிவிர்த்தி யாகாமல் தக்த படம் போல் தோற்றிக் கொண்டிருக்கிறது என விவேகித்து உணர்க.

வேதாந்த சூடாமணி -

“.........இப்பி தந்தவிர சதநிருபா திகப்பிரமை யாகுந்
தன்மையா லுணர்ந்தளவில் வெள்ளியுரு வொழியும்
பந்தமுறு மிதுசோபா திகமாகும்.........” 163 என்றும்,

“தடத்தினுயர் கரையமர்வோ னத்தடத்துப் புனலிற்
றானதோ முகமா யிருப்பதுபொய் யென்று
படைத்ததெளி வுளமொடிருப் பினுமதோ முகமாம்
படிவந்தோன் றுதல்போல மூலவகங் காரம்
அடுத்துவரு சிவபா வாதிகமோ மித்தை
யறிதுரியன் றானெனவே யுணரினுஞ்சீ வாதி
தொடுத்தவுல குறுதலினால்...........” 164. என்றும்,



சோபாதிகப் பிராந்தி, நிருபாதிகப் பிராந்திகளை, வேதாந்த சூடாமணி கூறுதல் கொண்டு உணர்க.

“கனவு போல் பிரபஞ்சம்” என்று ஸ்ரீ பகவான் கூறியிருப்பது போன்றே, கைவல்ய நவநீதம் 1. தத்வ விளக்கப் படலம் -

“கற்பனை வந்த வாறு காட்டினோம் காண்ப வெல்லாஞ்,
சொற்பனம் போலு மென்றே துணிந்தவன் ஞாநி யாவான்.” 38.

என்று கைவல்ய நவநீதத்தில் கூறியிருக்கின்றது உணரற்பாற்று. (64)

மெய்யாக விளங்குவது மெய்ஞ்ஞாநம் வருமளவும்,
பொய்யாம்பின் கனவதுபோற் போதம்வரி லென்றவரோ. (65)

(இ—ள்.) மெய் ஞாநம் - (திட) தத்துவ ஞாநம், வரும் அளவும் - வருகின்ற வரையும், மெய் ஆக - (இவ் வுலகம்) சத்திய மாக, விளங்குவது - தோற்றுவ தாம், பின் - பின்னர், போதம் - (திட தத்துவ) ஞாநம், வரில் - வரு மாயின், கன வது போல் - ஸ்வப்ந உலகம் போல், பொய் ஆம் - (இச் சாக்கிரப் பிரபஞ்சம்) மித்தை யாம், என்றவரோ - என அருளிச் செய்த பகவானோ (நீர்), (எ-று).

‘கன வது’ என்பதில் அது பகுதிப் பொருள் விகுதி.

‘அளவும்’ என்ற உம்மை - முற்று.

ஸ்வப்நப் பிரபஞ்சம், சாக்கிர அவஸ்தை வந்த வுடன் பொய் யாம். அபரோக்ஷ ஞாநத்திற்குப் பூர்வம், ஜகத் சத்திய மாக அவித்தையினால் விளங்கும். அபரோக்ஷ ஞாநம் வந்த வுடன் அஞ்ஞாநமும், அஞ்ஞாந காரிய ஜகத்தும் மித்தை யாம், என்பது ஊஹம் ஆம்.

தாற்பரியம் - "சகம் நிசமும் மெய்யாக விளங்குவது என்" என்று அர்ஜுனன் முற் செய்யுளில் வினவிய வினவிற்கு, "மெய்ஞ் ஞானம் வரும் அளவும்" என்று எல்லை கூறி, நேர் விடை கூறுமையின், மெய் ஆக விளங்குவதற்கு ஏது, "அஞ்ஞானமே" என்று விடை கூறின தாகக் கொள்க. இங்ஙனம் கொள்ளா தொழியின், விடை யிறுக்க வில்லை யென மலைவு உண்டாம். ஸ்ரீ பகவான் மீது குற்றம் வாரா திருத்தற்கு, "மெய்ஞ் ஞானம் வரும் அளவும்" என்ற எல்லைச் சொல்லில் அவாய் நிலையான் விடை யிருக்கின்றது என உணரற்பாற்று. (65)

முன்புகண்ட கனவுபொய்யா முழிசாக்ரம் போலவென்றீர்,
பின்புமுத்தித் தசையடைந்தும் பிரபஞ்சநிற்ப தேதெனவே(66)

(இ—ள்.) முழி - கண் விழித்துக்கொள்கின்ற, சாக்ரம் - (வியாவகாரிக) சாக்கிராவஸ்தையில், முன்பு - பூர்வம், கண்ட - பார்த்த, கனவு - ஸ்வப்ந வுலகு, பொய் யாம் - மித்தை யாம், போல - அஃ தொப்ப (ஞான சாக்கிராவஸ்தையில் வியாவகாரிகப் பிரபஞ்சம் மித்தை யாம்), என்றீர் - என அநுக்கிரகித்தீர், பின்பு - (ஞானம் வந்த) பின்னர், முத்தி தசை - மோக்ஷ நிலையினை, அடைந்தும் - (அந்த ஞானத்தால்) சார்ந்ததன் மேலும், பிரபஞ்சம் - உலகம், நிற்பது - (முன் போலத் தோன்றிக் கொண்டு) இருப்பது, ஏது - யாது காரணம், என - என்று (அர்ஜுனன்) வினவ, (எ-று).

முழித்தல் என்பது விழித்தலுக் காம். ஏ - அசை.

"அடைந்தும்" என்ற உம்மை - இறந்தது தழீஇயதும், உயர்வு சிறப்பு மாம்.

தாற்பரியம் - சாக்கிர அவஸ்தை வந்தவுடன் சொப்பனா வஸ்தையும், சொப்பன பதார்த்தங்களும் நாசம் ஆதல் போல, பார மார்த்திக ஆத்ம அபரோக்ஷ ஞானம் வந்த வுடன், வியாவகாரிகப்



பிரபஞ்சம் பொய் யாகப் போகாமல், முன் போலப் பின்னும் விளங்குகின்றது யாது காரணத்தால் என அர்ஜுனன் கருத்தை வெளியிட்ட தாம். (66)

தெரிந்தவர்க்குத் தோற்றுவது தெத்தபடம் போல்வதல்லாற்,
பரந்தசகங் காரியத்திற் பயன்படா தென்றவரோ. (67)

(இ—ள்.) தெரிந்தவர்க்கு - (பிரஹ்மாபிந்ந ஆத்ம) ஞானி களுக்கு, பரந்த - விரிந்த, சகம் - பிரபஞ்சம், தோற்றுவது - பிரதீதி யாவது, தெத்த - (நெருப்பினால்) தகிக்கப்பட்ட, படம் - வஸ்திரம், போல்வது அல்லால் - (குளிர் நீக்க லாதி காரியங்கட் குதவாது தோற்ற மாத்திரமா யிருப்பது) போன் றிருப்பதே யன்றி, காரியத்தில் - (ஜநந மரணத்தைக் கொடுத்த லாதி) காரியத்திலே, பயன்படாது - (ஒரு சிறிதும்) பிரயோஜநப்படாது, என்றவரோ - என அநுக்கிரகித்த பகவானோ (நீர்), (எ-று).

தக்த படம் - தெத்த படம் என வந்தது, இதனை தக்த (கொளுத்திய) பட (வேஷ்டி) நியாயம் என்பர். தக்தம் - நெருப் பில் கொளுத்துவதற்குப் பெய ராம். படம் என்பது வேஷ்டிக்குப் பெயர் ஆம்.

திருஷ்டாந்தம் - நெருப்பில் வைத்து எரிக்கப்பட்ட வேஷ்டி ஏனைய வேஷ்டி போல் தோற்றினும், சீத (குளிர்) வாத (காற்று) ஆதப (வெய்யில்) முதலியவற்றை மாற்ற யோக்கிய மின்றி யிருப்ப தாம்.

தார்ஷ்டாந்தம் - அப்பிரதிபந்த அபரோக்ஷ ஞானம் வந்த பின், ஞானிகளுக்கு முன் போல் பிரபஞ்சம் நாம ரூப ஆத்மக மாகத் தோற்றினும், ஜநந மரண முதலிய பந்தத்திற்கு ஏது வாகாது. (67)

கன்மவினை யஞ்ஞானங் கடந்துமதன் காரியமாம்,
புன்மையுறு மெய்யுடனே போகாத தேதெனவே. (68)

(இ—ள்.) கன்ம - (தேகாபிமான மின்மையின் அதனைச் சம்ரக்ஷித்த லாகிய) தொழிலும், வினை - (அதற் கேற்ற) பிரயத்தனமு (முயற்சியு)ம், அஞ்ஞானம் - (அவ் வுடலின் உபாதான காரண) அஞ்ஞானமும், கடந்தும் - நீங்கியும், அதன் - அந்த அஞ்ஞானத்தின், காரியம் ஆம் - காரிய மாகிய, புன்மை - இழிவு, உறு - பொருந்திய, மெய் - (தூல) சரீரம், உடனே - அப்பொழுதே, போகாதது - நீங்காதது, ஏது - யாது காரணம், என - என்று (அர்ஜுனன்) வினவ, (எ-று).

ஏ - அசை. கடந்தும் என்ற உம்மை இறந்தது தழீஇயது.

**வினவின் கருத்து.**

"பரமமா ஞானந்தோன் றுதலுமே கதிர்முன்
பாயிருள்போ லஞ்ஞானத் துடனதன்கா ரியமாம்,
புரமுதலா யினவனைத்து மகன்றிடுத ருனே
புகலரிய விதேககை வல்லியமென் றிசைப்பர்,
உரமுறுமிங் கிதுவாகச் சீவன்முத்தி யுளதென்
றுரைப்பதெவ்வா றெனிற்கயிற்றி னரவமயக் கொழிந்தும்,
வருமதன்கா ரியமாகும் பயகம்ப மாதி
மருவுதல்போன் ஞானத்தா லஞ்ஞானங் கெடினும்"

என்று வேதாந்த சூடாமணி (157) கூறும், சிலர் பக்ஷக் கருத்தைக் கொண்டு, கதிர் முன் பாய் இருள் போல, பிரஹ்ம ஞானம் உண்டான உடனே, அஞ்ஞானத்தினேடு அதன் காரியமாகிய சரீரம் முதலிய அனைத்தும் நீங்குவ (தே ஞானத்தினல் அடைவ) தாம். என்று கூறுவதால், "கன்ம வினை அஞ்ஞானம் கடந்தும் அதன் காரியம் ஆம் புன்மை உறு மெய் உடனே போகாதது ஏது என" அர்ஜுனன், கால விலம்பத்துக் காரணம் யாது என ஸ்ரீ பகவானிடம் வினவின தாம்.



இத் தேகத்திற்குப் பரிணமி உபாதான காரணம் இத் தேக அவச்சின்ன சைதந்நியத்தை ஆசிரயித் துள்ள அஞ்ஞானம். நிமித்த காரணம் பிராரப்த முதலியன. அது, இங்கே உயிரோடு நிலைத் திருத்தற்கு ஏது, முற் கூறிய காரணங்களோடு, அதனைப் போஷித்த லாதி ஆகாமிய கர்மங்களு மாம். அதன் உற்பத்திக் கோ, அல்லது, நிலைத்தலுக்கோ ஏது வாதலின், சஞ்சித கர்மத் திற்கு எவ் விதச் சம்பந்தமு மில்லை.

ஆனல், அது இனி வருந் தேகத்திற்கு நிமித்த ஏது வாக லாம். முத்தனுக்கு, அல்லது, ஞானிக்கு, ஞானத்தால் அஞ்ஞானம் நசிக்கும் போது, அதனை ஆசிரயித் திருக்குஞ் சஞ்சித கர்மமும் கூடவே நசித்து விடுகின்றது. இன்னும், இரண்டு வினைகள் எஞ்சி யுள்ளன. அவற்றுள், பிராரப்த கர்மம், சஞ்சிதம் போல, இடையில் ஞானத்தால் நசியாமல், தனது போகத்தைக் கொடுக்கும் வரையும் தேகத்தையும் அழியாமல் தடுத்து நின்று, போக முடிவில் தேகம் அழியும் போது தானும் கூடவே அழியுந் தன்மையது.

ஈண்டுக் "கன்ம வினை அஞ்ஞானம் கடந்தும் அதன் காரியமாம் புன்மை யுறு மெய் உடனே போகாதது ஏது" என வினவப்படுகின்றது. இதில், "கன்ம வினை அஞ்ஞானம் கடந்தும்" (நசித்தும்) என்னுங் கூற்றுல், தேகத்தை அழியாமல் காப்பதற்கு ஏது வாயும், தேக அழிவிற்கு முன்னே அழிந் துள்ள தாயு முள்ள கர்மம் ஒன்று பெறப்படுகின்றது. அது, போக முடிவில் தேகத்தோடு நசிக்கும் பிராரப்த கர்ம மாகாது. இனி, எஞ்சி யுள்ளது ஆகாமிய கர்மம் ஒன்று மாத்திரமே.

அதுவே இங்குக் "கன்மம்" என்ற சொல்லால் கொள்ளத் தக்கது. அது, ஆன்மாவிற்குத் தேகத்தில், "நான், எனது" என்பதாக வுள்ள அபிமான வடிவ சம்பந்தத்தைப் பற்றி யிருப்பது. அதன் பற்றுக் கோடாகிய அபிமான வடிவ அச் சம்பந்தம் ஞானம் வந்த வுடனே அழிந்து விடுகின்றபடியால், அதனை ஆசிரய மாகக் கொண்ட ஆகாமியமும் ஞானிக் கில்லாமல் ஒழிந்து விடுகின்றது. அது, தேகாபிமானத்தால் அதனைப் போஷித்த லாதிய அதன் சம்ரக்ஷணைக் குரிய கர்மங்க ளாம். ஞானிக்கு அவ் வபிமான மின்மையின் அக் கர்மங்களும் அவனுக் கில்லா தொழிந்தன.

இனிக் "கன்ம வினை" என்புழி, வினை என்பது, அக் கர்மத்திற் கேது வாய முயற்சி யாம். ஈண்டு வினை காரிய வாகு பெய ராய் அதன் காரண முயற்சியைக் குறித்து நின்றது. அது அவ் வா றுதல், திருக் குறள், 62-ம் அதிகாரத்தில், "ஆள் வினை யுடைமை" என்பதற்கு, பரிமே லழகர், "இடை விடாத மெய்ம் முயற்சி யுடைய னுதல், அஃது ஆளும் வினை யெனக் காரியத்தாற் கூறப்பட்டது" எனக் கூறுதல் கொண் டறிக. (68)

வெட்டவிழு மரம்பசந்து விளங்குதல்போற் சிலகால
நட்டகன்ம மாய்ந்துமங்க நடித்திடுங்கா ணென்றவரோ. (69)

(இ—ள்.) வெட்ட - (கோடாரி முதலியவற்றால்) தறிக்க, விழும் - சாய்கின்ற, மரம் - விருக்ஷம், பசந்து - (காயாது) பசுமை யாக, சில காலம் - சொற்ப காலம், விளங்குதல் - தோற்றுதல், போல் - ஒப்ப, நட்ட - (அபிமானத்தோடு விரும்பிச்) செய்கின்ற, கன்மம் - (அவ் வுடலைச்) சம்ரக்ஷித்த (காத்த)ல் தொழில், மாய்ந்தும் - நாசம் ஆகியும், அங்கம் - (தூல) சரீரம், சில காலம், பிராரப்த க்ஷய பரியந்தம், நடித்திடும் - சஞ்சரிக்கும், என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).



காண் - அசை. மாய்ந்தும் என்ற உம்மை இறந்தது தழீஇயது.

இதனை, தரு (மரம்) சேத (வெட்ட) ஆர்த்ர (ஈரத் தன்மை) நியாயம் என்பர். தரு என்பது மரத்திற்குப் பெயர் ஆம். சேதம் என்பது வெட்டுதலுக்குப் பெயர் ஆம். ஆர்த்ரம் என்பது ஈரத் துக்குப் பெயர் ஆம்.

திருஷ்டாந்தம் - காரணம் கெட்டும், காரியம் சில காலம் இருக்கும் என்பது. மரத்தினை வெட்டியதும், மூல மான வேர் அகன்றும், அதன் காரிய மாகிய மரம், உயிர் மரம் போன்று, சில கால பரியந்தம் பசுமையா யிருத்தல் என்பது.

தார்ஷ்டாந்தம் - பிரஹ்மாபின்ந ஆத்ம அப்பிரதிபந்த அபரோக்ஷ ஞானம் வந்த வுடன், அஞ்ஞானம், அஞ்ஞான காரிய மான சஞ்சித கர்மம் நாசம் ஆம். பிராரப்த கர்ம பரியந்தம் விக்ஷேப சக்தியின் காரிய மான சரீரத் திரயங்களும் நாச மாகாமல் இருக்கும். விட்ட பாணத்தைத் தடுத்தல் முடியாமை போன்று, ஞானத்திற்குப் பிராரப்த கர்மத்தை நாசம் செய்யும் ஆற்றல் இன்று.

சஞ்சித கர்மம், ஆகாமிய கர்மம் இரண்டனுள், சஞ்சிதம் - ஆவரண சக்தி விசிஷ்ட அஞ்ஞானத்தினை ஆசிரயித் திருப்பது. ஆகாமியம் - அகங்கார தேகாதிகளோடு ஆத்மாவிற் குள்ள பிராந்திஜ தாதாத்மிய சம்பந்தத்தை ஆசிரயித் திருப்பது. அவ் ஆகாமியத்தின் ஆசிரய மாகிய தேகாபிமானம் என்னும் தாதாத் மியம், ஞானிக்கு ஞானம் வந்த போது நாச மானமையின், அவை ஞானியைப் பற்றுவ தில்லை. பின்னரோ, அவனைப் புகழ்தல், இகழ்தல் செய்பவர்களைப் பற்றும். பிராரப்த கர்மம்; விக்ஷேப சக்தி விசிஷ்ட அஞ்ஞானத்தினை ஆசிரயித் திருப்பது என்று விபாகித்து உணர வேண்டும்.

அத்யாத்ம உபநிஷத் - "நான் பிரஹ்மம் என்னும் விஞ்ஞானத்தினுல் நூறு கோடி ஜன்மங்களில் சம்பாதிக்கப்பட்ட சஞ்சிதம் (கர்மம்), விழிப்பினுல் ஸ்வப்ந கர்மம் நாசம் ஆவது போன்று, நாசம் ஆகின்றது." 50.

"தன்னை ஆகாயம் போல அசங்க மாகவும், உதாசீந மாகவும் அறிந்து, யதி யானவன் ஆகாமிய கர்மங்களால் எப் போதும் சிறிதும் பற்றப்படுகிற தில்லை." 51.

"ஞான உதயத்திற்கு முன் ஆரம்பிக்கப்பட்ட கர்மம், லக்ஷியத்தினை உத்தேசித்து விடப்பட்ட பாணம் போல், தனது பயனைத் தராமல், ஞானத்தினுல் நசியாது." 53.

"ஒருவன் புலி என்னும் புத்தியால் விட்ட பாண மானது, பின், பசு என்று மதித்த காலத்து நிற்ப தில்லை, லக்ஷியத்தினை (பசுவினை) வேக மாய்ச் சென்று பேதிக்கவே செய்கின்றது." 54.

எனச் சஞ்சித, ஆகாமிய, பிராரப்த கர்மங்களைப் பற்றிக் கூறுகின்றதை ஊகித்து உணர்க.

வேதாந்த சூடாமணி - "சீவந் முத்தற், கிரிதருஞ்சஞ் சிதமங்கி புகுமுளிமுற் போல, மெய்ஞ்ஞானத் தாற்பிரா ரத்தநுகர்ந் தொழியு, மேல்வினைகூ டாதநதி காரியா தலினுல்," (159) என்று கூறுகின்றது. அதாவது, ஜீவந் முத்தனுக்கு, அக்கியில் போட்ட பூளைப் புல் போல, அபரோக்ஷ ஞானத்தினுல், சஞ்சித கர்மம் நாசம் ஆம். அநதிகாரியா யிருத்தலின், ஆகாமிய கர்மம் பற்றுது. பிராரப்த கர்மம் அநுபவித்துத் தீரும். எனப் பிரித்துக் கூறுதலும் கொள்ளற் பாற்று.

(69)

சென்மம்போய் முத்தியினைச் சேரச்சி லரிருக்கத்,
தொன்மையாந் மாபலவோ சொருபம்ப கருமென. (70)



(இ—ள்.) சிலர் - சிறுபான்மையோர், சென்மம் - ஜன்மத்தினின்றும், போய் - நீங்கி, முத்தியினை - மோக்ஷத்தினை, சேர - அடைய, (சிலர்) - சிலர் (அதனைச் சேராமல், அதாவது பந்தமுடையோராய்), இருக்க - இருத்தற் கேற்க, தொன்மை - அநாதியா யிருக்கின்ற, ஆன்மா - ஆத்மா, பலவோ - நாநாவோ (அல்லது, அப்படி யன்றே), சொரூபம் - (அவ் வாந்மாவின் உண்மை) ஸ்வரூபத்தினை (வடிவினை), பகரும் - கூறி யருளும், என - என்று (அர்ஜுநன்) கேட்க, (எ-று).

'சிலர்' என்ற சொல்லைப் பின்னரும் கூட்டுக.

"முத்தியினைச் சேரச் சில ரிருக்க" என்னும் வாக்கியத்தில் அவ் விடத்திற் கேற்ப, "இருக்க" என்னும் சொல்லின் முன், "சேராமல்" என்னும் ஒரு சொல் எஞ்சி நின்று, வருவித்துரைக்கப்பட்டது. இது சொல் லெச்சம் ஆம். அவ் வா றன்றி, "அம் முத்தியினைச் சேராமல்" எனப் பல சொற்கள் வருவிக்கப்பட்டன வாகக் கொள்ளின், அவை இசை யெச்சத்தால் வருவிக்கப்பட்டன வெனக் கொள்க.

வினுவின் கருத்து - ஆத்மா நாநாவா? அன்ரு? நாநா வாயின் பொருந்தும். எதனுல் எனின், சிலர் மோக்ஷம் அடைந்தவர்க ளாகவும், பலர் பந்தம் உடையோர்க ளாகவும், சிலர் ஞாநிக ளாகவும், பலர் அஞ்ஞாநிக ளாகவும், காணப்படுதலின் என்க. அவ் வா றன்றி, ஆத்மா ஒன்றே. ஓர் அவித்தை, அம்ச பேதத்தால் பல அவித்தைக ளாக விளங்குதல் போன்று, அதுவும், அம்ச பேதத்தாற் அர்த்த ஜாதீய நியாயம் போன்று பலவே எனக் கூறின், சிலர் முக்தர், சிலர் பத்தர் என்பது பொருந்து மாயினும், ஆத்மா நிரம்சி என்பதற்கு விரோதம் வரும். அன்றியும், அம்சங்கள் பத்தத் தன்மை, முக்தத் தன்மைகளை அடைந்தனவே அன்றி, அம்சி யாகிய

ஆத்மா பத்தனும் முக்தனும் ஆக வில்லை என்பது வரும். ஆகவே, உலகத்தில் எல்லோராலும் பிரத்தியக்ஷ மாக "சிலர் பத்தர், சிலர் முக்தர்" என்று அநுபவிக்கப்படும் வியவகாரத் திற்கு விரோதம் வரும். அநுபவ விரோத மாகக் கூறுவது பொருந்தாது, என்று கருதிய அர்ஜுநன், "செந்மம் போய் முத்தியினைச் சிலர் சேர, (சிலர் பத்தர்க ளாய்) இருக்கத் தொன்மை ஆந்மா பலவோ சொரூபம் பகரும்" என்று, ஆத்மா பலவா ஒன்ரு என வினவினன் எனக் கொள்க.

அர்த்த ஜரதீய நியாயம் ஆவது:- அர்த்தம் - பாதி, ஜரதீயம் - விருத்தத் தன்மை யுடைய (வயோதிக) ஸ்திரீ. அதாவது, வய தான ஸ்திரீயி னுடைய புருஷன், வய தான முகத்தினை மாத்திரம் கவர்ந்து, ஏனைய அவயவங்களை விட்டுவிடுதல், இது யுக்தி யின்றிய தாம். இதனை அர்த்த ஜரதீய நியாயம் என்பர். (70)

பிரமமென்று மீசனேன்றும் பெருகுபல சீவரேன்றும்,
உரைமயக்க மலதாந்மா வோருவனே யேன்றவரோ. (71)

(இ—ள்.) பிரமம் - (தத் பத லக்ஷியப்) பிரஹ்மம், என்றும் - எனவும், ஈசன் - (தத் பத வாச்சிய) ஈசுவரன், என்றும் - எனவும், பெருகு - மிகுந்த, பல - நாநா, சீவர் - (த்வம் பத வாச்சிய) ஜீவர் (த்வம் பத லக்ஷிய கூடஸ்தர்), என்றும் - எனவும், உரை - கூறுவது, மயக்கம் - பிராந்தியே, அலது - அன்றி, ஆந்மா - (அதிஷ்டாந) ஆத்மா, ஒருவனே - ஏகனே, என்றவரோ - என அநுக்கிரகஞ் செய்த பகவானே (நீர்), (எ-று).

உம்மைகள் மூன்றும் எண்ணுப் பொருளன.

ஒருவனே - ஏ - தேற்றம்.

உரை என்பது - தல் - விகுதி குறைந்த முத னிலைத் தொழிற் பெயர்.



தத் பத வாச்சியம் - வாசகத்தின் ஆற்றலால் அறியப்படு பொருள் வாச்சிய மாம். அது என்னும் சொல்லின் சக்தி கொண்டு அறியப்படு பொருள் என்பது திரண்ட அர்த்த மாம். அவ் வர்த்தம் சர்வக்ஞத்வாதி கல்யாண குண விசிட்ட ஈசர ஞம். விராட்டு, ஹிரண்ய கர்ப்பம், அவ்யாகிருத மாகிய சரீரத் திரயம், வைசுவா நரன், சூத்ர ஆத்மா, அந்தர்யாமி யாகிய அபிமாநித் திரயம், சாக்கிர, ஸ்வப்ந, சுழுத்தி யாகிய அவஸ்தாத் திரயம், அதிஷ்டாந சேதநம் ஆகப் பத்தும் ஒன்று சேர்ந்தே வாச்சிய மாம். ஆற்றல் - சக்தி விருத்தி, அது பதத்திற்கு அர்த்தத்தோ டுள்ள நேர் சம்பந்த மாம்.

தத் பத லக்ஷியம் - சுத்த சேதந மாம். அது, தத் பதத்தின் இலக்ஷண விருத்தியா லறியப்படு பொரு ளாம். இலக்ஷண விருத்தி - பதத்திற்கு அர்த்தத்தோ டுள்ள பரம்பரா சம்பந்த மாம்.

த்வம் பத வாச்சியம் - நீ என்னும் சொல் உரையின் பொருள் என்பது திரண்ட பொரு ளாம். அது, கிஞ்சிக்ஞத்வாதி ஹீந குண விசிட்டன் சீவ னும். தூல, சூக்ஷ்ம, காரண மாகிய சரீரத் திரயம், விசுவன், தைஜஸன், பிராஞ்ஞன் ஆகிய அபிமாநித் திரயம், சாக்கிர, ஸ்வப்ந, சுழுப்தி யாகிய அவஸ்தாத் திரயம், கூடஸ்த சேதநம் ஆகப் பத்தும் சேர்ந்து வாச்சிய மாம்.

த்வம் பத லக்ஷியம் - கூடஸ்த சேதந மாம். மாயா உபாதி யினல் ஈசுவரன் என்றும், அவித்யா உபாதியினல் ஜீவன் என்றும், மாயா உபாதி ஈசுவர அதிஷ்டாநத்தினைப் பிரஹ்மம் என்றும், அவித்யா உபாதி ஜீவ அதிஷ்டாநத்தினைக் கூடஸ்தன் என்றும், உபாதி பேதத்தினல் நான்கு வித மாகக் கூறுவது, மயக்க முடையோர் கூற்றே அன்றித், தெளிந்த ஞாநிகள் கூற் றன்ரும். தெளிந்த ஞாநிகட்கு நிருபாதிக மான ஆத்மா ஒன்றே யாம். ஆத்மா நான்கு மல்ல, நாநாவும் அல்ல என (அர்ஜுநன் வினவிற்குப்) பகவான் சமாதாநங் கூறினர் என உணர்க. (71)

ஏகந்தா னும்மா வெனும்வகையே மெய்யானல்,
ஆகந்தோ றும்பலவா யமர்ந்ததென்னே சொல்லுமென. (72)

(இ—ள்.) ஆன்மா - ஆத்மா, ஏகம் - ஒன்று, எனும் - எனக் கூறும், வகையே - தன்மையே, மெய் ஆனல் - உண்மை ஆனல், ஆகம் தோறும் - சரீரங்கள் தோறும், பல ஆய் - (வேறு வே றாய்) நாநா வாக, அமர்ந்தது - பொருந்தியது, என் - யாது காரணம், சொல்லும் - (என்பதனைக்) கூறி யருளும், என - என்று அர்ஜுநன் வினவ, (எ-று).

ஏ - பிரி நிலை. தான் - ஓ - அசைகள்.

தோறும் என்னும் இடைச் சொல், பன்மைப் பொருளில் வந்தது.

வினவின் கருத்து - ஆத்மா ஒன்றே யென்பது உண்மை யாகு மாயின், தூல சரீரம் ஒவ் வொன்றக்கும் ஒவ் வொன் றாய் வெவ் வே றாகக் காணப்படுதலின், ஆத்மா அநந்தமே யாகும். தெய்வ சித்தியின லன்றி, ஒரு ஆத்மா பல சரீரங்களில் இருத்தற்கு ஆற்றல் இன்மையின், அங்ஙன் இருத்தல் கூடாது. இவ் வித விரோதங் காணப்படுதலின், இவ் விரோதத்தினைப் பரிகரித்துச் சமாதாநம் கூறவேண்டும் என்னும் கருத்தை உட்கொண்டு அர்ஜுநன், "ஆன்மா ஏகம் எனும் வகையே மெய் யானல் ஆகந் தோறும் பல வாய் அமர்ந்தது என் சொல்லும்" எனப் பகவானிடம் விண்ணப்பித்தனன் எனக் கொள்க. (72)

பலகடத்திற் சலத்தூடு பானுவிம்பந் தோன்றுதல்போற்,
றொலைவில்புத்தி தோறுமான்மாத் தோன்றுதல்கா ணென்ற
வரோ. (73)



(இ—ள்.) பல - நாநா, கடத்தில் - குடங்களில் (உள்ள), சலத்து ஊடு - சலத்தி னிடத்து, பாநு விம்பம் - (ஒரு) பிம்ப மாகிய சூரியன், தோன்றுதல் - (நாநா வாகக்) காணப்படுதல், போல் - ஒப்ப, தொலைவு இல் - (எண்ணிக்கையின்கண்) முடி வில்லாத, ("எண்ணித் தொலையாது" என்புழிப் போல), புத்தி - அந்தக் கரணங்கள், தொறும் - தோறும், ஆன்மா - (ஏக மான) ஆத்மா, தோன்றுதல் - (பல வாகத்) தோன்றுகின்றமையை, காண் - (நீ) அறிவாய், என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

சலத்தூடு - ஊடு - ஏழ னுருபு. தொறும் - இடப் பன்மைப் பொருளில் வந்த இடைச் சொல். காண் - முன் னிலை யேவற் றெரி நிலை வினை முற்று.

இதனை, பிம்பப் பிரதிபிம்ப நியாயம் என்பர். பிம்பம் என்பது அதிஷ்டாநத்திற்குப் பெய ராம். பிரதிபிம்பம் என்பது எதிர்த் தோற்ற (ஆபாச) த்துக்குப் பெய ராம். ஒரு அதிஷ்டாநம், பல உபாதிகளில் பல வாகத் தோற்றுவது ஆம்.

பிம்பப் பிரதிபிம்ப வாதம் - ஆபாச வாதம் - அவச்சேத வாதம் என வாதம் மூ வகைத் தாம். பிரதிபிம்பம் மித்தை என்னும் வாதமும், ஆபாச வாதமும் ஒன்றே யாகும். பிரதி பிம்பம் சத்தியம் என்னும் வாதம் வேறு ஆம். பிரதிபிம்பம் சத்தியம் என்னும் பிம்பப் பிரதிபிம்ப வாதமும், பிரதிபிம்பம் மித்தை என்னும் ஆபாச வாதமும் ஈண்டு வரையப்பட்டிருக் கின்றன. ஏனைய வாதங்களை எழுதினல், சிறிய நூல் மிக விரியும் என்னும் அச்சத்தால் இவ் விடத்து எழுதாது விட்டனம்.

1. பிரதிபிம்ப வாதம் இரு வகைத் தாம்:

சிலர் இவ் வாறு கூறுகின்றனர்: சுத்த சேதநத்திற்கும், அஞ்ஞாநத்திற்கும் உள்ள அநாதி சம்பந்த வசத்தினல், சுத்த

சேதநத்தின்கண் எவ் வஞ்ஞானத்தில் இருக்கும் தன்மையின் பிராந்தி தோன்றுகின்றதோ, அவ் வஞ்ஞானத்தின்கண் உள்ள பிரதிபிம்பம் ஜீவ சேதநம் ஆம். அஞ்ஞானத்தின் உபகித சுத்த சேதநமே, பிம்ப சேதந ஈசுவரன் ஆம். அதனால், பிரதிபிம்பமும் சத்ய சொரூப மாம். மித்தை யாய அநிர்வசநீயம் அன்றாம். மற்றோ, அஞ்ஞானத்தினால் ஒரே சுத்த சேதந அதிஷ்டானத்தி னிடத்து அநிர்வசநீயப் பிரதிபிம்ப பாவம் உத்பந்நம் ஆகின்றது. அது, ஞானத்தினால் அஞ்ஞானம் நாசம் ஆவதால், அதனினின்றும் உண்டாய பிரதிபிம்ப பிம்ப பாவங்கள் நாசம் ஆக, ஒரே சுத்த சேதநம் சொரூப மாக நிலைபே றடைகின்றது. எங்ஙனம்? சுத்த முகத்திற்குக் கண்ணாடியின் சம்பந்தத்தின் பின், அந்த ஒரே முகத்தின்கண் பிரதிபிம்ப பிம்ப பாவங்கள் கற்பனை யாகின்றன. ஒரு அநிர்வசநீய, அல்லது, வியாவகாரிகப் பிரதிபிம்பமும் உண்டாவ தில்லை. ஏ னெனின், கண்ணாடியின் சேர்க்கை விட்ட பின், அதிஷ்டான ஞானம் இன்றியும் வியவகார காலத்தின் கண்ணும் பிரதிபிம்ப பிம்ப பாவங்கள் அபாவ மாகலின், அதனால், கண்ணாடியோடு கண்ணின் சேர்க்கையின் பின், கண்ணானது கண்ணாடியை விஷயஞ் செய்து சீக்கிரம் அதினின்றும் எதிர் முகமாகத் திரும்பி வெளிப் போந்து, கழுத்திற்கு மேல் உள்ள தனது முகத்தையே விஷயஞ் செய்கின்றது. கண்ணாடியில் உள்ள, புதி தாய் உண்டாய எப் பிரதிபிம்பத்தினையும் விஷயஞ் செய்வது இன்றாம். அதனால், சுத்த முகத்தின்கண்ணே கண்ணுக்கு விரைந்து சேரல் உண்டாகலின், கண்ணாடியில் இருப்ப தாகக் காணப்படும் பிரதிபிம்ப பாவமும், அதற்கு ஏது வாய பிம்ப பாவமும், பிராந்தி ரூப மாகத் தோற்றுகின்றன. அதன் அதீந மாகவே பிரதிபிம்ப பிம்ப இரண்டன் தர்மங்களின் வியவஸ்தையும் பொருந்துகின்றது. உண்மை யாகப் பிம்பப் பிரதிபிம்பங்கட்குப் பேதம் இன்றாம். அங்ஙனமே, சர்வக்ஞத் தன்மை முதலிய தர்மங்களின் வியவஸ்தையும், பிம்பப் பிரதிபிம்ப ரூப ஜீவேசுவரர்க



ளிடத்துப் பிராந்தி யாகப் பொருந்துகின்றது. உண்மை யாக ஜீவேசுவரர்கள் ஒரே சுத்த சேதநம் ஆவர். அதனால், பிரதி பிம்பமும் சுத்த முகத்தின் சொரூப மாய்ச் சதா சத்தியம் ஆம். இஃது ஏக ஜீவ வாதம் ஆம். இப் பிரதிபிம்ப சத்திய வாதம் விவரணக்காரர் முதலியோர்களின் பக்ஷம் ஆம். (வேதாந்த) சித்தாந்தத்தில் இதனையே திருஷ்டி சிருஷ்டி வாதம் என்று கூறுகின்றனர். திருஷ்டி சிருஷ்டி என்பது, திருஷ்டி மாத்திரம் சிருஷ்டி யாம். அல்லது, திருஷ்டியின் சம காலமே (சிருஷ்டி) உண்டாவ தாம். எதனால் எனின்? திருஷ்டி உண்டாவதற்குப் பூர்வமும், அதன் நாசத்தின் பின்னரும் சிருஷ்டியின் விஷய அபாவத்தினா லாம். இப் பக்ஷத்தின்கண் சம்பூர்ண ஆகாசாதிப் பிரபஞ்சமும், பிராதிபாஸிக சாக்ஷி பாஸ்யமே யாம். சம்பூர்ணப் பிரபஞ்சத்திற்கும் ஞாத சத்தையே யாம். அஞ்ஞாத சத்தை யின்றாம். இஃது உத்தம ஜிஞ்ஞாசுக்களின் போதகப் பிரகாரம் ஆம்.

2. மற்றையோர் இவ் வாறு கூறுகின்றனர்:

சுத்த சத்துவப் பிரதான மாயையின்கண் அதிஷ்டான சகிதப் பிரதிபிம்பம் ஈசுவர சேதநம் ஆம். மலிந சத்துவப் பிரதான அவித்தையின்கண் அதிஷ்டான சகிதப் பிரதிபிம்பம் ஜீவ சேதநம் ஆம். அவ் விரண்டு பிரதிபிம்ப சேதநங்களும் அநாதி அநிர்வசநீய அஞ்ஞானத்தினால், அதிஷ்டான ஒரே சேதநத்தின்கண் அநிர்வசநீய மாகக் கற்பிக்கப்பட்டன ஆம். அவ் விரண்டினாலும் விசேடிக்கப் பட்ட சேதநம், சுத்த சேதநம் அன்று. ஏன் எனின், ஈச, ஜீவ, சேதநங்கட்கு விசிட்டமே சொரூப மாதலின், உபாதியின் சொச்சத் தன்மையினால் ஈசுவர னிடத்துச் சர்வக்ஞத் தன்மை முதலியன ஆம். சொச்ச மின்றிய அவித்யா உபாதியின் விசித்திரத் தன்மையினால், கிஞ்சிக்ஞ ஜீவர் நாநா ஆம். மாயா உபாதியின்

ஏகத் தன்மையினுல், ஈசுவரன் ஏகன் ஆவன். ஞாநத்தினுல் அஞ்ஞாநம் நசித்த போது, அதனுற் கற்பிக்கப்பட்ட பிரதிபிம்பங்களும் நசிக்கின்றன. அவ் விரண்டினது அதிஷ்டாந ஒரே சுத்த சேதநமே மிச்சமா யிருக்கின்றது.

இந்த நாநா ஜீவ வாதமும், பிரதிபிம்ப மித்தையாத்வ வாதமும், வித்தியாரண்ய சுவாமி முதலியோர்களின் பக்ஷம் ஆம். இதனையே ஆபாச வாதம் என்றும் கூறுகின்றனர். இவ் ஆபாச வாதம் சங்கர பகவத் பாத ஆச்சார்ய ஸ்வாமிகளாலும், உபதேச சஹஸ்ரியின்கண் கூறப்பட்டிருக்கின்றது. இப் பக்ஷத்தினையே சிருஷ்டி திருஷ்டி வாதம் என்று கூறுகின்றனர். சிருஷ்டி என்பது உற்பத்தி. திருஷ்டி என்பது ஞாநம். அதாவது உற்பத்தியா யுள்ள விஷயாதீந மாய்ப், பின் அதன் ஞாநம் உண்டாவது என்ப தாம். ஈண்டு ஆகாசாதிப் பிரபஞ்சம் வியாவகாரிகம் ஆம். பிரத்தியக்ஷாதிப் பிரமாண சித்தம் ஆம். ரஜ்ஜு சர்ப்பாதிகள் பிராதிபாஸிகம் ஆம். வியாவகாரிகப் பிரபஞ்சத்திற்கு அஞ்ஞாத சத்தை யாம். பிராதிபாஸிகத்திற்கு ஞாத சத்தை ஆம். இது மத்திம ஜிஞ்ஞாசுக்களின் போதகப் பிரகாரம் ஆம். (73)

ஆதித்தன் போலாந்மா வளவில்புத்தி தோறுந்தோன்றிற்,
சாதிக்கு முத்தியேவர் தமக்கதனைச் சாற்றுமேன. (74)

(இ—ள்.) ஆதித்தன் - (ஏக) சூரியன், போல் - (பல கட சலங்களில் அவ் வுபாதி வேறுபாட்டால் நாநா வாகத் தோற்றுதல்) போல, ஆந்மா - (ஏக மான) ஆத்மாவும், அளவு இல் - எண் இறந்த, புத்தி தொறும் - (உபாதிக ளாகின்ற) அந்தக் காணங்கள் தோறும், தோன்றில் - (பல வாகப்) பிரதீதியாகு மாயின், சாதிக்கும் - (சிரவண ஆதி சாதநங்களால்) சித்திக்கச் செய்கின்ற, முத்தி - மோக்ஷம், எவர் தமக்கு - (அந்தக் காணம், ஆத்மா



வென்னும் இரண்டில்) யாவர்க்கு, அதனை - அவ் விஷயத்தினை, சாற்றும் - (அடியேனுக்கு) அருளிச் செய்யும், என - என்று (அர்ஜுநன்) வினவ, (எ-று).

மோக்ஷம் எவர் தமக்கு என்பதில், தம் - சாரியை.

“ எவர் தமக்கு ” என்பது, அதிஷ்டாந ஆத்மாவிற்கா, அல்லது, அந்தக் காணத்திற்கா என்பது தோன்றக் கூறிய தாம்.

“ எவை தமக்கு ” என நிற்க வேண்டிய விடத்து “ எவர் தமக்கு ” என வந்தமை திணை வழு வமைதி.

சாதநங்க ளாய சிரவண மநந நிதித்தியாசநங்களின் இலக்கணங்களை, 48-வது பாட்டின் விசேட வுரையிற் காண்க. (74)

பந்தமுத்தி தானுமந்தப் பரந்தபுத்தி தனக்கேயாம்,
அந்தவிம்பந் தனக்கிலேயேன் றறிவுவரச் சொன்னவரோ. (75)

(இ—ள்.) பந்தம் - (அஞ்ஞாநத்) தளையும், முத்தி உம் - மோக்ஷமும், அந்த - முன்னர்க் கூறிய, பரந்த - (விஷயங்களில் வியாபித்து) விரிந்த, புத்தி தனக்கே ஆம் - (ஆபாச சகித) அந்தக் காணத்திற்கே யாகும், அந்த - முன்னர்க் கூறிய, விம்பம் தனக்கு - விம்ப ரூப ஆத்மாவிற்கு, இலை - (அப் பந்த மோக்ஷங்கள்) இல்லை, என்று - என்ப தாக, அறிவு வர - விவேகம் உண்டாம் வண்ணம், சொன்னவரோ - கூறி யருளிய பகவானே (நீர்), (எ-று).

தான் - அசை, விம்பம் தனக்கு, புத்தி தனக்கு, என்பவற்றில் தன் - சாரியை. முத்தி தானும் - உம் - எண் ணும்மை.

பந்தம் என்பது, கட் டாம். பந்தம்:- அஹங்காரம் முதலிய அநாத்ம வஸ்துக்கள் யாவற்றிலும், “ நான் எனது ” என்னும் புத்தி, இது பந்தம் என்று கூறப்படும்.

முத்தி:- முக்தி என்பது விடுபாட்டிற் காம். அது அஹங்காரம் முதலிய அநாத்ம வஸ்துக்கள் யாவற்றினும் உண்டாம் சர்வ துக்கங்களும் நீங்குவதும், பிரஹ்மாநந்தத்தினை அடைதலும், ஆம். இதனை மோக்ஷம் என்று கூறுவர்.

பந்தமும், முத்தியும், ஆபாச சகித அந்தக் கரணத்திற்கே யாகும். ஆத்மாவிற்குப் பந்தமும் இல்லை, முத்தியும் இல்லை என்பது தோன்ற, "சொன்னவரோ என்பதற்கு" "அறிவு வர" என்னும் விசேஷணங் கொடுத்துக் கூறினர்.

இது போன்றே ஞாந வாசிட்டம், 3. உத்பத்திப் பிரகாணம், 3. சித்த (சாம்பரிக)ன் கதை,

"துங்கமெய் யுணர்வாய்ப் பந்தமற் றிருந்துந்
தொடர்புறு பந்தமுண் டென்று,
பங்கமுற் றயரே லமலமா யழியாப்
பரம்பொருள் பந்தமுற் றிடுமோ." (1) என்றும்,

"அந்தமற் றென்றாய் விகற்பமற் றறிவா
யழிவிலாப் பரம்பொரு ளிருக்கப்,
பந்தமுற் றவரார் முத்திபெற் றவரார்
பாவனை விகற்பமே யனைத்துஞ்,
சிந்தனை விரிவு பந்தமா மதனைத்
தீர்ந்திடன் முத்தியாம்." (2)

என்றும், கூறி யிருத்தலை உணர்க. (75)

பரமேக மாயுமதிற் பலசீவ ரேதெனவே,
ஒருகடலிற் பலகுமிழி யுதிப்பதுபோ லென்றவரோ. (76)

(இ—ள்.) பரம் - பிரஹ்ம சேதநம், ஏகம் ஆயும் - அத்வி தீயமா யிருந்தும், அதில் - அந்தப் பிரஹ்ம சேதநத்தின்கண்,



பல - நாநா, சீவர் - சீவ சேதநங்கள், ஏது - (தோற்றுவதற்குக் காரணம்) யாது, என - என்று அர்ஜுநன் வினவ, [விடை அருளிச் செய்கின்றார்.] ஒரு - ஏகமா யிருக்கின்ற, கடலில் - சமுத்திரத்தில், பல - நாநா, குமிழி - புத்புதங்கள், உதிப்பது - (வாயுவின் தொழிலால்) உண்டாதல், போல் - போல, என்ற வரோ - (ஒரே பிரஹ்ம சேதநத்தில், அவித்தை காம கர்மாதிகளால் பல சீவர் தோன்றுதல் ஆம்) என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

ஏ - அசை. 'ஏகம் ஆயும்' என்ற உம்மை எச்சப் பொருட்டு.

இதனை, சமுத்ர (கடல்) புத்புத (குமிழி) நியாயம் என்பர். சமுத்திரம் என்பது கடலுக்குப் பெய ராம். புத்புதம் என்பது குமிழிக்குப் பெய ராம். ஒரு சமுத்திரத்தில் பல அலை நுரை குமிழிகள் உண்டாவன போல என்பது ஆகும். (76)

சீவனது தானென்றுஞ் சேரும்பி ரமமென்றும்,
ஆவதுவோ பேரின்ப மாங்கதெனக் கோதுமென. (77)

(இ—ள்.) தான் - தனது ஸ்வரூபம், சீவன் - சீவ சொரூபம், என்றும் - எனவும், சேரும் அது - (தான் வழிபட்டு) அடையத் தகுந்தது, பிரமம் - பிரஹ்ம சொரூபம், என்றும் - எனவும், ஆவதுவோ - (உள்ள ஆண்டான் அடிமைப் பேத ஞாநத்தினால்) ஜநிப்பதோ, பேர் இன்பம் - பிரஹ்ம ஆநந்தம், அது - அதனை, எனக்கு - அடியேனுக்கு, ஓதும் - கூறியருளும், என - என்று அர்ஜுநன் வினவ, (எ-று).

"சீவனது" என்பதி லுள்ள 'அது' என்பது, சேரும் என்பதனோடு பிரித்துக் கூட்டப்பட்டது. ஆங்கு - அசை. அதுவோ - ஓ - வினா. உம்மைகள் இரண்டும் எண்ணுப் பொருளன.

### வினுவின் கருத்து.

பேத நிலே - தான் சரீரத் திரயன், கர்ம கர்த்தா, கர்ம பல போக்தா, ஜீவன், அடிமை, உயர்வு தாழ் வான லோகங்களே அடைபவன், கிஞ்சிக்ஞன், பர தந்திரன், துக்கி, பரிச்சிந்நன், அவித்யா வசன், என்பன ஆதி அநுபவங்களே யுடையவர்கள் ஜீவர்கள் என்றும்,

பிரஹ்மம் அசரீரி, அகர்த்தா, அபோக்தா, ஆண்டான், ஈசன், சர்வ சமன், சர்வக்ஞன், ஸ்வதந்திரன், சுகி, வியாபகன், மாயாதீதன், என்பன ஆதி விசேஷணங்களே யுடைய பிரஹ்மத்தை, ஜீவர்கள் அடைகின்றனர் என்றும், உண்டாம் ஆண்டான், அடிமைத் திறம் உடைய பேத நிலேயா ? என அர்ஜுனன் சந்தேகம் கொண்டு, "அது எனக்கு ஓதும்" என வினவுகின்றான். (77)

ஏகம்பி ரமமி ரண்டிலேநீ வேறுமலே,
சோகமுறும் பேதமறிற் றோன்றுமின்ப மென்றவரோ. (78)

(இ—ள்.) பிரமம் - பிரஹ்மம், எகம் - ஒன்றே (யுளது), இரண்டு - துவைதம் (இரண்டாவது வஸ்து), இலே - இல்லே, நீ உம் - நீயும், வேறு அலே - (அந்தப் பிரஹ்மத்துக்கு) அந்நியம் அல்லே, சோகம் - துக்கம், உறும் - (வந்து) பொருந்து (தம் கேது வாகிய), பேதம் - பேத புத்தி, அறில் - நீங்கி விட்டால், இன்பம் - (பிரஹ்ம) ஆநந்தம், தோன்றும் - உண்டாம், என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

உம்மை பிரித்துக் கூட்டப்பட்டது.

பேதப் பிராந்தி - ஜீவாத்மா பிரஹ்மத்தினும் பிந்நமாயிருக்கின்றது. சுருதி, ஸ்மிருதி, சர்வ ஜநங்களின் அநுபவங்



களினுல் பேதம் சித்தமா யிருத்தலின், கட படாதி போன்று என்னும் ஆகார மாய சித்த விருத்தி, பாபத்தின் பிரபாவத்தினுலும், மந்த பாக்கியத் தன்மையினுலும், சுருதி தாத்பரிய ஞாநத்தின் அபாவத்தினுலும், உண்டாகின்றது. இதனைப் பேதப் பிராந்தி என்பர்.

பேதப் பிராந்தி நிவிர்த்தியில் இரு மதங்கள் கேட்கப் படுகின்றன.

(1) பேதப் பிராந்தி நிவிர்த்தி:- கடத்தில் உள்ள ஜல உபாதியின் சம்பந்தத்தினுல், ஆகாசத்தில் உள்ள சூரியனிடத்துப், பிம்ப பாவம் பிரதிபிம்ப பாவம் என்னும் இரு தர்மங்கள் அநிர்வசநீயமாக உண்டாய் விளங்குகின்றன. உபாதியின் நிவிர்த்தியினுல் பிம்பப் பிரதிபிம்ப பாவம் என்னும் இரண்டும் நிவிர்த்தியாகின்றன. சுத்த சூரியனே இருக்கின்றான். அதனுல், பிம்பப் பிரதிபிம்பங்களின் சொரூபம் சுத்த சூரியனே ஆம். சூரிய ஸ்வரூபத்தினுல் பிரதிபிம்பம் பிம்பம் என்னும் இரண்டும் சத்திய மாம். எங்ஙனம்? கண்ணுடியோடு முகத்தின் சம்பந்தத்தின் பின் சக்ஷு இந்திரியம் கண்ணுடியோடு சேர்ந்து, கழுத்தின் மேல் உள்ள சுத்த முகத்தினேயே கிரஹணஞ் செய்வ தாய், அக் கண்ணுடியில் இருக்கும் தன்மையினேப் பிராந்தியினுல் கிரகிக்கின்றது. அப்பொழுது சுத்த முகத்தில் பிரதிபிம்ப பாவத்தின் கற்பனே உண்டாகின்றது. அதன் அபேக்ஷையினுல், பிம்ப பாவத்தின் கற்பனேயும் உண்டாகின்றது. உண்மை யாகிய சுத்த முக ரூப அதிஷ்டாநத்தில், ஒரு பிராதிபாவிக, அல்லது, வியாவகாரிகப் பிரதிபிம்பமும் உண்டாவ தில்லே. பிரதிபிம்பத் தன்மை, பிம்பத் தன்மை என்னும் இரண்டும் சுத்த முகத்தில் கற்பித மாம். ஆயினும், பிம்பப் பிரதிபிம்பங்களின் பேதம் உண்மை யாய் இன்று. ஏன் எனின், கழுத்தின் மேல் இருக்கும் யதார்த்த முக ஸ்வரூப மாகலின், பிரதிபிம்பமும் சத்தியம் ஆம். அங்ஙனமே, ஒரு

சுத்த சேதநத்தில் அநாதி அஞ்ஞாந சம்பந்தத்தின் வசத்தினுல், அஞ்ஞாநத்தில் இருக்குந் தன்மைப் பிராந்தியினுல் பிரதிபிம்ப பாவம் ஆரோபிக்கப்படுகின்றது. அதன் அபேக்ஷையினுல் பிம்ப பாவமும் ஆரோபிக்கப்படுகின்றது. அஞ்ஞாநத்தினுல் கற்பிக்கப் பட்ட பிரதிபிம்பத் தன்மை, பிம்பத் தன்மைகள் சுத்த சேதநத்தில் மித்தை யாம். அங்ஙன மாயினும், பிரதிபிம்பம் பிம்பம் என்னும் இரண்டும் சத்தியம் ஆம். என் எனின், சுத்த சேதநத்தின் ஸ்வரூப மா யிருத்தலின், ஓர் அஞ்ஞாநத்தினையே சீவ ஈசர்கட்கு உபாதி யாகக் கொண்டவர் விவரணக்காரர். இதில், ஜீவந் ஈசுவரன் சுத்த சேதநம் என்னும் மூன்று சேதநங்கள் அங்கிகாரம் ஆம். ஜீவத் தன்மை விசிஷ்ட சேதநம் ஜீவந் ஆம். ஈசுவரத் தன்மை விசிஷ்ட சேதநம் ஈசுவரன் ஆம். அல்லது, அஞ்ஞாநப் பிரதி பிம்ப சேதநம் ஜீவந் ஆம். பிம்ப சேதநம் ஈசுவரன் ஆம். அவ் விருவர்களின் சொருபம் சுத்த சேதநம் ஆம். ஈண்டுத் தத் த்வம் பதங்கட்கு முக்கிய சாமாநாதிகரண்யம் இருக்கின்றது.

தத்துவ விவேக நூலாரும், சம்க்ஷேப சாரீரகக்காரரும், பிரதிபிம்பம் சத்திய மென்றும், பிம்ப சொரூப மென்றும் பிம்பத் தன்மை பிரதிபிம்பத் தன்மைகள் பிராந்தி யென்றுங் கொள்கின்றனர். இவர்கள் நாநா ஜீவரைக் கொள்கின்றனர்.

(2) சிலரோ, ஜீவ ஈசுவரர்கட்கு இரண்டு உபாதிகளைக் கொள்ளுகின்றனர். மாயையில் அதிஷ்டாந சகிதப் பிரதிபிம்பம் ஈசுவரன் ஆம். அவித்தையில் அதிஷ்டாந சகிதப் பிரதிபிம்பம் ஜீவந் ஆம். அல்லது, சிலர் ஜலாகாசம் கடாகாசம் போன்று, புத்தியில் உள்ள சேதநம், அதற்கு அதிஷ்டாந கூடஸ்தன், மேகாகாசம், மஹாகாசம் போன்று, மாயையில் உள்ள ஈசுவரன், அதற்கு அதிஷ்டாந சுத்தப் பிரஹ்மம் என நான்கு சேதநங்களைக் கொள்கின்றனர். அவர்கள் மதத்தில் பிராதிபாசிக மாய் அநிர்



வசநீயப் பிரதிபிம்பம் உண்டாகின்றது. அது ஸ்வரூப மாக மித்தை யாம். அதன் அதிஷ்டாநமே சத்தியம் ஆம். தத் த்வம் பதங்கட்குப் பாத சமாநாதிகரணமும், முக்கிய சமாநாதிகரணமும் என இரண்டும் இருக்கின்றன. புத்தியில் உள்ள ஆபாச சேதநத் திற்குப் பிரஹ்மத்தினேடு பாத சமாநாதிகரணம் ஆம். அதன் அதிஷ்டாந கூடஸ்தனுக்கு பிரஹ்மத்தோடு முக்கிய சமாநாதி கரண மாம். எவ் விதத்தும் இரு மதத்திலும் பிம்பப் பிரதி பிம்பங்கட்கு அத்தியந்தம் பேதம் இல்லை. பின்னையோ? அநுகத ஒரு சேதந அஞ்ஞாநத்தினுல் ஆம். பிராந்தியினுல் அவை பேத மாகத் தோற்றுகின்றன. ஒரு மதத்தில் பிரதிபிம்பம் சத்தியம் ஆம். பிரதிபிம்பத் தன்மைத் தர்மம் மித்தை ஆம். மற் றொருவர் மதத்தில் ஜீவ ஈசுவர சொரூப மாகிய இரண்டும் மித்தை யாம். அவற்றின் அதிஷ்டாந சைதந்யம் சத்தியம் ஆம். இவ் வளவு பேதம் இருக்கின்றது. எப் பொழுது, தத்வமஸி யாதி மஹா வாக்கியார்த்த விசாரத்தினுல் அநுகத ஒரு சேதநத்தின் யதார்த்த ஞாநம் உண்டாகின்றதோ, அப் போது, பிரத்தியக் ஆத்மாவிற்குப் பூரணப் பிரஹ்மத்தினேடு பேதத்தினைக் கிரஹிக்கும் பேதப் பிராந்தி நிவிர்த்தி யாகின்றது. "தத் த்வ மஸி", "இவ் வாத்மாவில் ஸ்வல்ப பேதத்தினைச் செய்கின்றவன் பயத்தினை அடைகின்றுன்" என்பன வாதிப் பிரமாணத்தினுல் பேத மின்மை உணர்க.

இங்குக் கூறியது போன்றே, பிரஹ்ம கீதை 11-வது அத்தியாயம்,

"எல்லாம் வசிக ரிப்பானு மெதுக்கு முள்ளா மொருவடிவைப், பல்லா யிரங்கோ டிகளாகப் பண்ணு நிற்கும் பரம்பரனை, அல்லா தொன்று மில்லையென வநுப வத்தா லகத்துணா, வல்லார் தமக்குப் பேரின்பம் வடிவாய் மொழியு மாமறைதான்." (26) என்று பிரஹ்ம கீதை - பதி னோராவது அத்தியாயத்திற் கூறியிருத்தலையும்,

வாசிட்டம் 4 திதி பிரகரணம் 4-வது தாசூரன் கதை

"பொருகடலிற் றிரைமுதலாய்ப் பிறந்தவெல்லாம் புனலாகி விளங்காமற் புழுதியாமோ, ஒருபொருளாம் பிரமமாத் திரமே யல்லா துபயமெனுங் கற்பனைப்பே ரொன்றுமில்லை, யெரி யிடத்திற் சுடுமாத் திரமேயல்லா விரண்டுண்டோ வவ்வகைபோ லென்றுமொன்றும்." என்று (11) கூறுதலையும் உணர்க. (78)

சீவபே தம்போமோ சித்தொன்ரு மோவெனவே,
ஆவன்மந மறுஞ்சுழுத்தி யவத்தையிற்பா ரென்றவரோ. (79)

(இ—ள்.) சீவ - சீவர்களது, பேதம் - வேற்றுமை, போமோ - நீங்குமோ, சித்து ஒன்று ஆமோ - (அங்ஙன் பேதம் ஒழிந்து) சேதநம் ஏக மாக விளங்குமோ? என - என்று அர்ஜுநன் வினவ, [விடை யருளிச் செய்கின்றார்.] ஆவல் - (விஷய) ஆசையினை யுடைய, மநம் - அந்தக் கரணம், அறும் - ஒழியும் (அல்லது, உபராம முறும்), சுழுத்தி அவத்தையில் - சுழுத்தி அவஸ்தையின்கண், பார் - (அப் பேத மொழிந்து சேதநம் ஏக மாக விளங்குவதை) உணர்வா யாக, என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

ஓ - மூன்றும் வினு. ஏ - அசை.

ஜீவ ஸ்வரூபம் - அஞ்ஞாந, அல்லது, அந்தக் கரணத்தில் பிரதிபிம்பித் துள்ள சேதநம் ஜீவந் ஆம்.

ஜீவ பேதம் - ஜீவர்களின் பரஸ்பர பேதம், ஜீவ ஈசுவர பேதம் முதலியன ஆம்.

சுழுத்தி அவஸ்தையில் ஜீவந், தன் அதிஷ்டாநம் பிரஹ்மத் தோடு ஒன்றுபட்டு அத்தியாச ஐக்கிய மா யிருந்து, பின் கால கர்ம வசத்தால், புண்ணிய பாப பலன்களைக் கொடுக்கும் போகம்



உதய மாங் கால், பிரஹ்மத்தி னின்றும் வே ருகப் பிரிந்து வருகின்ருன். இங்கு ஒன் ருக இருப்பதற்கு மாத்திரம் சுழுத்தி அவஸ்தை திருஷ்டாந்தம் ஆம்.

ஜாக்கிர அவஸ்தை, ஸ்வப்ந அவஸ்தை, சமாதி அவஸ்தை, மரண அவஸ்தை, மூர்ச்சை அவஸ்தை என்புழிப் போல, "சுழுத்தி அவஸ்தையில்" என்பதில் உள்ள அவஸ்தை என்பது, காலத் துக்குப் பெயர் ஆம். (79)

பேதமல விவ்வுலகம் பிரமமய மென்றறிந்தும்,
பூதமய மாய்த்தோற்றல் போகாத தேதெனவே. (80)

(இ—ள்.) இவ் உலகம் - (பிரத்தியக்ஷ மாகத் தோற்றுகின்ற) இப் பிரபஞ்சம், பேதம் அல - (பிரஹ்மத்தினுக்கு) அந்நியம் அன்று, பிரம மயம் - பிரஹ்ம சொரூபமே, என்று - என, அறிந்தும் - உணர்ந்தும், பூத மயம் ஆய் - பஞ்ச பூத ஸ்வரூபம் ஆக, தோற்றல் - பிரதீதி யாதல், போகாதது - நிவிர்த்தி யாகாதது, ஏது - யாது காரணம், என - என்று அர்ஜுநன் கேட்க, (எ-று).

'அறிந்தும்' என்ற உம்மை, இறந்தது தழீஇய எச்சமும், உயர்வு சிறப்பும் ஆம்.

பேத மல - அல - ஒருமையிற் பன்மை மயக்கம்.

மயம் என்பது, மிகுதி, விவகாரம், சொரூபம், என்னும் பொருள்களில் வரும். இவ் விடத்து 'மயம்' என்பது ஸ்வரூபப் பொருளில் வந்தது. (80)

கானலைநீ ரென்ருேடிக் கண்டவர்க்குத் தீர்ந்தபின்னும்,
வானுலவு நீராகி வயங்குதல்போ லென்றவரோ. (81)

(இ—ள்.) கானலே - (ஊஷர பூமியில் தோற்றும்) உஷ்ண கிரணத்தினை, நீர் - (உண்மை யான) ஜலம், என்று - எனக் கருதி, ஓடி - சென்று, கண்டவர்க்கு - (இது கானலே, நீ ரன்று என ஐய விபரீதங்க ளின்றிப் பிரத்தியக்ஷ மாக) உணர்ந்தவர்க்கு, தீர்ந்த - (அங்ஙன் ஜலப் பிராந்தி) நீங்கிய, பின்னும் - பின்னரும், வான் - வெளியில், உலவு - செல்லுகின்ற, நீர் ஆகி - (ஆற்றுச்) சல மாய், வயங்குதல் - விளங்குதல், போல் - போல, என்றவரோ - (இவ் வுலகம் பிரஹ்ம மயம் என் றறிந்த பின்னரும் பூத மய மாய்த் தோற்றும்) எனக் கூறி யருளிய பகவானே (நீர்), (எ-று).

'பின்னும்' என்ற உம்மை இறந்தது தழீஇயது.

'தீர்ந்த' என்னும் வினைக்கு, அவாய்நிலையால் 'பிராந்தி' என்பது எழுவா யாக வருவிக்கப்பட்டது.

தார்ஷ்டாந்தத்தினை இசை யெச்சத்தால் வருவித் துரைக்க.

தார்ஷ்டாந்தம் - பிரபஞ்சத்தினைப் பிரஹ்ம சொரூப மாக அறிந்த பின்னரும், சோபாதிகப் பிராந்தி யாகலின், பஞ்ச பூத மய மாகவே தோற்றிக் கொண் டிருக்கும். தோற்றம் - சுழுத்தியில், பிரளயத்தில், விதேக கைவல்யத்தில் தான் நீங்கும்.

இதனை, மரு (பாலை வனம்) மரீசிகா (சூரிய கிரணம்) நியாயம் என்றும், மிருக (மான்) திருஷ்ணிகா (ஜலம் கானல்) நியாயம் என்றும் கூறுவர். மரு என்பது பாலை வனத்திற்குப் பெய ராம். மரீசிகா என்பது சூரிய கிரணத்துக்குப் பெய ராம். மிருகம் என்பது மானுக்குப் பெய ராம். திருஷ்ணிகா என்பது தாகம், அல்லது, இச்சைக்குப் பெய ராம். பாலை வனத்தில் சூரிய கிரணத்தினல் தோன்றும் ஜலம் போன்றும், மான் தாக விடாய் தீர்க்க விரும்பும் கானல் ஜலம் போன்றும் என்பது பொரு ளாம். இதனைப் பேய்த் தேர் என்றுங் கூறுவர்.



பிராந்தி இரு வகைத்து:-

1. **சோபாதிகப் பிராந்தி** - உபாதி யோடு கூடிய பிராந்தி சோபாதிகப் பிராந்தி ஆம். அது உபாதி யிருக்கும் வரை தோற்றும். கானல் இருக்கும் வரை ஜலத் தோற்றம் இருப்பது போல, உபாதி யாகிய விக்ஷேப சத்தி யிருக்கும் வரை ஜகத் தோற்றம் இருக்கும்.

2. **நிருபாதிகப் பிராந்தி** - உபாதி யின்றிய பிராந்தி, நிருபாதிகப் பிராந்தி யாம். சுத்தி - ரஜதம், ரஜ்ஜு - சர்ப்பம் முதலியன, சுத்தியை அறிந்த வுடன் ரஜத நிவிர்த்தியும், ரஜ்ஜுவை அறிந்த வுடன் சர்ப்ப நிவிர்த்தியும் உண்டாகின்றன. அது போல், அதிஷ்டானப் பிரஹ்மத்தினை அறிந்த வுடன், காரிய சகித ஆவரண சக்தி விசிஷ்ட அஞ்ஞானம் நீங்கினதே அன்றி, விக்ஷேப சக்தி விசிஷ்டப் பிரபஞ்சம் நீங்க வில்லை யாகலின், இப் பிரபஞ்ச அத்தியாசம் நிருபாதிகப் பிராந்தி அன்று. சோபாதிகப் பிராந்தியே என உணர்க. (81)

அறிவானு நல்லறிவு மறியப்ப டும்பொருளும்,
பிறிவாய்மூன் றுயிருத்தல் பேதமல வோவெனவே. (82)

(இ—ள்.) அறிவானும் - ஞாதாவும், நல் - (விஷய ஆவா ணத்தை நீக்கும்) சிறந்த, அறிவும் - ஞானமும், அறியப்படும் பொருளும் - (ஞாந விஷய மாய) ஞேயமும் (என), மூன்று ஆய் - மூன்று வித மாக, பிறிவு ஆய் - வேறு (பா டுற்ற திரி புடி) ஆய், இருத்தல் - தங்கல், பேதம் - த்வைதம், அலவோ - அன்றோ ?, என - என்று அர்ஜுநன் வினவ. (எ-று).

உம் - மூன்றும் எண். ஓ - வினு. ஏ - அசை.

"பேதமலவோ" என்புழி - அல - என்பது ஒருமையிற் பன்மை மயக்கம்.

'திரிபுடி' என்பது; திரி என்பது மூன்று. புடம் என்பது சேர்க்கை. புடி என்பது சேர்க்கை உடையது. ஆகவே, முக் கூட்டம் உடையது என்ப தாம். அவை, ஞாதா - ஞாநம் - ஞேயம், திருஷ்டா - தர்சந - திருசியம், காண்பான் - காட்சி - காணப்படு பொருள் என்பன வாம்.

"அத்வைதம்" என்னும் சித்தாந்தத்திற்கு விரோதம் வரும் என்னும் கருத்தை உட்கொண்டு, "அறிவானும் அறிவும் அறியப்படு பொருளும்" எனத் திரி புடி ரூப மூன்று பிரிவா யிருத்தல் "பேதம்", அதாவது, "த்வைதம் அல்லவா" என்று அர்ஜுநன் வினவினன் என உணர்க. (82)

சோப்பநத்திற் றனித்தோருவன் தோற்றம்வே றில்லையங்கே,
கற்பனையாம் பொருளறிவு காண்பவன்போ லென்றவரோ.(83)

(இ—ள்.) தனித்த - தனியனாய் (நித்திரை செய்கின்ற), ஒருவன் - ஒரு புருஷனது, சொப்பநத்தில் - ஸ்வப்ந அவஸ்தையில், வேறு - (அவனுக்கு) அந்நிய மாக, தோற்றம் - பிரதீதியாகும் திரி புடிப் பொருள், இல்லை - (உண்மை யாக) இன்றாம், அங்கு - (அங்ஙன மாயினும்) அவ்விடத்து, பொருள் - ஞேயம், அறிவு - ஞாநம், காண்பவன் - ஞாதா (என்னும் திரி புடி), கற்பனை ஆம் - பொய்யா (கத் தோற்றுவ தா)ம், போல - (அது) போல, என்றவரோ - (சாக்ஷிக் கந்நிய மாகத் தோன்றும் ஞாதிரு, ஞாந, ஞேய மென்னும் பேத திரி புடித் தோற்றம் கற்பனை யாம். உண்மை யன்று) என அநுக்கிரகித்த பகவானே (நீர்), (எ-று).

ஏ - அசை. இசை யெச்சத்தால் தார்ஷ்டாந்தத்தை வருவித் துரைக்க.



தார்ஷ்டாந்தம் - சாக்ஷி சைதந்யத்திற்கு வே றாகச் சத்திய மாக, திருஷ்டா - தர்சநம் - திருசியம் என்பன இல்லை என்ப தாம். ஸ்வப்நத்தில் வேறு இல்லாமல் இருந்தும், கற்பனை யாகத் திருஷ்டா தர்சந திருசியங்கள் காணப்படுவன போலக், கற்பனை யாக வியாவகாரிக காலத்தில் திரி புடித் தோற்றம் உண்டாகின்றது என உணர்க. "மஹா ராஜத் துறவு" -

"கநவதனி லுணர்விலது காணுந்தநு வாதிகளைக்
கருதி யேகின்,
றுனுமவரி னிதுகநவென் றுணர்ந்தவர்க ணசையிலதி
னுலகு தன்னில்." (107)

என்று கூறுவது கொண்டு உணர்க.

ஏக ஜீவ வாதம் - ஏக ஜீவ வாதம் இரு வகைத் தாம். ஒன்று, சேதந விசிஷ்ட சரீர மாம். ஏனைச் சரீரங்கள் ஜட மாம். இரண்டு, ஒரு ஜீவன் முக்கிய னாம். ஏனைச் சரீரங்களில் தோற்றும் ஜீவர்கள், ஆபாசர்கள். அதாவது, கற்பிதர்கள் ஆவர். ஜீவன் ஒருவன் என்றும், ஒரு ஜீவன் முக்கியன் ஏனையோர் கற்பிதர் என்றும் கூறும் இருவருக்கும், அதிஷ்டாந ஜீவனுக்கோ, அல்லது, ஒரு ஜீவனுக்கோ, ஞாநம் வந்தால் ஜகத் இராது; ஏதனால், எனின், ஜகத் ஜீவ கற்பிதம் ஆகலின், அவற்றுள்ளும், ஒரே ஜகத் என்றும், ஒவ் வொரு ஆபாச ஜீவனுக்கும் வெவ் வேறு ஜகத் என்றும், பல வேறுபாடுகள் உள்ளன. அவை சித்தாந்த லேச சங்கிரகம், சித்தாந்த பிந்து முதலிய நூற்களில் விரி வாக எழுதப்பட்டிருக்கின்றன.

நாநா ஜீவ வாதம் - அவித்தை அந்தக் கரணங்களின் பிரதி பிம்பம் அநேக மாக இருத்தலின் நாநா ஜீவர்கள் ஆவர். நாநா ஜீவ வாதம் இரு வகைத் தாம். அஞ்ஞாநம் அம்சம் நாநா

வாகலின், அஞ்ஞானப் பிரதிபிம்பம் என்றும், அந்தக் கரணம் அநேக மாகலின் அந்தக் கரணப் பிரதிபிம்பம் என்றும் கூறுவர். இரண்டும் நாநா ஜீவ வாதமே யாகும்.

நித்திரை செய்கின்ற ஒருவன், ஸ்வப்ந அவஸ்தையில் தன்னைப் போன்ற வேறு ஒரு புருஷனையும், ஞாநத்தினையும், ஞேயத்தினையும் பொய் யாகக் கற்பிக்கின்றது போல, ஒரே சைதந்யம், கற்பனை யாக ஜீவன், ஞாநம், ஞேயம் என்னும் திரி புடியைக் கற்பிக் கின்றது. ஸ்வப்நம் பார்ப்பவன் விழித்தால், திரி புடி யில்லாமற் போவது போல, ஞாந சாக்கிரத்தைச் சைதந்யம் அடையின் திரி புடித் தோற்றம் இல்லாமற் போம் என உணர்க. (83)

கற்பனையாம் பேதங்கள் காணமற் போம்வகையை,
விற்பநமா நானறிய விளம்புமென வேவணங்க. (84)

(இ—ள்.) கற்பனை ஆம் - பொய் யாகிய, பேதங்கள் - (ஞாதா - ஞாந - ஞேய) வேறுபாடுகள், காணமல் - தோன்றமல், போம் - நீங்கும், வகையை - தன்மையினை, நான் - அடியேன், விற்பநம் ஆ(க) - தெளி வாக, அறிய - உணர்ந்து கொள்ள, விளம்பும் - கூறி யருளும், என - என்று விண்ணப்பித்து, வணங்க - (அர்ஜுநன்) நமஸ்காரம் செய்ய, (எ-று).

ஏ - அசை.

விற்பந மா - ஆ - 'ஆக' என்பதன் கடைக் குறை.

(இச் செய்யுள் குளகம்). (84)

துரியமாம் யோகத்தாற் றூயமநம் லயமானல்,
அரியமூ வகைவிகற்ப மழியுமென்று சொன்னவரோ. (85)

(இ—ள்.) துரியம் ஆம் - நான் காம் பூமி யாகிய, யோகத் தால் - (ஞாந) நிஷ்டை (யின் முதிர்ச்சி) யால் (அதாவது, அத்வைத பாவநா ரூப நிர்விகற்ப சமாதி யப்பியாசத்தால்), தூய - பரிசுத்த, மநம் - (பிரஹ்மாகார மான) மநோ விருத்தி, லயம் ஆனல் - (பிராஹ்ம ஸ்வரூப மாக) அடங்கு மாயின், (அதாவது, அத்வைத அவஸ்தாந ரூப நிர்விகற்ப சமாதி நிலை வரு மாயின்), அரிய - (நீங்குதற்கு) அருமை யான, மூ வகை - மூன்று வித மான, விகற்பம் - (ஞாதா, ஞாந, ஞேய) பேதம், அழியும் - நாச மாம், என்று - என, சொன்னவரோ - கூறி யருளிய பகவானே (நீர்), (எ-று).



விகற்பத்துக்கு "அரிய" என்னும் விசேஷணம், அத்வைத அவஸ்தாந ரூப நிர்விகற்ப சமாதியை யடைந்தால் அன்றி நீங்காது என்பது தோன்றக் கொடுக்கப்பட்ட தாம்.

**நிர்விகற்ப சமாதி** - அத்வைத பாவநா ரூப நிர்விகற்ப சமாதி என்றும், அத்வைத அவஸ்தாந ரூப நிர்விகற்ப சமாதி என்றும், இரு வகைத் தாம். நிர்விகற்ப சமாதிக்கு நான்கு விக்கினங்கள் இருக்கின்றன. அவை யின்றி யிருக்கின் சாக்ஷாத் காரம் உண்டாம்.

துரிய மாம் யோகம் - நான் காம் பூமி யாகிய ஞாந நிஷ்டை.

யோகம் - நிஷ்டை.

**தியாநம்** - லய, விக்ஷேப, கஷாய, ரஸாஸ்வாதம் என்னும் நான்கும் இன்றியது ஆம்.

**விசார சாகரம்:**

ஆலஸ்யத்தினு லாவது, சோம்பலினு லாவது, நித்திரையினு லாவது விருத்தி யில்லா திருத்தல் - இலய மாம்.

1. லய மாவது - நித்திரைக்கு லயம் என்று பெயர், எல்லா விருத்திகளின் அபாவத்தின் காரண மாய தமோ குணத்தினைக் கவரும் விருத்தி நித்திரை யாம். அல்லது, மூர்ச்சா அவஸ்தை

போன்று, சித்த விருத்தி, பாஹ்ய சப்தாதி விஷயங்களைக் கிரஹிக்காதும், ஆந்தர பிரத்யக் ஆத்ம ஸ்வரூபத்தின் கிரஹண மின்றியும், தன் காரணத்தில் லயம் ஆவது நித்திரை யாம்.

2. பாஹ்ய விஷயாகார விருத்தி - விட்சேப மாம். விக்ஷேபம் - மீண்டும் மீண்டும் சித்தத்தில் அநுபவிக்கப்பட்ட விஷயத்தின் ஸ்மரணமும், சக்ஷுா முதலியவற்றின் வாயி லாக அநுபவிக்கப்படாத விஷய சந்நிகர்ஷத்தின் பின் உண்டாம் அதன் அநுபவமும் விக்ஷேபம் எனப்படும். அல்லது, அகண்ட வஸ்துவின் கிரஹணத்தின் பொருட்டு, அந்தர் முகப் பிரவிருத்தி யாய சித்த விருத்தி, அவ் அகண்ட வஸ்துவில் நிலைக்கு மாற்ற லின்றி அதன் தியாக பூர்வகம், பூர்வ சம்ஸ்காரத்தினுல் பாஹ்ய விஷயத்தின் கிரஹண பாலநத்தின் பொருட்டு (க் கிரஹிக்கப்பட்ட நூதந சஞ்சல பக்ஷி போன்று,) மீண்டும் மீண்டும் பாஹ்ய விஷய தேசத்தில் செல்லல் ரூப சஞ்சலத் தன்மை, விக்ஷேப சப்தத்தின் பொருள் ஆம்.

யோகியின் பிரயத்நத்தால் எந்த அந்தர்முக மான விருத்தி, இராகாதிகளின் உற்பூத (வெளிப்பட்ட) சம்ஸ்காரத்தால் தடுக்கப்பட்டுப் பிரஹ்மத்தை விஷயஞ் செய்கிற தில்லையோ, அந்த விருத்தி கஷாயம் எனப்படும்.

3. கஷாயம் - பூர்வ பூர்வ ராகாதி திட வாசனையினுல் சித்தத்தின் நிரோதம், கஷாயம் ஆம். லயம், விக்ஷேபம் இன்றி யிருப்பினும், ராகாதி வாசனையினைக் காரண மாக வுடைய சித்தத்தின் நிரோதத்தினுல் அகண்ட வஸ்துவின் கிரஹண மின்மை, கஷாய சப்தத்தின் பொருள் ஆம். ஆண்டு, அகண்ட வஸ்துவின் கிரஹணம் இன்மையும், பாஹ்ய வஸ்துவின் கிரஹணம் இன்மையும் ஆம். எங்ஙனம், ராஜ தர்சநத்தின் பொருட்டுச் சென்ற புருஷனுக்கு, ராஜ மார்க்கத்தில் துவார பாலகர்களால் ஆண்டே நிரோதஞ் செய்யப் படுதலால், இராஜாவின் தர்சநமும் இன்று, கிரஹத்திற்கு வருதலும் இன்று அங்ஙனமே ஆம்.



4. ரஸ ஆஸ்வாதம் - நிர்விகற்ப அங்கி யாகிய சமாதியின் ஆரம்ப காலத்தில், சவிகற்ப சமாதியின் சம்ஸ்காரத்தினுல், திரி புடிகளால் சவிகற்ப ஆநந்தத்தினை அநுபவித்தல், ரஸ ஆஸ்வாதம் ஆம். ஆஸ்வாதம் என்பது அநுபவித்தற்கு ஆம். திரி புடியின் அநுசந்தாநம் இன்றி நிர்விகற்ப சமாதியிற் பிரவிர்த்தித்த சித்தம், அகண்ட வஸ்துவின் கிரஹணம் இன்மையினுல், பிரஹ்மாநந்த ரஸ ஆஸ்வாதத்தின் பிராப்தி யில்லாவிடினும், பாஹ்ய விஷயத்தி னின்றும் நிவிர்த்தி யடைந்து உள்ளே யுண்டாய திரி புடி சஹிதப் பிரஹ்மாநந்த அநுசந்தாந ரூப சவிகற்ப சுகத்தினை, பிரஹ்மாநந்தத்தின் பிராந்தியினுல் அந்தர் முக மாய சித்தம், மீண்டும் மீண்டும் அநுபவித்தல் ரஸாஸ்வாதத்தின் பொருள் ஆம். அல்லது, யோகிக்கு விக்ஷேப ரூப துக்க நிவிர்த்தியினு லுண்டாம் ஆநந்தாநுபவம், ரஸாஸ்வாதம் எனப்படும். எங்ஙனம், பிதாவால் வைக்கப்பட்ட தநத்தின் கிரஹணத்தின் பொருட்டுப் பிரவிருத்தித்த புருஷன், ஆண்டு அத் தநத்தினை ரக்ஷிக்கும் பூதப் பிரேதாதிகளால் பிடித்து அடிக்கப்பட்டுப் பின்னர் விட்டுவிடின், அப் பொழுது அப் புருஷன் தநத்தின் அடைவு இன்றியவ னுயினும், அடித்தலால் உண்டாய துக்க நிவிர்த்தி மாத்திரத்தினுல் எப்படிச் சுகி யாகின்றுனே, அது போன்று ஆம்.

இவற்றுள் ஒன்று இருப்பினும் நிர்விகற்ப ஆநந்தத்தின் அநுபவம் உண்டாவது இன்று. ஆதலால், இந் நான்குமே நிர்விகற்ப சமாதியின் பிரதிபந்தக விக்கிந ரூபம் ஆம்.

இப் பொழுது, விக்கிந நிவிர்த்தி உபாயத்தினைக் கூறுவாம் -

1. நித்திரா ரூப லயத்தினை அடையின், அல்ப ஆகாரத்தின் நியமத்தினுலும், மிகச் சிரமத்தினைக் கொடுக்கும் கிரியையின்

தியாகத்தினுலும், பிராணயாமத்தினுலும், எழுந்து உலாவலாலும், சித்தத்தினை நித்திரையி னின்றும் விழிப்பிக்க.

2. எப்பொழுது, பூர்வம் அநுபவிக்கப்பட்ட விஷயத்தின் சம்ஸ்காரத்தினுல், சித்தம் விக்ஷிப்தம் ஆகின்றதோ, அப்பொழுது, விஷயத்தில் தோஷ தர்சநத்தினுலும், பிரஹ்ம அநுசந்தாநாதி களினுலும், மீண்டும் சித்தத்தினை ஏகாக்கிரம் செய்க.

3. எப்பொழுது, இராகாதிகளால் சித்தம் கஷாய சகிதம் ஆகின்றதோ, அப் பொழுது, சூக்ஷ்ம திருஷ்டியினுல் அதனை அறிந்து, அதனை மீண்டும் பிரஹ்மத்தில் ஸ்தாபிக்க.

4. எப்பொழுது, சித்தம் பிரஹ்மத்தினை அடைகின்றதோ, அப் பொழுது, அதனைச் சலிப்பிக்கற்க. பின்னையோ, தன் மயமா யிருக்குக.

"லயத்தினை அடைந்த சித்தத்தினை விழிப்பிக்க, விக்ஷிப்த சித்தத்தினை மீண்டும் ஏகாக்கிரம் செய்க, கஷாய முடைய சித்தத்தினைச் சூக்ஷ்ம திருஷ்டியால் அறிக. பிரஹ்மத்தினை அடைந்த சித்தத்தினைச் சலிப்பிக்கற்க" என்னும் கௌட பாத சுவாமிகளின் வசநப் பிரமாணத்தினுல்.

அல்லது, ஈசுவரனது உபாசனையினுலும், விக்கிநத்தின் நாச மும், சமாதியின் லாபமும் உண்டாகின்றன. "ஈசுவரனது பிரணி தாந (நமஸ்கார) த்தினுல், விக்கிந நிவிர்த்தி பூர்வகம் சமாதியின் லாபம் உண்டாகின்றது." என்னும் பதஞ்சலி பகவானின் வசநத் தினுல். "கிலேசம், கர்மம், விபாகம், ஆசயம், என்பவற்ருேடு சம்பந்திக்காத புருஷ விசேஷன் ஈசுவரன் ஆம்" என்று பதஞ்சலி பகவான் கூறியிருக்கின்றனர். அவித்தை முதலியன பஞ்சக் கிலேசங்கள் ஆம். சுக்லம், கிருஷ்ணம், மிசிரம் என்னும் மூன்றும் கர்மங்கள் ஆம். போகத்தினுல் உண்டாய சம்ஸ்காரம் ஆசயம் ஆம்.



இக் கிலேசங்களால் பாதிக்கப்பட்டவன் ஜீவந் ஆவன். அவற்றின் விலக்ஷண மாய சர்வக்ஞ, சர்வ சக்தியினை யுடைய புருஷ விசேஷன் ஈசுவரன் ஆவன். அவ் ஈசுவரனது வாசகம் ஆய பிரணவ ஜபம், அதன் அர்த்தத்தின் சிந்தநம் என்பன ஈசுவரனது பிரணிதாநம் ஆம். எங்ஙனம்?, "நான் அது", "அது நான்" என்று சுருதியில், "அது" என்னும் சப்தத்தினுல் பரமாத்மா கூறப்பட்டிருக்கின்றது, "நான்" என்னும் சப்தத்தினுல் அந்தர் ஆத்மா கூறப்பட்டிருக்கின்றது, இவ் விரண்டு சப்தத்தின் சாமா நாதிகாணியத்தினுல், பிரஹ்ம ஆத்மாவின் ஏகத் தன்மை கூறப் பட்டிருக்கின்றது. ஆதலால், எங்ஙனம், "அது நான்" என்னும் வாக்கியத்திற்கு, "நான் பரமாத்மா" என்பது பொரு ளாகுமோ, அங்ஙனமே, "ஸோஹம் (அது நான்)" என்னும் வாக்கியத்தில், ஸ கார, ஹ காரங்களை லோபஞ் செய்ய, "ஒ - அம்" என எஞ்சி நின்றன. அ காரத்தினை லோபஞ் செய்யில், "ஓம்" என்னும் சப்தம் உண்டாகின்றது. ஆதலால், "ஓம்" என்னும் சப்தத் திற்கும், "நான் பரமாத்மா வாய் இருக்கின்றேன்" என்பதே பொருள் ஆம். இவ் வாறு, பிரணவ அர்த்தத்தின் அநுசந்தாந ரூப ஈசுவரப் பிரணிதாநத்தினுல், உண்டாய பரமேசுவரனது அநுக் கிரஹத்தினுல், விக்கிநத்தின் நாசமும், நிர்விகற்ப சமாதியும், உண்டாகின்றன.

இவை வேதாந்த பதார்த்த மஞ்சுஷாவில் உள்ளன. இதனை மநத்தில் கொண்டு பகவான், "துரியம் ஆம் யோகத்தால் தூய மநம்" என்றும், "அரிய மூ வகை விகற்பம்" என்றும் கூறினர் எனக் கொள்க. (85)

சிறந்திருக்கு மாங்மாவுஞ் சேகமெல்லா நிறைந்திருந்தும்,
மறைந்தேனக்குத் தோன்ருத வகையேது சொல்லுமேன.(86)

(இ—ள்.) சிறந்து - (சச்சிதாநந்த மாகிய) சிறப் பியல்பு பொருந்தி, இருக்கும் - இருக்கின்ற, ஆந்மா - ஆத்மா, செகம் - பிரபஞ்சம், எல்லாம் - முழுவதும், நிறைந்து இருந்தும் - பூரண மா யிருந்தும், எனக்கு - அடியேனுக்கு, மறைந்து - ஒளிந்து, தோன்றாத - விளங்காத (புலப்படாத), வகை - விதம், ஏது - என்னே?, சொல்லும் - கூறி யருளும், என - என்று (அர்ஜுநன்) கேட்க, (எ-று).

உம் - அசை. நிறைந் திருந்தும் என்ற உம்மை - உயர்வு சிறப்பு. (86)

சத்துச்சித்தா நந்தந் தாமூன்று மதனுடனே,
ஒத்துற்று நாமவு ருவஞ்ச கமாகி. (87)

(இ—ள்.) சத்து - இருப்பும், சித்து - விளக்கமும், ஆநந்தம் - பிரியமும், மூன்றும் - (ஆகிய) மூன்றும் (ஆந்ம சொரூப மாம்), அதன் உடன் - அந்த மூன்றோடு, நாம(ம்) - (அநான்ம ஜகத் சொரூப மாய) பெயர், உருவம் - வடிவம் (என்னும் இரண்டும்), ஒத்து உற்று - ஒருமித்துப் பொருந்தி, சகம் ஆகி - பிரபஞ்ச மாய், (எ-று).

தாம் - ஏ - அசை. (இச் செய்யுள் குளகம்) (87)

இருக்கையினிற் றோன்று திவைமூன்றும் பிரமமென
மரிக்கில்வரும் பின்னிரண்டு மறிசகமென் றுரைத்தவரோ.(88)

(இ—ள்.) இருக்கையினில் - (கலந்து) இருக்கின்றபடியால், தோன்றாது - (அப் பாகுபாட் டுணர் வின்றிய உனக்கு ஆத்மா) விளங்காது, [பின் எக் கால் விளங்கு மெனிற் கூறுகின்றார்.] இவை மூன்றும் - (சச்சிதாநந்த மாகிய) இம் மூன்றும், பிரமம் - (பிரத்திய கபிந்ந) பிரஹ்ம ஸ்வரூபம், என - என்றும், பின் - பின்னர் (க் கூறப்பட்ட), இரண்டும் - (நாம ரூபங்கள்) இரண்டும், மறி - நாச மாகின்ற, சகம் - பிரபஞ்ச (ஸ்வரூபம்), என்று - எனவும், மரிக்கில் - (பாகுபடுத்தி விசார ரூப) ஆலோசனை செய்து பார்க்கில், வரும் - (சச்சிதாநந்த ஸ்வரூப ஆத்மா) தோற்றும், உரைத்தவரோ - (என்று) யருளிய பகவானே (நீர்), (எ-று).



पञ्चदशि (13) அத்வைதாநந்தம். சுலோகம் 92, 93, 94.

चेतनाचेतनेष्वेषु सच्चिदानन्दलक्षणम् ।
समानं ब्रह्म भिद्यते नामरूपे पृथक् पृथक् ॥ ९२ ॥
ब्रह्मण्येते नामरूपे पटे चित्रमिव स्थिते ।
उपेक्ष्य नामरूपे द्वे सच्चिदानन्दधी भवेत् ॥ ९३ ॥
जलस्थेऽधो मुखे स्वस्य देहे दृष्टेऽप्युपेक्ष्य तम् ।
तीरस्थ एव देहे स्वे तात्पर्यं स्याद्यथा तथा ॥ ९४ ॥

பஞ்ச தசி. (13) அத்வைதாநந்தம். கவி 46, 47.

"கானிலாக் கிநிசலமு மூர்வி யண்டங் கணிலோக மியமானர் கல்லே முன்னு, மானிகா ரியங்களுயிர் மதியி னுடே யறிவினிழற் பதிபிம்பித் தமர்வ தாகு, மூனசே தநசேத நத்தி னுடே யுள விலகின் புருப்பிரம மொருமை மேவு, மீனமா நாமவுரு வேறு வேறா யிரும்பேத மடைந்திடுமென் றிதயத் தோர்வாய்". (46)

"ஆடையி டந்தனி லோவிய கின்றென வார்பிர மந்தனி லுருநாமம், ஒடிவை வந்துறு மோயவி ரண்டுமு ளோதறி வின்பம தியாதாமே, யூடுச லந்தன தோமுக மங்கம தோர்பொறி பம்பினு மதைநூறி, மாடுதி ரந்தன தாகவி டந்தனின் மாமக மொன்றுறு மதுபோலே." (47)

என்று வித்தியாரண்ய சுவாமிகளும் கூறியிருக்கின்றார்கள்.

सरस्वती रहस्य उपनिषत् ॥

"भेदस्तयो र्विकारः स्यात्सर्गे न ब्रह्मणि कचित् ।
अस्ति भाति प्रियं रूपं नाम चेत्यंशपञ्चकम् ॥ २३ ॥
आद्यत्रयं ब्रह्मरूपं जगद्रूपं ततो द्वयम् ॥
अपेक्ष्य नाम रूपे द्वे सच्चिदानन्दतत्परः " ॥ २४ ॥

"பேதம் அவ் விரண்டின் விகார மாம். (அது) ஜகத்தில் இருக்கின்றது. பிரஹ்மத்தில் ஓரிடத்தும் இல்லை" 23.

"அஸ்தி பாதிப் பிரியம் ரூபம் நாமமும் என ஐந்து அம்சங்களை உடைய தாம், முன் மூன்றும் பிரஹ்ம ரூப மாம். அதன் பின் இரண்டும் ஜகத் ரூப மாம். நாம ரூபம் இரண்டும் விட்டு, சச்சிதாநந்த தத் பரன் ஆக வேண்டும்" 24.

என்று சரஸ்வதீ ரஹஸ்ய உபநிஷத் கூறுகின்றது.

1. சத்து:- மூன்று காலத்திலும் மித்தை என்று நிச்சயிக்கப்படாதது சத் தாம். நிகழ் காலத்தில், அநுமாநம், அர்த்தாபத்திப் பிரமாணங்களினாலும், மித்தை என்று நிச்சயிக்கப்பட்ட ஜகத் அசத் தாம்.

2. சித்து :- எல்லாவற்றையும், வேறு பிரகாசத்தின் அபேக்ஷை யின்றி விளக்குவது சித் தாம். வேறு பிரகாசத்தின் சகாயம் இன்றிய காலத்து விளங்கா திருக்கும் ஜகத் ஜட மாம்.

3. ஆநந்தம்:- மிகுந்த பிரியத்திற்கு விட மா யிருப்பது ஆநந்தம் ஆம். பாம்பு, தேள் முதலியன போல, எக் காலத்தும் வெறுப்பிற்கு இட மா யிருக்கும் ஜகத் துக்கம் ஆம்.

4. நாமம்:- கடம், படம், மடம், தடம், அடம், ஓடம், [illegible]டகம் என்பன நாமம் (பெயர்) ஆம். பிரஹ்மத்துக்கு நாமம்



இன்மையின் அநாமம் ஆம். சில நாமங்கள் பெரியோர்களால், குலாலனால் வழக்கிற்காகப் பாண்டங்கட்கு இடப் பெற்ற பெயர் போன்று, வழங்குதற் பொருட்டு இடப்பட்ட பெயர்கள் ஆம்.

5. ரூபம்:- ஆகிருதி விசேஷம் ஜகத்தின் ரூபம் ஆம். எது போலும் எனின், பண்டி (வயிறு) பருத்து வாய் சிறுத்து இருப்பது குட ரூபம் என்பது போல ஆம். குடத்தின் ஆகிருதி விசேஷத்தினை ரூபம் என்பர். பிரஹ்மம் அரூபம் ஆகலின், ஆகிருதி அற்ற தாம்.

அசத்து, ஜடம், துக்கம், நாமம், ரூபம் ஐந்தும் ஜகத்தின வாம்.

சத்து, சித்து, ஆநந்தம், அநாமம், அரூபம் ஐந்தும் பிரஹ்மத்தின வாம் என விவேகித்து உணர்க. (88)

அறிந்துகொள்ஞா நத்தாலே யாங்மாவை யென்றுரைத்தீர்,
சிறந்தொளிரு மாங்மாவுந் திருசியமா மோவெனவே. (89)

(இ—ள்.) ஞாநத்தால் - (அபரோக்ஷ) ஞாநத்தினால், ஆந்மாவை - ஆத்மாவினை, அறிந்து கொள் - உணர்ந்து கொள்வாயாக, என்று - என, உரைத்தீர் - கூறி யருளினீர், சிறந்து - (சச்சிதாநந்த மாகிய) சிறப் புற்று, ஒளிரும் - பிரகாசிக்கின்ற, ஆந்மாவும் - ஆத்மாவும், திருசியம் ஆமோ - (அங்ஙன் அறியப்படத் தக்க சகத் போலத்) திருசிய மாகுமோ, என - என்று (அர்ஜுநன்) வினவ, (எ-று).

உம் - இறந்தது தழீஇயது. ஏ - ஏ - அசை. ஓ - வினா.

ஞாநத்தினால் அறியப்படுவது ஞேயம் ஆம். பிரபஞ்சம் ஞேயம் ஆட். அதனால், அது திருசியம் ஆம். அது போலப் பிரஹ்மமும், ஞாநத்தால் அறியப்படுவதால் ஞேயம் ஆம். அதனால், பிரஹ்மமும்

பிரபஞ்சம் போலத் திருசியம் ஆம், என்னும் கருத்தை உட் கொண்டு அர்ஜுநன், "ஆத்மா திருசியம் ஆமோ" என்று வினவினன் என உணர்க.

87, 88-வது பாக்களில் பிரத்தியக்ஷ மாய்த் தோற்றுகின்ற இப் பிரபஞ்சத்தில் ஆத்ம அநாத்மாக்கள் சேர்ந்து விளங்குகின்றன. அவற்றுள், சச்சிதாநந்த (இருப்பு, விளக்க, இன்ப) சொரூபம் பிரத்திய கபிந்ந பிரஹ்மத்தின் சொரூப லக்ஷண மாம். நாம ரூபங்க ளிரண்டும், அநாத்ம சகத் லக்ஷண மாம். என அவ் விரண்டின் சொரூப லக்ஷணங்களைக் கூறி, அவ் விலக்ஷணங்களைக் கொண்டு, அவற்றினை மநதில் ஊன்றி ஆலோசித்து விசாரித்துப் பாகுபாடு பண்ணி, நாம ரூப மிரண்டையும் அநாத்ம சகத் தெனத் தள்ளில், எஞ்சி நிற்கும் சச்சிதாநந்தமே நின் சொரூப மாகிய பிரஹ்ம சொரூபம் எனத் தோற்றும் என் றருளிய வாறு செய்த விசாரத் தினுல் உண்டாம் ஞாநத்திற்கு விஷய மாவதால், சச்சிதாநந்த ஆத்மா திருசியம் ஆய்விடுகிறதே, அது அங்ஙன மாதல் பொருந்தி மா? என்பது அர்ஜுநன் வினவின் கருத் தாம். (89)

முந்தியஞா நத்தாலே முதிருமஞ்ஞா நந்துரக்கிற்,
சிந்தையிலாந் மாச்சுயமாய்த் திகழுமென்று சொன்னவரோ (90)

(இ—ள்.) முந்திய - (முதன்மை வாய்ந்த, அல்லது சிறந்த, ஞாநத்தால் - ஞாநத்தினுல், முதிரும் - மிகுந்த, அஞ் ஞாநம் - அஞ்ஞாநத்தினை, துரக்கில் - (நீ) நிவிர்த்திக்கில், சிந்தையில் - (உனது) சித்தத்தின்கண், ஆத்மா - ஆத்மா, சுயம் ஆய் - தா ணுகவே, திகழும் - விளங்கும், என்று - என, சொன்னவரோ - கூறி யருளிய பகவானே (நீர்), (எ-று).

ஏ - அசை. முந்து - சிறப்பு.



முந்திய ஞாநம் - முதன்மை வாய்ந்த, அல்லது சிறந்த ஞாநம்.

முதிரும் அஞ்ஞாநம் - மிகுந்த ஆவரண சக்தி விசிஷ்ட அஞ்ஞாநம் எனக் கொள்ளல் நலம். ஆவரண சக்தி விசிஷ்ட அஞ்ஞாநம், தனது ஸ்வரூபத்தினை மறைப்ப தாகலின். விக்ஷேப சக்தி விசிஷ்ட அஞ்ஞாநம் குரு சாஸ்திராதி ரூப மா யிருந்து தனது ஸ்வரூபம் வெளிப்படுதற்கு அநுகூல மாக இருக்கின்ற மையினுல் எனப் பகுத் துணர்க. (90)

இனியமுத்திச் சுகமிருப்ப தெப்படியேன் றேவினவ,
அநுபவத்தி லறிவிடயா நந்தம்போ லென்றவரோ. (91)

(இ—ள்.) இனிய - (யாவராலும்) விரும்பத் தக்க, முத்தி சுகம் - மோக்ஷாநந்தம், எப்படி - எவ் வாறு, இருப்பது - இருக் கும், என்று - என, வினவ - (அர்ஜுநன்) கேட்க, [அதற்கு விடை யருளிச் செய்கின்றார்.] விடய ஆநந்தம் - விஷய சுகத்தினை, போல் - (அநுபவித்து அறிவது) போல, அநுபவத்தில் - (நேரே துய்த் தறியும்) அநுபவ ஞாநத்தினுல், அறி - (ஆத்மாநந்தத்தினை) உணர்ந்து கொள்வா யாக, என்றவரோ - எனக் கூறி யருளிய பகவானே (நீர்), (எ-று).

அநுபவத்தில் - இல் - ஏதுப் பொருளில் வந்த ஐந்த னுருபு.
ஏ - அசை.

விஷயாநந்தம் - பிராந்தி காலத்தில், ஸ்திரீ புத்திராதிக ளாய இஷ்ட வஸ்துவின் ஸ்மரண, தர்சந, லாப, போக சமயத்தில், அல்லது, அதன் உத்தர க்ஷணத்தில், புண்ணிய கர்மத்தினுல் உண்டாம் ஆத்ம அபிமுக (நேர் முக) சாத்வீக, பரிணாம ரூப சாந்தி விருத்தியில் பிரதிபிம்பிக்கும் ஸ்வரூபாநந்தம் விஷயாநந்தம் ஆம். அஃது, ஏக ரசம் அன்று. எதனுல், இஷ்ட விஷயத்தின் தார

தம்மியத்திஞல், விர்த்தி ஆநந்தத்தின் தார தம்மியத் தன்மை, "அந்தப் பக்ஷி ரூப ஆநந்த மய கோசத்தின் பிரியம் சிர சாம். மோதம் வலப் பக்ஷம் ஆம். பிரமோதம் இடப் பக்ஷம் ஆம். ஆத்மா ஆநந்தம் ஆம். பிரஹ்மம் புச்சம் ஆம்" என்னும் சுருதியின்கண் கூறப்பட்டிருக்கின்றது.

அல்லது, ஸ்வர்க்காதி ரூப அவ் அவ் இஷ்ட விஷயத்தின் லாபத்தால், அந்த அந்த இச்சையின் உபராமம் உண்டாய், உண்டாம் அந்தர் முக, ஆத்மாபிமுக சாத்விக பரிணும ரூப அந்தக் கரண விருத்தியில் விளங்கும் ஸ்வயம்பிரகாச ஸ்வரூபாநந்தத்தின் பிரதிபிம்பம் விஷயாநந்தம் ஆம். என்னை? விர்த்தி விஷயம் என்னும் இரண்டற்கும் துக்க ரூப மாயா காரியத் தன்மையால், ஸ்வயம் ஆநந்தம் இன்மையின், இதன்கண் சம்சாரி ஜீவந் அதிகாரி ஆவன்.

விஷயாநந்தம், ஸ்திரீ புத்ர தநாதி விஷயத்தோடு இந்திரிய சம்பந்தத்தின் அதீநமும், சாதியாதி தோஷத்தால் துஷ்டமும் ஆம். அநந்த ஆயாச சாத்தியம் ஆம். பரிணும அவஸ்தையில் பூர்வம் அநுபவிக்கப்பட்ட ஸஜாதீய விஷய சுக இச்சையின் உத்பாதநத்தால்; அதன் சாதந சிருக் சந்தநாதி ஸ்திரி புத்திராதி விஷயங்களின் சம்பாதநத்தில், அநந்தக் கிலேசம் செய்வதும், பூர்வ ஜந்மத்தில் சம்பாதிக்கப்பட்ட புண்ய கர்மம் இன்றித் துஸ்ஸம்பாத்தியமும் ஆம். ஆதலால், முமுக்ஷுக்கள் இந்த க்ஷணிக ஆநந்தத்தின் பொருட்டு, எழ்மைத் தன்மையை யடைவது துர்ப் பாக்கியத் தன்மையின் சிந்நம் ஆம். ஆதலால், ஜிஞ்ஞாசுக்கள் இதன் சம்பாதநத்தின் பொருட்டு வியர்த்தம் ஆக ஆயுளை நாசம் செய்வது உசிதம் அன்று. எதஞல்? விஷய சுகம் அதிக துக்கத்தின் கலப்பால், விஷத்தோடு கூடிய அந்நம் போன்று இருக்கின்றது. பூர்வாச்சாரியர் ஜிஞ்ஞாசுவி னிடத்து இதன் இச்சை



மாத்திரத்திற்கும் சகிப்ப தில்லை. ஆதலால், சரீர நிர்வாக மாத்திரம் விதிக்கப்பட்ட விஷய போகத்தில் சந்துஷ்டன் ஆவது யோக்கியம் ஆம். அதுவும், மோக்ஷ சாதந சிரவணுதி அநுஷ்டாநத்தின் பொருட் டாம். இந்திரியப் பிரீதியின் பொருட் டன்று. "ஹே தாத! (புத்ர)! நீ முக்தியினை இச்சிக்கின் விஷயங்களை விஷம் போன்று விடுக", என்ப தாதிப் பிரமாணத்திஞல் என அறிக.

**பிரஹ்மாநந்தம்** - சுழுத்தியின்கண் ஞாதா வாதி திரி புடி யின்றி ஸ்வப்பிரகாசத் தன்மையால் விளங்கும் ஆநந்தமும், ஜாக்கிர ஸ்வப்நத்தில் விருத்தியோடு கூடிய பிரதிபிம்ப ஆநந்தத்தின் காரண ரூபப் பிம்பமும், பிரஹ்மாநந்தம் ஆம். பிம்ப ரூபப் பிரஹ்மாநந்தம் மநோ நாசாதி மூன்ருேடு கூடின அப்பியாசத்தால் அடையத் தக்க தாம். இதில் ஜீவந் முக்தன் அதிகாரி ஆவன்.

பிரஹ்மாநந்தத்திற்கு, விஷயாநந்தத்தினைத் திருஷ்டாந்தமாகக் கூறினர். சாதிசய பரிச்சிந்ந விஷயாநந்தம் அநுபவிக்கப் படுவது போல, நிரதிசய அபரிச்சிந்ந பிரஹ்மாநந்தம் அத்வைத அவஸ்தாந ரூப நிர்விகற்ப சமாதியில் அநுபவிக்கப்படும் என்பது கருத்தாம்.

"அருந்த வாமறை யந்தமா மகோசரந் தனினீ,
யிருந்த வாறறி வித்தவா றெங்ஙன மிசைப்பேன்."
— சசி வந்ந போதம். 101

என்று கூறுவது போல, அவாங் மாநச கோசரம் ஆகலின், வாக்கால் சுட்டிக் காட்ட முடியாது என்பது ஆம். (91)

மநலயம்வந் தவரலது மற்றிலரோ முத்தரெனச்,
சநகனைப்போற் சீவந்முத்தர் தாமுமுள ரேன்றவரோ. (92)

(இ—ள்.) மந - (சமாதியினல்) மனோ விருத்தியின், லயம் - அடக்கம், வந்தவர் - கைவரப் பெற்றவர்களே, அலது - அல்லாமல், முத்தர் - மோக்ஷ மடைந்தவர்கள், மற்று இலரோ - (மனோ லயம் வராத) வேறு பேர்க ளில்லையோ, என - என்று (அர்ஜுநன் வினவ), [விடை யருளிச் செய்கின்றர்.] சநகனே - சநக (மஹாராஜாவி)னே, போல் - போல, சீவந் முத்தர் உம் - (மனோ லயம் அடையாத) ஜீவந் முக்தர்களும், உளர் - இருக்கின்றனர், என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

தாம் - அசை. சீவந் முத்தரும் என்ற உம்மை இறந்தது தழீஇயது. மற்று - வேறு என்னும் பொருளில், அல்லது, வினை மாற்றுப் பொருளில் வந்த இடைச் சொல்.

முத்தர் - பந்தத்தி னின்றும் விடுபட்டவர்.

**ஜீவந் முத்தர்** - பிரஹ்ம வித், பிரஹ்ம வித் வரன், பிரஹ்ம வித் வரியான், பிரஹ்ம வித் வரிஷ்டன் என்னும் நால்வரும் ஆவர். பிரஹ்ம வித்தில், உத்திதர் என்றும், சமாஹிதர் என்றும் இரு வகை ஆவர். சமாஹிதர் என்பவர் சமாதியில் இருப்பவர் ஆவர். உத்திதர் என்பவர், பிரஹ்மத்தினிடத்தில் மநம் லயம் அடையாமல், வியவகாரத்தில் இருப்பவர் ஆவர். இவ் வாறு உள்ளவர், மிதிலையின் அரச ராகிய ஜநக மகா ராஜா வாவர். அவர் இராச்சிய விவகார முடையவர். அவர் பாஹிய திரிசியா நுவித்த சவிகற்ப சமாதியில் இருந்து, பிரஹ்மாநந்தா நுபவி யாவர். யாஞ்ஞுவல்கியர், சபையில் ஜயம் அடைதல் முதலிய வியவகாரங்களை உடையவ ராக விருந்தனர். சிகித் த்வஜன் ராஜ்ய பாரம் செய்தனன். சூடாலை அஷ்ட மகா சித்தி உடையவ ளாய் இருந்தனள். வாம தேவர், ஜட பாரதர், அவதூதர், ரிஷப தேவர், முதலியோர் சமாஹிதர் ஆவர்.



**சமாஹிதர்** - சமாதி என்பது கால விசேஷத்துக்குப் பெயர். எவ் வளவு காலம் விருத்தி பஹிர் முகத்தினை அடையாமல் அந்தர் முகமா யிருக்கின்றதோ, அது வரைச் சமாதி என்று பெயர். க்ஷண நிரு விகற்ப சமாதி என்று கூறுவதால், க்ஷண காலம் இருத்தலும் சமாதி யாம். இது சாத்ய சமாதி யாம். இவ் வாறு இருப்பவர்களைச் சமாஹிதர் என்பர்.

**சாதந சமாதி நாநா விதம் ஆம்** - சமாதிக்கு அநுகூல மான காலம், இடம், ஆசநம், ஆகாரம் முதலிய நியமங்களையே சமாதி என்று கருதுகின்றனர். அஃது உணர் விலார் மயக்கம் ஆம்.

**உத்திதர்** - சமாதியி னின்றும் வெளிப்பட்டவரை உத்திதர் என்பர். அவ் வாறு, வரன், வரியான் இருவரும் சமாதியி லிருந்து பஹிர் முகம் அடைகின்றனர். பிரஹ்ம வித்தும் ஒவ் வொரு கால், சமாதியி லிருந்து பஹிர் முகம் ஆகின்றான். வரிஷ்டனுக்கும், பிராரப்த க்ஷய மாகி விதேக கைவல்ய பூர்வ க்ஷணத்தில் விருத்தி வெளிப் போந்து தேக பாதம் ஆகின்றது என விவேகித்து உணர்க.

பகவற் கீதை (மூலம் 3-20) (தமிழ் 3-12 கவி.)

" ...............................முன்னஞ்
சேர்ந்தவ ரநேகர்பின் றெரியிற்,
காதலா லரசன் சநகனே முதலோர்
கருமமோ டொழுகியே யன்றோ,
போதரா யுலகம் புக்கதே..............."

என்று இவ் வாறு கூறுகின்றது. (92)

சீவந்முத்தி யடைந்தோர்கள் செயலுமவர் தங்குணமு,
நாவுரைக்கும் வாசகமு நானறியச் சொல்லுமேன. (93)

(இ—ள்.) சீவன் முத்தி - ஜீவன் முக்தியினை, அடைந்தோர்கள் - அடைந்தவர்களினது, செயலும் - வியவகாரமும் (தொழிலும்), அவர் - அவர்களினது, குணமும் - பண்பும், நா - (அவர்களது) நா வானது (அல்லது வாக் கிந்திரிய மானது), உரைக்கும் - சொல்லுகின்ற, வாசகமும் - வசநப் பிரகாரமும், நான் - அடியேன், அறிய - உணர்ந்து கொள்ளும்படி, சொல்லும் - கூறி யருளும், என - என்று (அர்ஜுனன் வினவ), (எ-று).

தம் - சாரியை. உம்மைகள் - எண்ணுப் பொருளன.

சீவன் முத்தி - ஜீவித அவஸ்தையிலேயே பந்தத்தின் நீக்கம்.

இவ் விடயங்களை, பகவற் கீதை 14-19.

" கண்ணிய வுலகிற் கடப்பரி தாய
குணங்கண்மூன் றையுங்கடந் துயர்ந்த,
புண்ணிய ரியல்பும் கடந்துறு நெறியுங்
குறியையும் புகன்றரு ளென்ன" எனவும்.

பகவற் கீதை 2-48.

"...................................அந்தச்
செய்வகை யிலாதோன் செய்யுஞ் செயல்களென்
செப்பு மாறென்"

எனவும் கூறுதல் காண்க.

பகவற் கீதை 2-வது அத்தியாயம் 54-வது சுலோகம்.

" எவ் வாறு பேசுவான், எவ் வாறு இருப்பான், எவ் வாறு நடப்பான்" எனக் கூறுகின்றது.

பகவற் கீதை 14-வது அத்தியாயம் 21-வது சுலோகம்.

"பிரபுவே! இந்த முக் குணங்களையும் கடந்து நிற்பவன் என்ன அடையாளங்கள் உள்ளவன் ஆகின்றான், என்ன ஒழுக்கம் உள்ளவன், மேலும், எவ் வாறு இந்த முக் குணங்களையும் கடந்து விடுகின்றான்" என்று கூறுகின்றது. (93)



**[இது முதல் 94, 95, 96 என்னும் மூன்று பாட்டுக்களால் சீவன் முத்தர் செயல் உணர்த்து கின்றார்.]**

வருங்கருவு பிறப்பினொடு வளர்தல்பருத் தல்குறைதல்,
ஒருங்கலுமெய்க் கென்றதனை யோறுத்திருப்பா ரென்ற
வரோ. (94)

(இ—ள்.) வரும் - (கர்ம வசத்தால்) வரக் கூடிய, கருவு - (மாதாவின்) கர்ப்பத்தி னின்றும், பிறப்பு - ஜநித்தலும், இருத்தல் - உள வாதலும் (அல்லது, நிலைத்தலும்), வளர்தல் (உம்) - விருத்தி யாதலும், பருத்தல் (உம்) - தூல மாதலும் (பெரி தாதலும்), குறைதல் (உம்) - சுருங்குதலும் (தேய்தல், அல்லது, சிறுத்தலும்), ஒருங்கலும் - நாச மடைதலும் (ஆகிய ஆறு விகாரமும்), மெய்க்கு - (தூல) சரீரத்திற்கு, என்று - என (க் கருதி), அதனை - அச் சட் பாவ விகாரங்களை, ஒறுத்து இருப்பார் - (ஜீவன் முத்தர்கள் தமக்கு இல்லை எனக் கடிந்து, அல்லது) நீக்கி இருப்பர், என்றவரோ - என அநுக்கிரகஞ் செய்த பகவானே (நீர்), (எ-று).

இன் - அசை. அதனை - பன்மையில் ஒருமை மயக்கம்.

ஒருங்கலும் - உம் - என்னும் எண் ணிடைச் சொல் கடை நிலைத் தீவகம். பிறப்பு இருக்கு மாயின், வளர்தல் முதலிய ஏனை விகாரங்கள் இருக்க முடியும். அஃ தில்லையேல், ஏனை விகாரங் களும் இருத்தல் முடியாது. இத் தகைய விசேடத்தை யுணர்த்தப், "பிறப்பினை", "ஒடு" என்னு மிடைச் சொற் கொடுத்துப் பிரித்தார்.

சட் பாவ விகாரங்கள் - 1. பிறத்தல், 2. இருத்தல், 3. வளர்தல், 4. பருத்தல், 5. குறைதல், 6. ஒருங்கல், என்பன வாம்.

1. பிறத்தல் - பிராரப்த கர்மத்தினுல் முற் சரீரம் நீங்க வேறு சரீரத்தினை ஏற்றல்.

2. இருத்தல் - உற்பத்திக்குப் பின் "இருக்கிறது" என்னும் வியவகாரத்திற்கு ஏது வாய தர்மம்.

3. வளர்தல் - அந்நாதிகளினுல் விருத்தி யாதல்.

4. பருத்தல் - மெலிவு நீங்கித் தூலித்தல்.

5. குறைதல் - தூலத் தன்மை நீங்கி மெலிதல், அல்லது, தேய்தல்.

6. ஒருங்கல் - பிராரப்த ஒழிவால் முன் ஏற்ற சரீரத்தின் நீக்கம், அல்லது, நாசம்.

பகவற் கீதை (தமிழ் 2-23 கவி)

"ஊறுபட வொன்றினுளே பிறத்தல்பிறந் துளவாதல்,
வேறுபட வளர்தல்வளர்ந் தயலொன்ருய் விளைந்தமைதன்,
மாறுபடத் தேய்தலற மாய்தலென வருகின்ற,
ஆறியல்பு முடம்பன்றி யறிவடையா வாதலினுல்." என்னும்

முதல் நூல் கொண்டு உணர்க.

வராஹ உபநிஷத்தில் ஷட் பாவ விகாரம், கீழ்க் கண்ட வாறு கூறப்பட்டிருக்கின்றது.

1. ஜந்ம (பிறத்தல்) விகாரம் - இல்லாதிருந்தும் உண்டாவது, ஜந்ம விகாரம் ஆம். அல்லது, தன் உபாதாந காரணத்தில் முதற் க்ஷண சம்பந்தம், ஜந்ம விகாரம் ஆம். அல்லது, தனது



சத்தையோடு முதற் க்ஷண சம்பந்தம், ஜந்ம விகாரம் ஆம். முற் சரீர சையோகத்தின் நாசம் உண்டான பின் பிராரப்த கர்மத்தினுல் அடைந்த பின் சரீரத்தின் சையோகம், ஜந்மம் ஆம். அல்லது, காரியம் காரண ரூபத்தினுல் சூக்கும ரூப மாக நிலைத்திருப்பினும், நாம ரூப மாக வெளிப்பட்டுத் தோன்றுதல், ஜந்மம் ஆம்.

2. அஸ்தி (இருத்தல்) விகாரம் - உத்பத்தி க்ஷணத்திற்குப் பின் "இருக்கிறது" என்னும் வியவகாரத்துக்குக் காரண மாகிய தர்மம் யாது, காரண வாயி லாய்க் காரியத்தில் உண்டாகின்றதோ, அது, அஸ்தி ரூப விகாரம் ஆம். அல்லது, சத்தா ரூப ஜாதி, அஸ்தி என்னும் விகாரம் ஆம். அதிஷ்டாந ரூப சத் பிரஹ்மத்தின் சம்சர்க்க அத்தியாசத்தினுல், பிரபஞ்சத்தின் மாயையின் வாயி லாகச் சத்தா ஜாதி உண்டாகுதலின்.

3. விருத்தி (பருத்தல்) விகாரம் - க்ஷீராதி அந்ந பாநாதி ஆகாரங்களினுல், ஒவ் வொரு நாளும் சரீரத்தின் விருத்தி, (பருத்தல்) விருத்தி என்னும் விகாரம் ஆம்.

4. பரிணும (வளர்தல்) விகாரம் - பால கௌமார யௌவந வார்த்தைக்கிய முதலிய அவஸ்தா பேதத்தினுல், சரீரத்தின் பரிணும ரூப வேறு அவஸ்தையின் அடைவு, பரிணுமம் (வளர்தல்) என்னும் விகாரம் ஆம்.

5. அபக்ஷய (குறைதல்) விகாரம் - ரோகாதிகளால் சரீரத்தின் மலிநத் தன்மையும், மெலிவும், உண்டாதல், அபக்ஷயம் (குறைதல்) என்னும் விகாரம் ஆம்.

6. நாச (மாய்தல்) விகாரம் - பிராரப்த போகம் க்ஷயம் ஆன பின், தூல சரீரத்தினின்றும் லிங்க சரீரம் வேறு கர்மத்தினுல்

உண்டாய பல போகத்தின் பொருட்டு, வெளிக் கிளம்பல், நாசம் (மாய்தல்) என்னும் விகாரம் ஆம்.

முத்கல உபநிஷத்தில் அஸ்தி விகாரத்துக்குப் பதி லாகப் பிரியத்துவ விகாரங் கூறப்பட்டிருக்கின்றது.

பிறத்தல், இருத்தல், விருத்தியாதல், பரிணமித்தல், இளைத்தல், நாச மாதல் என்று, பகவற் கீதையின் இரண்டாம் அத்தியாயம் 20-வது சுலோகம், கவி 23ல் சொல்லியபடியே இங்கும் கூறியிருக்கின்றனர் என உணர்க.

(94)

பார்ப்பதுவுங் கேட்பதுவும் பகர்வதுவுஞ் செல்வதுவும்,
ஏற்பதுவுங் கரணதன்ம மெனத்துணிவா ரென்றவரோ. (95)

(இ—ள்.) பார்ப்பதுவும் - (சக்ஷுரிந்திரியத்தினால், ரூபத்தினைக்) காண்டலும், கேட்பதுவும் - (சுரோத்திரேந்திரியத்தினால், சப்தத்தினைக்) கேட்டலும், பகர்வதுவும் - (வாக் கிந்திரியத்தினால், நாமத்தினைக்) கூறுவதும், செல்வதுவும் - (பாதேந்திரியத்தினால்,) நடத்தலும், ஏற்பதுவும் - (பாணீந்திரியத்தினால்,) வாங்குதலும் (ஆகிய யாவும்), கரண - ஞானேந்திரிய கர்மேந்திரியங்களின் தன்மம் - தருமங்கள், என - என்று, துணிவார் - (ஜீவந் முத்தர்) நிச்சயஞ் செய்வார், என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

உம்மைகள் எண்ணுப் பொருளன.

பார்ப்பதுவும் என்ப தாதியவற்றில், குற்றிய லுகரம், 'உம்' என்னும் உயிர் முதன் மொழி வந்த போது, "உயிர் வரி னுக் குறள்" என்ற சிறப்புச் சூத்திரப்படி ஓடாது, "இ ஈ ஐ வழி" என்னும் பொதுச் சூத்திர விதிப்படி, வகர உடம்படு மெய் பெற்றமை யறிக.



ஜீவந் முத்த ரிலக்கணத்தினை,

பகவற் கீதை (சுலோகம் 14-23) (தமிழ் 14-20 கவி)

"ஆய்ரொது மலன்போற் குணங்களோ டிருந்தே
யவற்றினாற் சலித்திடா னன்றே." எனவும்,

(சுலோகம் - 3-28) (தமிழ் 3-15 கவி)

"மெய்வகை தனக்கும் புலன்கட்கு முள்ள
வேறுபாட் டினைமிக வறிந்தோன்,
ஐவகை யியற்கைப் புலன்களே பொறியுற்
றழுந்துகின் றனவென வசங்கான்." எனவும்,

(சுலோகம் 2-58, 59) (தமிழ் 2-50 கவி)

"ஆமைதன் னுறுப்போ ரைந்துந்
தன்னுளே யடக்கு மாபோல்,
தீமைசெய் புலன்க ளைந்துந்
தன்னுளே செறியச் சேர்த்தி,
வாய்மையு ணிகழு மின்னே
வழுத்தவும் படுகின் றானால்." எனவும்,

கூறுதல் கொண்டு உணர்க.

(95)

பசிதாக முயிர்க்கெனவே பயந்துக்கஞ் சுகங்காமம்,
வசிகோப மதிக்கெனவே மகிழ்ந்திருப்பா ரென்றவரோ. (96)

(இ—ள்.) பசி - பசியும் (உதராக்கினி சாந்திக் கான உணவு வேட்கையும்), தாகம் - தாகமும் (நீர் வேட்கையும்), உயிர்க்கே - பிராணனுக்கே (தமக் கில்லை), என - என்றும், பயம் - அச்சமும், துக்கம் - துன்பமும், சுகம் - இன்பமும், காமம் - ஆசையும், வசி - குற்றம் (பொருந்திய), கோபம் - சினமும், மதிக்கே - அந்தக்

காரணத்திற்கே (தமக் கில்லை), என - என்றும் (கருதி), மகிழ்ந்து - சந்தோஷித்து, இருப்பார் - (ஜீவன் முத்தர்) இருப்பார், என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

ஏ - இரண்டும் பிரிநிலையும், தேற்றமு மாம்; அவை பிரித்துக் கூட்டப்பட்டன. (96)

[கூறப்படும் உபமாநங்களின் இயல்பு (குணங்) களினை யுடையவர் ஜீவன் முக்தர் என்பதனால், இப் பாட்டி லிருந்து 97, 98, 99, 100 நான்கு பாட்டுக் களாலும், ஜீவன் முக்தர் குணங் கூறுகின்றார். ஆனால், வசநங் கூறப்பட வில்லை; அதனை, வருவித்து உரைத்துக் கொள்ளல் வேண்டும் எனக் கருதிக் கூறுகின்றார்.]

வீடுந்தா ரமுமுறவு மேவியென்று மிருந்தாலு,
நீடுந்தா மரையிலைநீர் நிகராவா ரேன்றவரோ. (97)

(இ—ள்.) வீடும் - மனையையும், தாரம் உம் - மனைவியையும், உறவும் - சுற்றத்தாரையும்; என்றும் - சதா காலமும் (எப்போதும்), மேவி - (ஜீவன் முத்தர்கள்) பொருந்தி, இருந்தாலும் - இருந்த போதிலும், நீடும் - விரிந்த, தாமரை இலை - தாமரை இலையி னுள்ள, நீர் - ஜலம், நிகர் - (அதனிடத்திலிருந்தும், அதனில் பற்றுறா திருத்தல்) போல், ஆவார் - (அவற்றில் பற்றுறா திருப்பவர்) ஆவர், என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

இருந்தாலும் என்ற உம்மை இழிவு சிறப்பு.

வீடும், தாரமும், உறவும் என்பவற்றி னுள்ள உம்மைகள் எண்ணுப் பொருளன. என்றும் - உம் - முற்று.



துணைப் பிரகாரம்:-

இதனை, கமல பத்ர (தாமரை இலை) உதக (நீர்) நியாயம் என்பர். கமலம் என்பது தாமரைக்குப் பெயர் ஆம். பத்ரம் என்பது இலைக்குப் பெயர் ஆம். உதகம் என்பது நீருக்குப் பெயர் ஆம். தாமரை இலையில் நீர் ஒட்டியும், ஒட்டாமலும், இருப்பது போல, ஞானிகள் தார புத்ர தந ஆதிகளோடு பொருந்தி யிருந்தும், அவற்றில் அபிமாந ரூபப் பற் றற்றும், அவற்றினால் உண்டாம் லாப நஷ்டங்களில் பற்றாதும் இருப்பார்கள் என்ப தாம். (97)

பற்றிடுங்கா யமுந்தானும் பன்னாளொன் றாயினும்பின்,
உற்றபுளி யம்பழமு மோடுமொப்பா ரேன்றவரோ. (98)

(இ—ள்.) பற்றிடும் - (கர்மாதீந மாகப்) பொருந்தும், காயமும் - சரீரமும், தானும் - (ஆத்மா வாகிய) தாமும், பல் நாள் - பல காலம் (அதாவது, அஞ்ஞாந காலத்தில், அது பிறந்தது முதல் ஞாநம் வரும் வரை), ஒன் றாயினும் - ஐக்கியமாயிருப்பினும் (அதாவது, பிரிவுபடுத்த முடியாமல் ஏக மாகப் பிராந்திஜ தாதாத்மியத்தால் இயைந்து விளங்கினும்), பின் - (ஞாநம் வந்த) பின்னர், உற்ற - (பிஞ்சிலே பிரிவுபடாமல் ஐக்கிய முற் றிருந்து, பின் முதிர்தலைப்) பொருந்திய (கனிவு பொருந்திய), புளியம் பழமும் - புளியம் பழமும், ஓடும் - (அதன்) தோடும், ஒப்பார் - (முன் னுள்ள இயைபு நீங்கி வேறு பட்டு விளங்குதல்) போல (அஞ்ஞாந காலத்திய பிராந்திஜ தாதாத்மிய சம்பந்தம் நீங்கித் தேகத்தினுக்கு வேறுபட்டு விளங்குவார் ஜீவன் முத்தர்), என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

ஒன்றாயினும் என்ற உம்மை இழிவு சிறப்பு.

காயமும், தானும், பழமும், ஓடும் என்புழி - உம்மைகள் எண்ணுப் பொருளன.

வருவித்தன வெல்லாம் இசை யெச்சத்தா லாம்.

துணைப் பிரகாரம்:-

இதனை, திந்திரிணி பல (புளியம் பழ) சர்ம (தோல்) நியாயம் என்பர். திந்திட பல, திந்திலீ பல, திந்திரிணி - திந்திட - திந்திலீ என்பது புளிக்குப் பெய ராம். பலம் என்பது பழத்துக்குப் பெயர் ஆம். சர்மம் என்பது ஓடாகிய தோலுக்குப் பெயர் ஆம். புளியம் பழம் ஓட்டில் ஒட்டா து, கூட இருப்பது போல, ஞாநிகள், சரீராதிகளோடு கூடி யிருப்பினும், சம்பந்தம் இன்றி யிருப்பவர்கள் ஆவார்கள் என்பது ஆம். (98)

கூறுமுல கியற்கையுடன் கூடினுமெய்ஞ் ஞாநம்வந்தோர்,
சேறும்பிள்ளைப் பூச்சியும்போற் றிரிவார்கா ணென்றவரோ **(99)**

(இ—ள்.) கூறும் - (அசுத்தம், துக்கம், அநித்தம் என்று) சொல்லாநின்ற, உலக இயற்கை உடன் - பிரபஞ்ச ஸ்வபாவத்தோடு, கூடினும் - பொருந்தி யிருப்பினும், மெய் ஞாநம் - (திட அபரோக்ஷ) தத்வ ஞாநம், வந்தோர் - கைவரப் பெற்ற பெரியோர், சேறும் - (சம்பந்தித்தவற்றிற் படியக் கூடிய) அளறும், பிள்ளைப் பூச்சியும் - (அதன்கண் அவ் வளறு படியாமற் சஞ்சரித்தல் செய்யும்) பிள்ளைப் பூச்சியினையும், போல் - போல, திரிவார் - (இவ் வுலகின்கண் இவ் வுலக இயற்கையோடு பற்றின்றிச்) சஞ்சரிப்பர், என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

கூடினும் என்ற உம்மை இழிவு சிறப்பு. காண் - முன் னிலை அசை.



சேறும், பூச்சியும் - உம் - எண்ணுப் பொருளன.

இசை யெச்சத்தால் வேண்டிய சொற்கள் வருவிக்கப்பட்டன.

துணைப் பிரகாரம்:

இதனை, பங்க (சேறு) கீட (பிள்ளைப் பூச்சி) நியாயம் என்பர். பங்கம் என்பது சேற்றுக்குப் பெயர் ஆம். கீடம் என்பது பிள்ளைப் பூச்சிக்குப் பெயர் ஆம். சேற்றில் பிள்ளைப் பூச்சி சம்பந்தம் இன்றி யிருப்பது போல், ஞாநிகள் உலக இயற்கையில் பற் றின்றி யிருப் பார்கள் என்ப தாம். (99)

ததியூடு கடைந்தவெண்ணெய் தான்மோரிற் கிடப்பதுபோல்,
மதியோடு கூடினும்பின் மயங்கார்கா ணென்றவரோ. **(100)**

(இ—ள்.) ததி யூடு - (அபேத மாகக் கலந்து கிடந்த) தயிரினிடத்து, கடைந்த - மதநஞ் செய்து எடுக்கப் பட்ட, வெண்ணெய் - நவநீதம், மோரில் - மோரி னிடத்து (அதாவது கடையப் பட்ட அத் தயிரினிடத்து), கிடப்பது - (பின்னர்ச் சேர்க்கப் படினும் அத்னேடு கலவாது அதன்கண் வேறுபட்டுக்) கிடத்தல், போல் - போல, பின் - (ஞாநம் வந்த) பின்னர், மதியோடு - (ஞாநிகள்) அந்தக் கரண விவகாரத்தோடு, கூடினும் - சேரினும், மயங்கார் - (பிராந்திஜ தாதாத்மிய மாகிய) மயக்கத்தினை அடைய மாட்டார்கள், என்றவரோ - என அருளிச் செய்த பகவானே (நீர்), (எ-று).

தான் - காண் - அசை நிலைகள்.

கூடினும் என்ற உம்மை இழிவு சிறப்பு. ததியூடு - ஊடு - ஏழ னுருபு.

குணப் பிரகாரம்:-

இதனை, தக்ர (மோர்) நவநீத (வெண் ணெய்) நியாயம் என்பர். தக்ரம் என்பது மோருக்குப் பெயர் ஆம். நவநீதம் என்பது வெண் ணெய்க்குப் பெயர் ஆம். மோரில் வெண் ணெய் கூடி யிருந்தும், அதிற் கலவா திருப்பது போல, ஞானிகள் அந்தக் கரண தர்மங்களோடு கூடி யிருப்பினும், அவற்றின் சம்பந்தம் இன்றி யிருப்பார்கள். அதாவது, நான் கர்த்தா, போக்தா, என்று மயக்கத்தினை அடைய மாட்டார்கள் என்ப தாம்.

வசநப் பிரகாரம்:- பிரத்திய கபின்ந பரமாத்மாவைப் பற்றியே பிறரிடம் கூறல், அதனைத் துதித்தல் (புகழ்தல்) ஆம். (100)

அருச்சுநன்றன் பொருட்டாக வனைவருக்கு ஞானம்வரப்,
பொருந்தியதே சிகவடிவாம் புண்ணியரே கண்வளரீர். (101)

(இ—ள்.) அருச்சநன் - அர்ஜுநனது, பொருட்டு ஆக - நிமித்த மாக, அனைவருக்கும் - சகல ஜிஞ்ஞாசுகளுக்கும், ஞானம் வர - ஞானம் வரும்படி, பொருந்திய - உபதேசிப்பான் அமைந்த, தேசிக வடிவு ஆம் - ஆசார்ய ஸ்வரூப மாகிய, புண்ணியரே - புண்ணிய ஸ்வரூபரே, கண்வளரீர் - (நீர்) நித்திரை செய்தருள்வீர், (எ-று).

தன் - சாரியை. புண்ணியரே - விளி.

அனைவருக்கும் - உம் - முற்று.

கண்வளர்தல் நித்திரை செய்தலுக்குப் பெயர் ஆம். (101)

ஆயர்குல மாத ரளவிலோ ரைப்புணர்ந்துந்,
தூயபதி னாறு யிரவருடன் றோய்ந்திருந்தும். (102)

பரமமு னிவர்முன்னே பரிச்சித்தைத் தீண்டியன்று,
பிரமசரி யஞ்சேலுத்தும் பேரோளியே கண்வளரீர். (103)



(இ—ள்.) ஆயர் - இடையர், குலம் - குலத்தி லுள்ள, மாதர் அளவிலோரை - எண் ணிறந்த ஸ்திரீகளை, புணர்ந்தும் - சேர்ந்தும், தூய - பரிசுத்த மான, பதின் ஆறாயிரவர் உடன் - பதி னாறாயிரம் தேவ ஸ்திரீக ளோடு, தோய்ந் திருந்தும் - பொருந்தி யிருந்தும், பரம - மே லான, முனிவர் - ஞானிகள், முன் - சந்நிதியில், பரிச்சித்தை - பரிச்சித்து மஹா ராஜாவை, தீண்டி - (கையால்) ஸ்பரிசித்து, அன்று - அக்கால், பிரமசரியம் - (நான் நித்திய பிரஹ்மசாரி என்று) பிரஹ்மச்சரிய ஆசிரமத்தினை, செலுத்தும் - நடாத்திய, பேர் ஒளியே - பூரணப் பிரகாசரே, கண்வளரீர் - (நீர்) நித்திரை செய்தருள்வீர், (எ-று).

ஏ - அசை. பே ரொளியே - விளி.

"புணர்ந்தும்", "தோய்ந் திருந்தும்" என்ற உம்மைகள் இழிவு சிறப்பு.

அஞ்ஞ வதைப் பரணி, (12-வது லீலை. கவி 5.)

"ஆயர் தம்மனையி னோர்வடிவு கொண்டு பதினா
றாயி ரந்திரும டந்தையரு டன்புணரினும்,
தூய பிரமச்சர்ய மத்தில்வழு வாம லொழுகுஞ்
சுத்த ஞானசரி தத்தியல்பு சொன்ன துணிவும்"

என்று தத்துவ ராய ஸ்வாமிகளும் இக் கருத்தை விளக்கிக் கூறி யிருக்கின் றனர் என உணர்க.

நரகாசுரன், லக்ஷம் ஸ்திரீகளைக் கல்யாணம் செய்வதற்கு இச்சித்துத், தேவ ஸ்திரீகள் பதி னாறுயிரத்து அறு நூறு பேர்களைச் சிறை யாகக் கொண்டு வந்ததைக் கேட்ட ஸ்ரீ பகவான், நரகாசுரனை வதம் செய்து, அவர்கள் வேண்டு கோளுக் கிணங்கி, அவர்களை விவாகம் செய்து கொண்டு, அவர்களோடு கூடி அநுபவித்த விஷயம், பாகவதம் 10-வது ஸ்கந்தம் 59-வது அத்தியாயத்தில் கூறப்பட்டிருத்தலை உணர்க. (102 + 103)

[நூற்கற்போர் பயன் கூறுகின்ருர்.]

ஆதிமூ லம்விசயற் காதிமறை யின்பொருளை
ஓதியு ணர்த்துமிந்த வுண்மைதனைக் - காதலுற்றுக்
கற்ருேருங் கேட்டோருங் காசினியில் வாழ்ந்துமுத்தி
பெற்ருேர்கண் முத்தர்பெறும் பேறு. (104)

**கீதா சாரத் தாலாட்டு முற்றுப் பெற்றது.**

(இ—ள்.) ஆதி மூலம் - ஆதி காரண ஞகிய பகவான், விசயற்கு - அர்ஜுநனுக்கு, ஆதி - முதன்மை யான, மறையின் - வேதத்தின், பொருளை - அர்த்தத்தினை, ஓதி - உபதேசித்து, உணர்த்தும் - அறிவிக்கும், இந்த உண்மை தனை - இவ் வுண்மை யாகிய கீதா சாரத்தினை, காதல் - விருப்பம், உற்று - பொருந்தி, கற்ருேரும் - படித்தவரும், கேட்டோரும் - (ஆசாரிய ரிடம்) சிரவணஞ் செய்தவரும், காசினியில் - இவ் வுலகத்தில், வாழ்ந்து - (அநேக காலம் புத்திர பௌத்திர சம்பத்தோடு சுக மாக) வாழ்ந்து, முத்தர் - ஞாநிகள், பெறும் - அடைகின்ற, பேறு - பிரயோசந மாகிய, முத்தி - மோக்ஷத்தினை, பெற்ருேர்கள் - அடைந்தவர்களே யாவர், (எ-று).

'உண்மைதனை' என்பதில் - தன் - சாரியை. 'மறையின்' இன் - சாரியை. "கற்ருேரும், கேட்டோரும்" என்ற உம்மைகள் எண்ணுப் பொருளன.

ஆதி மூலம்: காரணம். அபிந்ந நிமித்த உபாதாந காரணம். பகவான் ஜகத்தை உண்டுபண்ணுவதில், மாயா ரூப சரீரப் பிரதாநத்தால் உபாதாந காரணனும், சேதநப் பிரதாநத்தால் நிமித்த காரணனும், உலண்டுப் பூச்சியின் உபமாநத்தினுல் ஆகின்றனன். சிலர் கூறும், குட குயவனைப் போன்று, உபாதாந காரணமும், நிமித்த காரணமும் வேறு என்னும் பிந்ந நிமித்த உபாதாந காரணம் அன்று என்பதை உணர்ந்து கொள்க. (104)

**கீதா சாரத் தாலாட்டு, லகு சந்திரிகை உரை முற்றுப் பெற்றது.**

உ
சிவமயம்.

## கீதா சாரத் தாலாட்டு செய்யுள் 106.

முதற் குறிப்பு அகராதி.

ஆகச் செய்யுள் 106.

25. மகா ராஜத் துறவு - மகப் பிரசாதினி உரை 2—0. 26. கைவல்ய நவநீதம் மூலம் கவி (288) 0—9
27. பஞ்ச தசி கவி (300) 0–10. 28. பக்தி (வைராக்ய) சதகம் - பத வுரை, பொழிப் புரை. 1—0
29. கீதா சாரத் தாலாட்டு, லகு சந்திரிகை உரை 2—0. 30. சீதா சரித் சாகரம் வசனம். 2—4
31. மடங்களின் உத்பத்தியும், தற்போது உள்ள நிலைமையும் வசனம். 0—2

**அச்சாக வேண்டியன.**

1. பக்திப் பிரகாசம் வசனம். ஹிந்தி மொழி பெயர்ப்பு.
2. தர்க்க சங்கிரம் - தீபிகை உரை. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
3. சப்த பதார்த்தி - தர்க்கம், வசனம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
4. காறுத சித்தாந்த சந்திரிகை - தர்க்கம், வசனம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
5. பேத திக்காரம் - சத் கிரியை உரை. வேதாந்தம் சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
6. மூர்க்க சதகம் - பத வுரை. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
7. பிரபோத சுதாகரம் - பத வுரை. வேதாந்தம் சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
8. கணேச கவசம் - பத வுரை. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. 9. கணேச கவசம் தமிழ்க் கவி உரை.
10. விவேக சூடாமணி - பத வுரை. சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
11. க்திர் பருவத ஜநன மரண ரஹஸ்யம், வசனம். 12. சிவ சங்கராவதாரம் சுலோகம் உரை.
13. சமாதி விதி வசனம். 14. சந்யாச விதி வசனம். 15. காசிகாநந்த விஜயம் வசனம்.
16. பகவற் கீதை 15-வது அத்தியாயம். சம்ஸ்கிருதம் பத வுரை, தமிழ்க் கவி உரை.
17. சாகா ஜீவ யாதக கட்டளை. சத்யார்த்தப் பிரகாசிகை உரை.
18. கீதா சாரத் தாலாட்டு, குறிப்பு உரை. 19. சசி வர்ண போதம் - பதார்த்த பாஸ்கரன் உரை.
20. வேதாந்த சூடாமணி - சந்தோஷ தாயினி உரை. 21. பட்டினத்தார் பாடல் உரை.
22. சங்கர விஜய விலாசம் வசனம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு.
23. கைவல்ய நவநீதம் - அருணாசல ஞான தேசிகர், பத சார உரை.
24. வீர சேகர ஞான தேசிக சரிதம், கவி 1500.
25. சித்தாந்த லேச சார சங்கிரகம், வசனம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு (56 மத விசாரம்).

உ சிவமயம்.

# இராம நாத புரம் ஜில்லா, திருப் பூ வண மடம்,

## ஸ்ரீ காசிகாநந்த ஞாநாசார்ய ஸ்வாமிகள் இயற்றிய நூல்கள், பதிப்பித்தன.

| | | |
|---|---|---|
| 1. | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா வசகம். ஹிந்தி மொழி பெயர்ப்பு. ரூ. | 2—8 |
| 2. | விசார சாகரம் வசகம். ஹிந்தி மொழி பெயர்ப்பு. | 2—4 |
| 3. | வியாச தாத்பர்ய நிர்ணயம் வசகம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—8 |
| 4. | வேதாந்த சித்தாந்த முக்தாவலி வசகம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—8 |
| 5. | நைஷ்கர்ம்ய சித்தி வசகம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—8 |
| 6. | வேதாந்த பரிபாஷை வசகம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—7 |
| 7. | ஸ்வாராஜ்ய சித்தி வசகம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—4 |
| 8. | வேதாந்த சஞ்ஞா வசகம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—2 |
| 9. | ஹரி மீடே, ஹரி தத்வ முக்தாவலி வசகம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0-12 |
| 10. | மண்டல பிராஹ்மண உபநிஷத்-ராஜ யோக பாஷ்யம் வசகம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—4 |
| 11. | ஈசாவாஸ்ய உபநிஷத்-சங்கர பாஷ்யம் வசகம். சம்ஸ்கிருத மொழி பெயர்ப்பு. | 0—4 |
| 12. | தாந்திரீக த்வைத சைவ கண்டநம் (குட்டுக் கோல்-கட்டாரி-புச்சம்). | 0—1 |
| 13. | பக்தி (வைராக்ய) சதகத் தோத்திரம், தோத்திரப் பிரகாசம் என்னும் பத உரை. | 0—3 |
| 14. | வைராக்ய தீபம் - பத உரை, பொழிப் புரை. | 0—8 |
| 15. | கீதாசாரம் - பால போதினி உரை 0—8. 16. வேதாந்த சாஸ்திர ரத்நாவலி (9 சேர்ந்தது) | 3—0 |
| 17. | தோத் திரயம் (பகவற் கீதை ஈசுவர கீதை பிரம்ம கீதை). | 1—4 |
| 18. | விவேக சூடாமணி - அஞ்சு வதைப் பரணி கவி. | 1—0 |
| 19 | வாசிட்டம் (கவி 2055) 2—4. 20. ஸ்தோத்திர ரச மஞ்சரி கவி 160 உடையது. | 0—4 |
| 21. | அத்வைதிகட்கும், அதிட்டானத்தி விருப்பவர்கட்கும் ஓர் அறிக்கை வசகம். | 0—2 |
| 22. | வட நாட்டில், ஹரித் துவாரக் கும்ப மேளாவும், தென் நாட்டில் சாதிக்கள் மேளாவும் வசகம். | 0—2 |
| 23. | சாது சங்க நிறுவல் விழாக் கூட்ட வைபவம் வசகம். | 0—2 |
| | | 1—0 |